# பாம்பே டையிங்

## பள்ளிச்சீருடைத் துணிகள்

### நிறைந்த தரம்  நிலையான வண்ணம்



- என்றும் மாறாத புதுப்பொலிவு
- துவைத்து அணிய எளிது.
- எண்ணற்ற வண்ணங்களிலும் டிசைன்களிலும் கிடைக்கிறது.

மேலும்,
பாம்பேடையிங் வழங்குகிறது
ஸ்கூல் பேக்ஸ், சாக்ஸ்
மற்றும் இத்யாதிகளை.

இப்பொழுது உங்கள் குழந்தைகள் 100% திருப்தியடைகிறது.

**Free Gifts**

ஒரு இன்சுலேட்டட் லஞ்ச் பாக்ஸ் இலவசம்
ரூபாய் 500/ மதிப்புள்ள சீருடைத் துணிகள்
வாங்கும்பொழுது.





ஒரு மூன்றடுக்கு இன்சுலேட்டட் லஞ்ச் பாக்ஸ் இலவசம்
ரூபாய் 750/ மதிப்புள்ள சீருடைத் துணி கள்
வாங்கும்பொழுது

இச்சலுகை ஜூன் 15ம் தேதி வரை தமிழகத்தில் மட்டும்.

# மோனிஷா என் மோனலிசா

பிரும்மாண்டமான செட்டுகள், கம்ப்யூட்டர் கிராபிக்ஸ் முறையில் படமாக்கப்பட்ட ஒரு பாடல் காட்சி (மொத்தம் பதினோரு பாடல்கள்!) இவற்றுக்கு மத்தியில், படத்தின் மொத்த ரீல்களையும் ஃபில்-அப் பண்ண கொஞ்சம் கதை.

மோனிஷா ஒரு பிரபலமான பாப் பாடகி. இவருக்குக் காதல் பிடிக்கும்; காதலிப்பது பிடிக்காது! மோனிஷாவை விரட்டி விரட்டிக் காதலிக்கிறார் கதாநாயகன். மோனிஷாவுக்கே தெரியாமல் அவளுக்குக் கையில் முத்தம் கொடுக்கிறார்(!), அவளது காரில் கூடப் பிரயாணம் செய்கிறார்(!!) கோயிலில் அவள் நெற்றியில் பொட்டு வைக்கிறார்(!!!) காதல் கைகூடும் நேரத்தில் விபத்தில் சிக்கி இறந்து போகிறார். (ஆக, அமரக் காதல்)



'காதல்தாசன்' என்ற சிறப்புத் தோற்றத்தில் தோன்றும் டி. ராஜேந்தர் அவ்வப்போது தத்துவமாக உதிர்த்து விட்டுப் போகிறார். (காதல் என்பது மூன்றெழுத்து. அது அமைவது என்பது தலையெழுத்து. பெண்கள் போய்விடுவர் கைவிரித்து. ஆண்கள்தான் அலைவர் அதை நினைத்து.)

க்ளைமாக்ஸில், படத்தின் மெஸேஜாக டி. ராஜேந்தர் சொல்லும் தத்துவம் :

"ஒரு துணியைத் தொடர்ந்து நனைத்துக் கொண்டிருந்தால் அது கந்தலாகிறது; ஒருவரைப் பற்றித் தொடர்ந்து நினைத்துக் கொண்டிருந்தால் அது காதலாகிறது."

நான்கு மொழிகளில் ஒரே நேரத்தில் உருவாக்கப்பட்ட படம் என்பதால், தியேட்டரை விட்டு வெளிவருகையில் தமிழ்ப் படம் பார்த்த உணர்வே இல்லை. படத்தில் தோன்றும் எல்லாப் பெண்களும், ஆபாசமாக உடுத்தி வந்து விட்டுப் போகிறார்கள். எல்லாக் காட்சிகளிலும் நடிகைகள் சில்க் ஸ்மிதா பாணியில் கிறக்கமாகவே வசனம் பேசுகிறார்கள்.

'சினிமாத்தனம்' என்றாலும், நம்ப முடியாத, அலுப்புத் தட்டுகிற, அரைத்த மாவையே திரும்ப அரைக்கிற காதல் கதை. இதைக் கூட மன்னிக்கலாம். ஆனால்... படத்தில் ஏராளம் உள்ளது பச்சை.

B&C யைக் கவருவதுதான் ராஜேந்தரின் இச்சை.

அதற்காகப் பெண்களை இப்படியா செய்வது கொச்சை?

சென்ஸார் உறுப்பினர்களுக்குமா இல்லை லஜ்ஜை?

— கே.பி.எஸ்.

கல்கி இண்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

வாஜ்பாய் அரசின் மீதான நம்பிக்கை வாக்கெடுப்புக்கு சிறிது நேரம் முன்பாக ஒரு பெரிய சர்ச்சை நடந்தது. ஒரு பாராளுமன்ற உறுப்பினர் என்கிற முறையில், ஒரிசா மாநில முதலமைச்சர் பொறுப்பில் இருக்கிற கிரிதர் கோமாங், வாக்களிக்கலாமா? கூடாதா? என்று பா.ஜ.க.வினரும் எதிர்க் கட்சியினரும் சுமார் ஒரு மணி நேரம் வாதிட்டனர்.

சபாநாயகர் பாலயோகி, முடிவு செய்வதை சம்பந்தப்பட்ட உறுப்பினரின் மனச்சாட்சிக்கே விட்டு விடுவதாகத் தீர்ப்பு அளித்தார். கிரிதர் கோமாங் வாக்களிக்காமல் இருந்திருந்தால் பா.ஜ.க. தோற்றிருக்காது.

கடந்த வாரம் திருப்பதி செல்லும் வழியில் சென்னை வந்திருந்த கோமாங் நமக்களித்த

— ஒரிசா முதல்வர் கிரிதர் கோமங் Exclusive பேட்டி!

# "மனச்சாட்சிப்படிதான்

பிரத்தியேகப் பேட்டி:

**"வாஜ்பாய் அரசின் மீதான நம்பிக்கை வாக்கெடுப்பில் கலந்து கொள்வதற்காக, அன்று காலை பாராளுமன்றத்துக்கு வந்தபோது, நீங்கள் ஒரு சர்ச்சைக்குக் காரணமாகப் போகிறீர்கள் என்று நினைத்தீர்களா?**

**கிரிதர் கோமாங்:** நான் ஒரிசா மாநிலத்திலிருந்து, லோக் சபாவுக்கு மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட எம்.பி. இடையில் வந்ததுதானே இந்த முதலமைச்சர் பதவி? பாராளுமன்றத்தில், பதிமூன்று மாத கால அரசு, நம்பிக்கை வாக்கு கோருகிறபோது, நான் அதில் கலந்துகொண்டு வோட்டுப் போட வேண்டியது எம்.பி என்ற முறையில் என்னுடைய கடமையில்லையா? என் கடமையைச் செய்ய நான் லோக்சபாவுக்கு வந்தேன். சர்ச்சையைக் கிளப்புவது என் வேலையில்லை. எனவே, என்னுடைய வாக்களிப்பு உரிமை குறித்து சர்ச்சை உருவாகும் என்று நான் எதிர்பார்க்கவில்லை.

**உங்களது வாக்குரிமை பற்றி லோக்சபாவில் விவாதம் நடந்தபோது உங்கள் மனநிலை எப்படி இருந்தது?**

**கோமாங்:** சுமார் ஒரு மணி நேரமாக அந்த விவாதம் நடந்து கொண்டிருந்தது. இரு தரப்பினரும் தம் தரப்புக்குப் பல பாராளுமன்ற விதிமுறைகளை மேற்கோள் காட்டி வாதிட்டுக் கொண்டிருந்தனர். அதில் நான் பங்கேற்க வேண்டிய அவசியமில்லை. எனவே, பேசாமல் என் இருக்கையில் அமர்ந்து, விவாதத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன். அப்போது என் மனநிலை எப்படி இருந்தது? (சில விநாடிகள் அமைதி) இந்த சர்ச்சை அவசியமில்லாதது. பேசாமல், வாக்கெடுப்பு நடத்த வேண்டியதுதானே? என்று தோன்றியது.

**உங்களுக்கு வோட்டுப் போட அனுமதி மறுக்கப்பட்டிருந்தால், உங்களுடைய**

*ரியாக்ஷன் என்னவாக இருந்திருக்கும்?*

**கோமாங்:** அந்தக் கேள்விக்கே இடமில்லை. சபாநாயகர் என்னை வோட்டுப் போட அனுமதிக்கிறவரை விவாதம் தொடர்ந்திருக்கும்.

***வோட்டுப் போடுவதா வேண்டாமா என்கிற முடிவை உங்களுடைய மனச்சாட்சிக்கே விட்டுவிடுவதாக சபா நாயகர் தீர்ப்புக் கூறுவார் என்று எதிர்பார்த்தீர்களா?***

**கோமாங்:** வாக்கெடுப்பு நடக்கிற போது, நான் நிச்சயமாக வாக்களிப்பேன் என்கிற நம்பிக்கை எனக்கு இருந்தது. நேரடியாக அனுமதி தராவிட்டாலும் இப்படி ஒரு முடிவு கிடைக்கும் என்று நான் எதிர்பார்த்தேன். காரணம், இந்த விஷயத்தில் சர்ச்சை ஏதுமில்லை.

அவரவர், ஒவ்வொருவிதமாய் பாராளுமன்ற விதிகளுக்கு விளக்கம் அளித்தார்கள். சபாநாயகர், இரு தரப்பு வாதங்களையும் கேட்டபின் தம் தீர்ப்பைச் சொன்னார். எனக்குப் பாதகமாகத் தீர்ப்பு வர வாய்ப்பே இல்லை என்பது தான் என் கருத்து.

***வோட்டுப் போடுவதா? வேண்டாமா? என்ற முடிவை உங்கள் மனச்சாட்சிக்கே விட்டபின், உங்கள் மனச்சாட்சி, வோட்டுப் போடுவது சரியில்லை என்று சொல்லவே இல்லையா?***

**கோமாங்:** இல்லை. அடிப்படையில் நான் ஒரு காங்கிரஸ்காரன். காங்கிரஸ் கட்சி, இந்த வாக்கெடுப்பில், அரசாங்கத்துக்கு எதிராக வாக்களிக்கும்படி உத்தரவு பிறப்பித்துள்ளது. இத்தகைய சூழ்நிலையில் நான் வோட்டுப் போடாமல் தவிர்ப்பது என்பது, என் கட்சிக் கட்டுப்பாட்டை மீறுவது ஆகாதா?

நான் வாக்களிக்காது இருந்திருந்தால், என் எம்.பி. பதவி பறிக்கப்பட்டிருக்குமே! அதைவிட முக்கியம் – நான் காங்கிரஸ் கட்சிக்கு துரோகம் செய்தவனாகி இருப்பேன்!

***ஒரிசா மாநில முதலமைச்சராகி, மாநில அரசிடமிருந்து சம்பளம் வாங்கியவுடன், உங்கள் எம்.பி. பதவி, தானாகவே முடிவுக்கு வந்து விடுமல்லவா?***

**கோமாங்:** நான் என்னுடைய எம்.பி பதவியை இன்னும் ராஜினாமா செய்யவில்லையே! ஆறு மாதம் வரை நான் ராஜினாமா செய்யாவிட்டால் தானாகவே அது முடிவுக்கு வந்து விடும்.

***சரி! எப்போது உங்கள் எம்.பி. பதவியை ராஜினாமா செய்யப் போகிறீர்கள்?***

**கோமாங்:** இப்போது அதற்கென்ன அவசரம்? இன்னும் நாளிருக்கிறது! பார்த்துக் கொள்ளலாம்.

***அரசாங்கத்தைக் கவிழ்த்த அந்த முக்கியமான ஒரு வோட்டைப் போட்டதற்காக நீங்கள் பெருமைப்படுகிறீர்களா? வருத்தப் படுகிறீர்களா?***

**கோமாங்:** நண்பரே! எனக்கு இருபத்தெட்டு வருட பாராளுமன்ற அனுபவம் உண்டு. வாஜ்பாய் உட்பட பல சீனியர் தலைவர்களுடன் நான் பாராளுமன்றத்தில் இருந்திருக்கிறேன். பல நம்பிக்கை வாக்கெடுப்புகளையும், நம்பிக்கையில்லாத் தீர்மானங்களையும் பார்த்துவிட்டவன். எனவே, நான் வோட்டுப் போட்டு வாஜ்பாய் அரசைக் கவிழ்த்து விட்டதாகவும் பெருமைப் பட்டுக் கொள்வது அர்த்தமில்லாதது. நான் ஒன்றும் பெரிய ஆள் இல்லை. ஒருபோதும் நான் அப்படி நினைத்துக் கொண்டதில்லை. எனக்கு ஈகோ கிடையாது. அதே நேரம் நான் போட்ட வோட்டால் தான் ஆட்சி கவிழ்ந்து விட்டதோ என்று வருத்தப்படவும் இல்லை. கட்சி இட்ட உத்தரவுக்குக் கட்டுப்பட்டு கடமையைச் செய்த உணர்வுதான் எனக்கு இருக்கிறது.

***பாராளுமன்ற ஹீரோ நீங்கள்தான் என்று கூறப்படுவது பற்றி உங்கள் கமெண்ட்?''***

**கோமாங்:** ஹீரோவெல்லாம் சினிமாவில் மட்டும்தான். அரசியலில் ஹீரோக்கள் கிடையாது!

# வோட்டுப் போட்டேன்!''

பேட்டி: **மௌலி**
படம்: **வெங்கடேஷ்**

# வந்தியத்தேவன், குந்தவை

இரு வாரங்கள் முன்பு தராசிடம் ஒரு வாசகர், திரையுலகம் மட்டும் ஏன் இன்னும் கல்கிக்கு அஞ்சலி செலுத்தும் விதமாக, அவர் படைப்புகளைத் திரைப்படமாக்க முன்வரவில்லை என்று கேட்டிருந்தார்.

ஒருவேளை அப்படியொரு காரியம் நடக்குமானால் (பொன்னியின் செல்வனோ, சிவகாமியின் சபதமோ திரைப்படமானால்) பாடல்கள் எப்படி அமையும் என்பதற்கு ஒரு (பயங்கரக்) கற்பனை இது. கல்கி கண்டிப்பாக மன்னித்து விடுவார். (நகைச்சுவையல்லவா!) அவரது ரசிகர்களும் அவசியம் மன்னிக்க வேண்டும்.




**படம்: பொன்னியின் செல்வன்**

(குந்தவையும், வந்தியத்தேவனும் சந்திக்கும் காட்சி. இது ஒரு group song)

(வ) ஓ குந்தவை, ஓ குந்தவை,
கிட்ட வந்து என் கன்னத்தில் ஒரு
'இச்' வை
ஓ குந்தவை

(கு) அட வாணர்குல ஆளு,
ஆட்டாதே உன் வாலு
மனுஷனுக்கு ரெண்டு காலு,
பீகாருக்கு ஒரு லாலு.

(கோரஸ்) சோழ நாடு சோழ நாடுதான்
ராணி நீ சூப்பர் கலருதான், இளைய
ராணி நீ சூப்பர் கலருதான்.

(கு) ராஜராஜ சோழனுக்கு நான் அக்கா,
சுந்தரசோழன் பொண்ணுன்னா
கொக்கா.

(வ) அட சிம்ரன் போல ஃபிகரு சூப்பர்
ஃபிகரு,
இவ கண்ணுல பாரு ஹண்ட்ரட் வாட்டு
பவரு.

(கோரஸ்) சோழ நாடு சோழ நாடுதான்,
ராணி நீ சூப்பர் கலருதான், இளைய
ராணி நீ சூப்பர் கலருதான்.

(வ) அட, அடம் பிடிக்காதே
வேகமாக வாநீ,
நீ வராட்டி எனக்கு இருக்கா
நந்தினி

(கு) பழுவூர் பாம்புகிட்டே போனா
அந்தக் கிழவன் சும்மா விடுவானா?
இந்த வம்பெல்லாம் உனக்கு எதுக்கு
வேணா
என்ன சும்மா அழ வைக்காதே வீணா.

(கோரஸ்) சோழ நாடு சோழ
நாடுதான்
ராணி நீ சூப்பர் கலருதான். இளைய
ராணி நீ சூப்பர் கலருதான்.

---

வ- வந்தியத்தேவன்
கு- குந்தவை

# சிவகாமி, மாமல்லன் மன்னிக்க!

**படம்: சிவகாமியின் சபதம்**

(கோரஸ்) பல்லவன் இந்த பல்லவன்
காதலில் இவன் ரொம்ப வல்லவன்

(மா) அடி வாடி சிவகாமி
உன் மனசைக் கொஞ்சம் காமி,
நானும் நீயும் சேந்தா கண்ணை
மூடும் சாமி

(சி) மாமல்லா, ஓ மாமல்லா,
உன் மனசு என்ன கல்லா,
நான் ஒரு சின்ன பொண்ணு
போடாதே என் மேலே கண்ணு

(கோரஸ்) பல்லவன் இந்த பல்லவன்
காதலில் இவன் ரொம்ப வல்லவன்

(மா) உங்கப்பா ஆயனர் ஒரு சிற்பி
என் காதலுக்கு நீதாண்டி பற்பி

(சி) அந்த கிழவனுக்கு நான் வெறும் கல்லு
எனக்கும் கல்யாணம் வேணும்னு சொல்லு

(கோரஸ்) பல்லவன் இந்த பல்லவன்
காதலில் இவன் ரொம்ப வல்லவன்

(மா) ரதியைப் போல நீயும் சூப்பர் மானு,
அட, நாந்தாண்டி உனக்கேத்த ஆணு

(சி) மானு கீனுன்னு சொல்லாதே ஆமா,
மரத்தை சுத்தி ஓடாதே மாமா... ஹேய்

(கோரஸ்) பல்லவன் இந்த பல்லவன்
காதலில் இவன் ரொம்ப வல்லவன்

(சி) என்னை வம்புக்கு இழுக்காதே
சும்மா பேசி,
படையோடு வரானாம் புலிகேசி.

(மா) எங்கப்பா இருக்கும்போது
என்ன கவலை,
வாடி அரைக்கலாம் நாம்ப
கடலை.

---

மா - மாமல்லன்
சி - சிவகாமி




• இரட்டை நிபந்தனை


• நீதியின் பிடியில்!

# சு. சுவாமியின் அடுத்த டீ பார்ட்டி எப்போது?

● எம். பாஸ்கர், திண்டுக்கல்.

***? ஜெயலலிதாவின் நடவடிக்கைகளுக்கு வெளிநாட்டு சக்திகளின் தூண்டுதலே காரணம் என்று சமதா கட்சி குற்றம் சாட்டியிருப்பது பற்றி?***

! வீட்டிலிருக்கிற 'சக்தி'யும் முக்கியக் காரணம்தான்.

● எஸ். பொன்னுசாமி, உடுமலைப்பேட்டை.

***? தலைவர்களுக்கு விழாக்களில் செங்கோல், மலர்க்கிரீடம் போன்ற காலத்துக்கு ஒவ்வாத பரிசுகள் தேவைதானா?***

! தலைவர் தங்கள் இதயத்தை ஆள்கிறவர் என்ற வகையில் தொண்டர்கள் இத்தகைய மரியாதைகள் செய்யலாம். ஆனால், அதன் மதிப்பு, உள்ளத்தில் எடைபோடத்தக்கதாக இருக்க வேண்டுமே தவிர, ரூபாய் கணக்கில் மலிவாக இருப்பது அவசியம்.

● கலை அரசு, கோவை - 14.

***? சோனியா காந்திக்கு ஆதரவு தர ஜெயலலிதா என்ன நிபந்தனைகளை விதிப்பார்?***

! வேறென்ன? 356-ஐ உபயோகிக்க வேண்டும். '58'-ஐ (வழக்குகள்!) வாபஸ் பெற வேண்டும்!

**நீங்கள் கேட்டவை — தராசு**

● க.நா. இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்.

***? லாகூர் உயர்நீதிமன்றம் பேனசீர் புட்டோவுக்கு வழங்கிய தண்டனை குறித்து...?***

! தாமதங்களைத் தவிர்த்தும் யாருக்கும் அஞ்சாமலும் தீர்ப்பு வழங்கிய பாகிஸ்தான் நீதித் துறையை நினைத்துப் பெருமைப் படுகிறேன்.

● பி.பி. சந்திரசேரன், கரூர். ❑

***? அன்று 'மதவாதக் கட்சி' என்று பேசிய கருணாநிதி இப்பொழுது பாரதீய ஜனதாவை ஆதரிக்கிறாரே? இப்போது மதவாதம் போய்விட்டதா?***

1) மதவாதத்தைத் தாம் ஆதரிப்பதாக அவர் என்றுமே சொல்லவில்லை. 2) மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு ஆட்சி அதன் முழு ஆயுள்காலத்துக்கு ஆட்சி புரிய அனுமதிக் கப்பட வேண்டும் என்று அவர் எப்போதுமே கூறிவந்துள்ளார். 3) பி.ஜே.பியின் மதவாதத்தை விடவும் ஜெயலலிதாவின் லஞ்ச ஊழல், ஆணவப் போக்கு ஆகியன நாட்டுக்கு


• அன்றும் இன்றும்...


• ரே லேட்!

ஆபத்தானவை என்று கருதுகிறார்.

● ச. தங்கமணி, சென்னை - 33.

***? அடுத்த தேர்தல் எப்போது வந்தாலும் பா.ஜ.க. முந்நூறு இடங்களைக் கைப்பற்றும் என்று அத்வானி கூறியுள்ளாரே?***

! மதவாதப் போக்கை மட்டும் கைவிட் டிருந்தால் அந்த நம்பிக்கையுடன் போன தேர்தலிலேயே, தனித்துப் போட்டியிட்டே ஸ்திரமான ஆட்சி அமைத்திருக்கலாமே!

● க. ரவீந்திரன், ஈரோடு - 2.

***? இந்தியாவை விற்கும் தரகராக ஜெய லலிதாவுடன் சோனியா சித்திரிக்கப்பட் டிருப்பது குறித்து உங்கள் கருத்து என்ன?***

! தரகர்களில்லை; மலை விழுங்கிகள்!

● பா. வடிவேல், தேவனாங்குறிச்சி.

***? அனைத்துக் கட்சிகளின் வண்டவாளங் களையும் பார்த்து சலித்து விட்டது. ஒரு***

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
பி.பி. சந்திரசேகரன்
157 D, எம்.ஜி.ஆர். நகர்,
கரூர் – 639 003.

*வேளை உங்கள் கூற்றுப்படி தேர்தல் வந்தால் யாருக்கு வாக்களிப்பது?*

! ஜெயலலிதா இடம் பெறாத, பெரும் பான்மை பெறவல்ல கூட்டணிக்கு.

● **ஆர். பிரகாசம், மருதாடு.**

*? மதி, விதியை வெல்லுமா?*

! ஜெயலலிதாவால் நாட்டுக்கு விளைந்த இந்த விதியை, தேர்தலின்போது மக்களின் மதி வெற்றி கொள்ளும்.

● **அ. சங்கரன், பெங்களூர் - 16.**

*? பீஹார் ஆட்சிக் கலைப்பு விஷயத்தில் வாஜ்பாயை ஏமாற் றிய சோனியா இப்போது யாரை ஏமாற்றப் பார்க்கிறார்?*

! 'ஜெ'வை நம்பி அவர்தான் ஏமாந்து போயிருக்கிறார். திண்டாடு கிறார்.

● **ஆர். சுப்பராவ், சென்னை - 61.**

*? சு. சாமியின் அடுத்த டீ பார்ட்டி எங்கே? எப்போது?*

! 'முதலில் ஷாம்பேன் பார்ட்டி!' என்று அ.தி.மு.க. எம்.பிக்கள் முந்திக் கொண்டு விட் டார்களே! நாட்டுக்கு இழைத்த துரோகத்தை அவர்கள் கொண்டாடியபோது, பங்கேற்று கௌரவித்திருக்கிறார் சு. சுவாமி.

● **டீ.எஸ். டீ.ராயன், மயிலாடுதுறை - 1.**

*? தற்போதைய அரசியல் சூழ்நிலை நெருக்கடிகளால் எந்தக் கட்சிக்கு அதிகம் அவப்பெயர்? காங்கிரஸா? பா.ஜ.கவா? அ.தி.மு.க.வா?*

! த.மா.கா.!

● **காளாத்திநாதன், நெய்வேலி - 3.**

*? தமிழக சுற்றுலாத் துறை மகாமகக் குளத்தில் உல்லாசப் படகு சவாரி விடுவது குறித்து?*

! தவறான காரியம். தூய்மைக்கேடு விளை யும். மேலும், புனிதமாக மக்கள் கருதும் இடத்தைச் சுற்றுலா மையமாக்கி தரம் குறையச் செய்துவிடக் கூடாது.

● **எம். செல்லையா, சாத்தூர்.**

*? 'பிரதமர் பதவிக்கு ஆசைப்பட ஜெய லலிதாவுக்கு உரிமை உண்டு' என்று கி. வீர மணி கூறியிருப்பது பற்றி?*

! தகுதி பற்றியெல்லாம் கவலைப்படத் தேவையில்லை என்பதுதான் பகுத்தறிவு போலிருக்கிறது.

● **கே.வி. ராமன், சென்னை - 73.**

*? 'சங்கீதம்தான் என் மதம்' என்று கூறிய நாதஸ்வர வித்வான் ஷேக் சின்ன மௌலானா மறைவு குறித்து?*



• புதிய பகுத்தறிவு!

• வாழும் நாதம்!

! அவருடைய நாதஸ்வரம்தான் ஓய்வெடுத் துக் கொண்டதே தவிர நாதம் அல்ல! நிற்க... ரொம்ப வயதானவர்களுக்கே சங்கீத கலாநிதி பட்டம் வழங்கும் பழக்கத்தை சென்னை மியூசிக் அகாதமி மாற்றிக் கொண்டால் நல் லது!

● **கி. ராமதாஸ், சென்னை - 23.**

*? ஜெவுடன் சிமி கிரேவல் நடத்திய (ஸ்டார் பிளஸ்) நேருக்கு நேர் பேட்டி பற்றி?*

! பேட்டி மாதிரியா இருந்தது! ஏதோ ஒரு ஏற்பாடு போலல்லவா இருந்தது!

● **அவ்வை கே. சஞ்சீவி பாரதி, கலிங்கியம்.**

*? 'பொறுப்பைத் தோளில் சுமக்கத் தயார்' என்று சோனியா அறிவித்துள் ளாரே?*

! பொறுப்பு சரி... ஜெ? சுமக்கக் கூடிய விஷயமா!

● **ராஜி, கமுதி.**

*? வளர்ப்பு மகன் திருமணத்துக்கு தமிழக மக்கள் பண உதவி செய்ததாக ஜெ கூறுகிறாரே?*

! திராட்சை பயிரிடாமலே திராட்சை விளையும்போது இதெல்லாம் என்ன அதிசயம்?!



• ஏமாந்தவள்!

• துரோகத்தைக் கொண்டாட...

# தூண்டில் போடும் பிரசாந்த்!

**பிரசாந்த் – சினிமாவுக்குள்ளே இருந்தாலும் ரொம்ப வித்தியாசமாக இருக்கிறார். ஹார்ஸ் ரைடிங், ஸ்குவாஷ் விளையாட்டு, கராத்தே, கம்ப்யூட்டர் என்று வகை வகையான விருப்பங்களுள்ள மனிதர். பேட்டிக்குப் போனால் பந்தா இல்லாமல், தாமே பிரிட்ஜிலிருந்து தண்ணீர் கொண்டு வந்து கொடுத்துவிட்டு, பக்கத்து சோபாவில் உட்கார்ந்து கொண்டு கலகலப்பாகப் பேசுகிறார் :**

"ஏறத்தாழ இரண்டு வருட காலம் வேறு எந்தப் படத்தையும் ஒப்புக் கொள்ளாமல், ஜீன்ஸ் படம் பண்ணினீர்கள். இரண்டு வருடம் என்பது ஒரு இளம் ஹீரோவைப் பொறுத்தவரை அதிக காலம். அப்போது, ஜீன்ஸ் படம் ஒருவேளை எதிர் பார்க்கிறாற்போல பெரும் வெற்றி பெற வில்லை என்றால் உங்களுடைய எதிர் காலம் பாதிக்கப்படுமே என்ற டென்ஷன் இருந்ததா பிரசாந்த்?"

"எனக்கு டென்ஷனாக இல்லை. காரணம் டைரக்டர் ஷங்கர் ஒவ்வொரு காட்சியையும் திட்டமிட்டு எடுத்த விதம், ஏ.ஆர். ரஹ்மானின் இசை, பிரம்மாண்டமான முறையில் படமெடுத்த தயாரிப்பாளர் அசோக் அமிர்தராஜின் பிளானிங், வெங்கியின் ஸ்பெஷல் எஃபெக்ட்ஸ், பாடல்கள் படமாக்கப்பட்ட விதம், பாடல் வரிகள், புதுமையான முறையில் சொல்லப்பட்ட கதை இதையெல்லாம் நான் நேரடியாகப் பார்த்தேன். அவற்றின் சிறப்பை உணர்ந்தேன். எனவே, எனக்கு அந்தப் படத்தின் ஒவ்வொரு காட்சியிலும் நடிக்கிறபோது, ஒரு சூப்பர் ஹிட் படம் என்று தோன்றிக் கொண்டேதான் இருந்தது. அந்த அளவுக்கு வெற்றி மீது எனக்கு நம்பிக்கை இல்லாவிட்டால், நிச்சயம், அந்த ஒரு படத்துக்காக இரண்டு ஆண்டுகள் செலவழித்திருக்க மாட்டேன்."

"ஜீன்ஸ் படத்தின் போது இருந்த தன்னம்பிக்கை உங்களுக்கு ஒவ்வொரு படம் பண்ணுகிறபோதும் இருக்கிறதா?"

"ஷங்கர் ஒரு முன்னணி இயக்குனர் என்பது சரி! அடுத்து பண்ணின கண்ணெதிரே தோன்றினாள் படத்தை இயக்கியவர் ரவிச்சந்திரன் என்கிற புதிய டைரக்டர். ஏன் ஒப்புக் கொண்டேன்? படத்தின் ஸ்கிரிப்ட் எனக்கு ரொம்பப் பிடித்தது. அடுத்து காதல் கவிதையின் ஸ்கிரிப்ட் ரொம்ப அருமையானது. ஆக நான் ஸ்கிரிப்ட், என் கேரக்டர் இவற்றுக்கு அதிக முக்கியத்துவம் தருவதால், இது ஜெயிக்கும் என்ற நம்பிக்கை ஒவ்வொரு தடவையும் இருக்கும்."

"அதெல்லாம் சரிதான். அரைத்த மாவையே அரைக்கும் கதையானால் கூட, அதன் டைரக்டர் உங்களுக்கு கதை சொல்லுகிறபோது, ஒரு வித்தியாசமான கதை, உங்களுக்கு ஒரு டிஃபரண்ட்டான கேரக்டர் என்றுதானே ஆரம்பிப்பார்கள்?"

"அது உண்மைதான். நான் கதை கேட்கிறபோது ஒரு நடிகனாகக் கேட்காமல், ரசிகனாகத்தான் கேட்கிறேன். எனக்குள்ளே இருக்கிற ரசிகன், பிரசாந்த் என்கிற நடிகன் மீது அன்பும் அக்கறையும் கொண்டவன். எனவே, அவன் எனக்கு 'இது நல்ல கதை; இதில் உன் கேரக்டர் பிரமாதம்' என்று சொல்லி விடுவான். அதன்படிதான் நான் முடிவுகள் எடுக்கிறேன்."

"அதையும் மீறி படங்கள் தோல்வி அடைந்து போகின்றனவே?"

"அப்படித் தோல்வியடைகிறபோது, மக்கள் என்ன சொல்கிறார்கள் என்று பார்க்கிறேன். தோல்வி ஏன் என்று காரணங்களை ஆராய்கிறேன்."

"எல்லாப் படத்திலும் காதல்... காதல்... காதல்தானே கையாளப்படுகிறது? கதையை மாற்றாமல், லொகேஷனையும், ஹீரோயினையும் மட்டுமே மாற்றி மாற்றி ஆடிப் பாடி, சண்டை போடுவது உங்களுக்கு போரடிக்கவில்லையா?"

"எனக்கு நடிப்பு என்பது தொழில்.

ஆனால் ஜனங்களுக்குத் திரைப்படம் என்பது பொழுதுபோக்கு. எனக்கு நல்ல கதை, நல்ல கேரக்டர் இருந்தால் போதும். ஒரே மாதிரி காட்சியோ, டான்ஸோ இரண்டாவது தடவை வந்தால், டைரக்டரிடம் சொல்லித் தவிர்த்து விடுவேன். ரசிகர்கள் புத்திசாலிகள்; அவர்களை ஏமாற்ற முடியாது! அவர்களுக்குப் படம் போரடிக்காமல் இருக்க வேண்டும் என்பதுதான் ரொம்ப முக்கியம்."

"ரசிகர்களை புத்திசாலிகள் என்கிறீர்கள். அப்புறம் அவர்கள் எப்படி மிகைப்படுத்தப்பட்ட பாடல், காதல் சண்டைக் காட்சிகளை ஏற்றுக் கொள்கிறார்கள்?"



"சினிமா என்பது, ஒரு விஷயத்தை கவாரசியமாக, மிகைப்படுத்திச் சொல்லுவதுதான். இப்போது கூட மக்கள் என்ன சொல்லுகிறார்கள்? 'பொய் சொல்; ஆனால் கொஞ்சம் நம்புகிறாற் போல சுவாரசியமாய்ச் சொல்' என்றுதான்."

"நல்ல நடிகர் என்று பெயர் வாங்கி, நிலைத்தாகி விட்டது. அடுத்தது என்ன? டைரக்ஷனா?"

"நடிகர் திலகம் சிவாஜி சாரை நான் அண்மையில் சந்தித்த போது, அவர் சொன்ன வார்த்தைகள் இன்னமும் என் மனத்தில் ரீங்காரமிட்டுக் கொண்டிருக்கின்றன. 'நடிப்பு என்பது ஒரு சமுத்திரம். அதுல நான் கற்றுக் கொள்ள வேண்டியதே இன்னும் ஏராளமாக இருக்கு' என்றார் அவர். சிவாஜிதான் நம்மைப் பொறுத்தவரை நடிப்பின் சிகரம். அவரே இப்படிச் சொல்கிறார் என்றால் நானெல்லாம் என்ன சொல்ல முடியும்? நாளை என்ற கற்பனை உலகில் சஞ்சரிப்பவன் நான் இல்லை. இது, நான் எனக்கென ஒரு இடத்தைப் பிடித்துக் கொண்டு நிற்கிற தருணம். நடிப்பு... நடிப்பு... நடிப்புதான் என் கவனம் எல்லாம்!"

"போன தலைமுறை நடிக, நடிகையரைப் போல, இந்தத் தலைமுறையினர் நீண்ட காலம் நிலைப்பதில்லையே! வந்த வேகத்திலேயே, மின்னல் போல மறைந்து விடுகிறார்களே!"

"அப்போது கொஞ்சமாக நடிகர்கள் இருந்தனர். ஆனால் இப்போது ஏகப்பட்ட புதுமுகங்கள். சினிமா உலகம், புதியவர்களை அகலக் கை விரித்து வரவேற்கிறதே! நடிகர்களுக்காகக் கதை பண்ணுவதை விட, கதைக்காக நடிகர்களை முடிவு செய்யும் போக்கே அதிகம் நிலவுகிறது. எனவே நிறைய புதியவர்களுக்கு வாய்ப்பு கிடைக்கிறது. இது நல்ல திருப்பம்தானே?"

"உங்களுடைய பொழுதுபோக்கு?"

"புகைப்படம் எடுப்பது; இயற்கை எழில் மிகுந்த இடங்களுக்குச் செல்வது, படிப்பது, மியூஸிக்... பில்லியர்ட்ஸ், ஸ்குவாஷ், ஷட்டில்காக், கிரிக்கெட்... பாஸ்கெட் பால்... அப்புறம்... மீன் பிடிப்பது..."

"என்ன மீன் பிடிப்பதா?"

"ஏன் இருக்கக் கூடாது? தனிமையாக, தொந்தரவில்லாத பெரிய ஏரிகள் இருக்கும் இடங்களுக்குப் போனால், கையில் புத்தகத்துடன், தூண்டில் போடுவேன். நேரம் போவதே தெரியாது. எனக்கு ரொம்ப ஆசையான ஹாபி அது. என் இன்னொரு ஃபேவரிட்டான விஷயம் இன்டர்நெட். என்னை பிரமிக்க வைக்கும் விஷயம் இன்டர்நெட்! இன்டர்நெட்டில் உட்கார்ந்து விட்டால் தினங்கள் மாறி, மேய்ந்து கொண்டேயிருப்பேன். நான் கூட ஒரு வெப்சைட் வைத்திருக்கிறேன். அது ஒரு தனி உலகம். உள்ளே நுழைந்து விட்டால், வெளியில் வர மனமே வராது."

சந்திப்பு : **பாரதி**

அட்டை வண்ணப்படம், படங்கள் : **ஸ்ரீஹரி**

# உங்களுக்கும் இங்கிலீஷ்ல பேசணும்னு ஆசையா இருக்கா?



மடமடன்னு இங்கிலீஷ்ல பேசணும்னு ஆசையாத்தான் இருக்கு. ஆனா... ஏதாவது தப்பா பேசிடுவோமோன்னு பயமா இருக்கு. இது தானே உங்க ப்ராப்ளம்?

**Don't worry!**
**விவேகானந்தாவின் 'ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸ்'**ல சேர்ந்து நீங்க ஈஸியா இங்கிலீஷ் பேசக் கத்துக்கலாம்.

**இன்னும் எதுக்கு யோசிக்கிறீங்க?**
பயிற்சி விவரத்தை படிச்சுப் பார்த்து கூப்பனை கட் பண்ணி உடனே அனுப்புங்க. பாடங்கள் **V.P.P.** மூலமா உங்க வீட்டுக்கே வந்துடும்.

**அப்புறம் என்ன?**
பாடங்களைப் படிச்சு பிராக்டிஸ் பண்ணி மடமடன்னு இங்கிலீஷ்ல பேச ஆரம்பிங்க.

**ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸ்**
இங்கிலீஷ் வார்த்தைகளை ஓரளவு எழுத படிக்கத் தெரிந்தவர்கள் **ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில்** சேர்ந்து இலக்கணப் பிழையின்றி வாக்கியங்களை அமைக்கக் கற்றுக் கொண்டு இங்கிலீஷில் மிகச் சரளமாகப் பேசப் பயிற்சி பெறலாம்.

**இலக்கணம்** மற்றும் **உரையாடல்** பயிற்சிப் பாடங்கள் அடங்கிய இக்கோர்ஸில் சேர்ந்து பயிற்சி பெறக் கட்டணம் **ரூ. 395/-** மட்டுமே.

**அடிப்படை (Basic) & ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸ்**
இங்கிலீஷ் வார்த்தைகளை எழுத படிக்க இயலாதவர்கள் அடிப்படையிலிருந்து தொடங்கி ஆங்கில வார்த்தைகளை ஸ்பெல்லிங் மிஸ்டேக் இல்லாமல் எழுத படிக்க கற்றுக் கொண்டு இங்கிலீஷில் மிகச் சரளமாகப் பேசப் பயிற்சி பெறலாம்.

**அடிப்படை** மற்றும் **ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில்** சேர்ந்து பயிற்சி பெறக் கட்டணம் **ரூ. 525/-** மட்டுமே.



உரையாடற்பயிற்சி செய்து பழக பாடங்களுடன் ஆடியோ கேஸட் இலவசம்.

கீழ்க்காணும் கூப்பனைப் பூர்த்தி செய்து இன்றே அனுப்புங்கள். பாடங்களையும், கேஸட்டையும் V.P.P. மூலம் உடனே அனுப்புகிறோம். தகவல் கிடைத்ததும் தபால் அலுவலகத்தில் பணத்தைச் செலுத்திப் பாடங்களைப் பெற்றுக் கொள்ளுங்கள்.

இதோ கூப்பன்


நான் விவேகானந்தாவின் ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில் சேர விரும்புகிறேன். பாடங்களை V.P.P.யில் அனுப்புங்கள். ரூ.395/- செலுத்திப் பெற்றுக் கொள்கிறேன்.


நான் அடிப்படை (Basic) மற்றும் ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில் சேர விரும்புகிறேன். பாடங்களை V.P.P.யில் அனுப்புங்கள். ரூ. 525/- செலுத்திப் பெற்றுக் கொள்கிறேன்.

தேவையான கட்டத்தில் ✓ குறியிடுங்கள்

பெயர்:..............................................................

முகவரி:..............................................................

..............................................................

..............................................................பின்கோடு..........



**VIVEKANANDA INSTITUTE**

KLA

9, மேட்லி ரோடு, தி.நகர், சென்னை - 600 017.

INDIA'S No. 1 ENGLISH TRAINING INSTITUTE

**விவேகானந்தாவின் நேர்முகப்பயிற்சி மையங்கள்:** *சென்னையில்: தி.நகர், தாம்பரம், தண்டையார்பேட்டை, கீழ்ப்பாக்கம், போரூர்.*
மதுரை, திருச்சி, கோயம்புத்தூர், கிருஷ்ணகிரி, ஈரோடு, திருப்பூர், குன்னூர், திண்டுக்கல், தஞ்சாவூர், அரக்கோணம், வேலூர் மற்றும் பாண்டிச்சேரி.
★ சேலத்தில் எங்களது நேர்முகப்பயிற்சி மையம்: F 15 ஃபேர்லாண்ட்ஸ், சேலம்-16 என்ற புதிய விலாசத்தில் இயங்கி வருகிறது.

# 2

வை க்குகளில் சாய்ந்து நின்றபடி அரட்டை அடித்துக் கொண்டிருந்த அந்த நான்கு இளைஞர்களின் விரல்களிலும் சம்பிரதாயம் போல சிகரெட்டுகள் புகைந்து கொண்டிருந்தன.

அதில் கூலிங்கிளாஸ் அணிந்த செல்வா தலைவன் மாதிரி. இந்த மாதிரி குழுக்களில் யாருடைய மணிபர்சில் திமிறத் திமிற பணம் திணித்து வைக்கப்பட்டிருக்கிறதோ அவனே தலைவன்.

# நீயும் நானும் ஒரு செய்தி...

இந்த தெருக்கோடி தலைவர்கள் எது சொன்னாலும் பின்பாட்டுப் பாட வேண்டியது மற்றவர்களின் கடமை.

"மழை வர்ற மாதிரி இல்லை?"

"ஆமாம் செல்வா!"

"வானம் இளியரா இருக்கே, மழை வராதுடா."

"ஆமாம், வராது செல்வா!"

செல்வாவுக்கு ஒரு தாத்தா இருந்து, இறந்து, இவனுக்குக் கிடைத்த சில லட்சங்களை, சிறு வியாபாரிகளுக்கு கந்து வட்டிக்குக் கொடுத்தான். ஏழு வட்டி... எட்டு வட்டி... பத்து வட்டி...

யாரும் ஏமாற்றுவதில்லை. ஏமாற்றினால் செல்வா என்ன செய்வான் என்பது கடன் வாங்கியவர்களுக்குத் தெரியும்.

"இப்படித்தான் நம்ம சின்ன முருகன் செல்வாகிட்ட ஆயிரம் ரூபா கடன் வாங்கிட்டு ஊரைவிட்டு ஓடப் பார்த்தான். அவனை பஸ் ஸ்டாண்டுல போய் கப்புன்னு புடிச்சி..." – அப்புறம் அவனை செல்வா என்ன செய்தான் என்பதைப் பற்றி ரகசியக் குரல்களில் அக்கம் பக்கம் பார்த்துக் கொண்டு பேசிக் கொள்வார்கள்.

எனவே கரெக்டாக அசல் வட்டித் தொகையைக் கொடுத்து விடுவார்கள் - பெண்டாட்டி தாலியை விற்றாவது.

செல்வா சட்டைப் பையில் ஒரு சின்ன பாக்கெட் நோட்டும், பேனாவும் இருக்கும். தினசரி மாலை ஆறு மணிக்குத் தனது கஸ்டமர்களைத் தேடி நகர்வலம் வருவான். புதிய கடன் கொடுத்தல், கொடுத்த கடன் வசூலித்தல் என்று இரண்டு மணி நேரம்தான் வேலை.

இதோடு உறங்குகிற ஆறு மணி நேரத்தையும் சேர்த்துக் கொண்டாலும் நாளில் மிச்சமிருக்கும் பதினாறு மணி நேரத்தை என்ன செய்வது?

இரவு ஒன்பது மணிக்குத் துவங்கி நினைவு தப்பும் வரை சோமபானம் அருந்தி உலகை மறந்து பறந்தாலும்.. பகலில்?

சினிமா தியேட்டரிலும் இரண்டரை மணி நேரம் கனவுக் காட்சி விட்டு வீட்டுக்கு அனுப்பி கதவைச் சார்த்தி விடுவதால்... செல்வா தேர்வு செய்த பொழுது போக்கு தான்.. பெண் சீண்டல்!

பஸ் ஸ்டாப்ஸ், கல்லூரி வாசல்கள் ஐஸ் கிரீம் பார்லர்ஸ், கிரீட்டிங்ஸ் கடைகள், கம்ப்யூட்டர் மையங்கள் என்று ஏகப்பட்ட ஸ்தலங்களில் தனது படையோடு குறிப்பிட்ட நேரங்களில் ஆஜராகி விடுவான்.

"டேய், அதோ வருது பாரு பச்சை சூரிதார். அதை இப்போ எப்படி சத்தாயிக்கிறேன் பாரு."

ஒரு போர் வீரனைப் போல சூளுரைத்து நகர்வான்.

"எக்ஸ்க்யூஸ் மீ மேடம், ஹோட்டல் க்ரீன் லேண்ட்டுக்கு எப்படிப் போகணும்?" என்று படு பவ்யமாக ஆரம்பிப்பான்.

"நேரா போயி செகண்ட் லெஃப்ட்ல திரும்புங்க" என்பாள்.

"தேங்ஸ். சும்மா தகவல் மட்டும் சொல்லிட்டுப் போனா எப்படி?"

"ம்?" என்பாள்.

"அங்கே டிஸ்கோ டான்ஸ் ஆடணும்னா

பட்டுக்கோட்டை பிரபாகர்

ஜோடியாத்தான் அனுமதிப்பாங்க. போய் ஆடிட்டு வருவமா?''

"நான்சென்ஸ்!'' முகம் சிவப்பாள்.

"இருங்க! இப்ப என்ன கேட்டுட்டேன். எதுக்கு கோபப்படறீங்க? டான்ஸ் ஆடலாமான்னுதானே கேட்டேன். டான்ஸ் ஆடறது தப்பா? பதில் சொல்லிட்டுத்தான் போகணும்!''

''கலாட்டா பண்ணாதீங்க!'' கண்டிப்பாய்ப் பேசுவாள்.

"என்னை இன்சல்ட் பண்றீங்க! இப்ப என்ன கலாட்டா செஞ்சேன்? உங்களை வேற எதுக்காச்சும் கூப்பிட்டேனா? டான்ஸ் ஆடத்தானே கூப்பிட்டேன். அதுக்கு ஏன் முறைச்சீங்க?''

''வழி விடறீங்களா?'' கலவரப்படுவாள்.

"முடியாது, டான்ஸ் ஒரு கலை, பாரம்பரியமான கலை. அதை எப்படி நீங்க கேவலமா நினைக்கலாம். ஒரு ஸாரி சொல்லுங்க.''

"ஸாரி'' என்பாள் அழுகையை அடக்கி.

"இது அந்தக் கலைகிட்ட கேட்டது. எனக்கு?''

"ஸாரி.''

"என்கிட்ட ஸாரி இப்படி வார்த்தையால கேக்கக் கூடாது. என் கன்னத்துல ஒரு முத்தம் கொடுத்தா மன்னிச்சுடறேன்.''

அவள் கண்களில் கண்ணீர் அருவி உற்பத்தியாகும்...

"அய்யய்யே! இப்படி அழுதா எனக்கு மூடு போயிடும். சரி, இன்னிக்குப் போயிட்டு நாளைக்கு இதே பக்கம் வர்றப்போ நம்ம பாணியில ஸாரி கேக்கணும், என்ன? புரிஞ்சுதா?''

அந்தப் பெண் ஓடியே போனதும்



நண்பர்களோடு சேர்ந்து அதிர அதிர சிரிப்பான்.

செல்வா நிதானத்தில் இருக்கிறானா இல்லை நெப்போலியனில் இருக்கிறானா என்பதைப் பொறுத்து இந்தச் சீண்டல்களின் தரம் அமையும்.

தூரத்தில் பள்ளிக்கு நேரமாகி விட்டதே என்கிற பதைப்போடு சைக்கிளை மிதித்துக் கொண்டு அனிதா வந்து கொண்டிருக்கும் தற்சமயம் செல்வா நிதானத்தில் இல்லை.

ஆகவே, 'நீ ஆளைக் காமி, நான் முத்தம் கொடுக்கறேன்' என்று சவால் விட்டு விட்டு உதடுகளை ஈரம் பண்ணிக் கொண்டான்.

கூட்டாளி எட்டுத் திசைகளிலும் பார்த்து விட்டு, "செல்வா, அதோ வருது பாரு சைக்கிள் பார்ட்டி, உன் வீரத்தைக் காமி பார்க்கலாம்" என்று குவாட்டர் பாட்டில் நன்றியுடன் உசுப்பேற்றினான்.

"அவ்வளவுதானே? கவனி!" என்றான் செல்வா.

அவர்களைக் கடக்க இருந்த அனிதாவின் சைக்கிளுக்கு நேர் எதிராக திடீரென்று வந்து நின்றான்.



**"வார்த்தை தவறி விட்டாய்... அப்படி இப்படின்னு உன் காதலர் உன்னைப் பார்த்து வசை பாடுறாரே... ஏன்?"**

**"எப்படியும் ஒரு மாசத்துல எனக்குக் கல்யாணமாயிடும்னு நா சொல்லி மூணு மாசம் கடந்துடுச்சாம்."**

**— அம்பை தேவா**

**"என்னய்யா லத்தியில வெள்ளையா மாவு மாதிரி ஒட்டியிருக்கு?"**

**"ஹி...ஹி... வீட்ல பூரிக்கட்டை உடைஞ்சு போச்சுன்னு என் பெண்டாட்டி இதுல பூரி மாவு உருட்டினா சார்..."**

**— ஸ்ரீதர்**

அனிதா இதை எதிர்பார்க்காததால் அவன் மேல் சைக்கிளை மோதி விடக் கூடாதேயென்று அவசரமாக பிரேக் பிடித்து அவசரமாக சைக்கிளைத் திருப்ப, திருப்பின திசையிலும் செல்வா நகர்ந்து நிற்க... மீண்டும் திருப்ப முயன்று சைக்கிள் சரிந்து கீழே விழுந்தாள்.

"அச்சச்சச்சோ!" என்று ஓட்டமாக வந்து அவள் தோள்களைப் பிடித்துத் தூக்க வந்த செல்வாவை முறைத்தாள் அனிதா.

"விடுங்க! நானே எந்திரிச்சுக்குவேன்."

எழுந்து உடையில் ஒட்டியிருந்த மண்ணைத் தட்டிக் கொண்டு சைக்கிளை நிமிர்த்தினாள். கேரியரில் இருந்து சிதறியிருந்த அவள் ஸ்கூல் பேகை செல்வா எடுத்துக் கொடுத்தான். சிரித்தான்.

வெடுக்கென்று வாங்கி கேரியரில் வைத்து நகர... சைக்கிளின் ஹேண்டில் பாரை உறுதியாகப் பிடித்து நிறுத்தினான் செல்வா.

"பேக் எடுத்துக் கொடுத்தேன். ஒரு தேங்ஸ் சொல்றதில்லையா?"

அவன் வேண்டுமென்றே வம்பு செய்கிறான் என்பது தெளிவாகப் புரிந்ததால் அனிதாவுக்குள் உதறல் துவங்கியது.

அதை மறைத்துக் கொண்டு, "கையை எடுங்க" என்றாள் குனிந்த தலை நிமிராமல்.

"அட! இரு, போகலாம். உங்கப்பா, அம்மா உனக்கு சொல்லித் தரலையா? யாராச்சும் உதவி செஞ்சா தேங்ஸ் சொல்ல வேணாமா?"

பேசாமல் நின்றாள். சாலையில் தனக்குத் தெரிந்தவர்கள் யாராவது வருகிறார்களா என்று பார்த்தாள். பரி



தவித்தான்.

''பதில் சொல்லாம நகர முடியாது. காத்தைப் பிடுங்கி விட்டுடட்டுமா?''

''நான் ஸ்கூலுக்குப் போகணும்'' என்றாள் கம்மிய குரலில்.

''யாரு போக வேணாம்னு சொன்னாங்க. ஏண்டா பசங்களா, ஸ்கூலுக்கு தமிழ்ல என்னடா?''

''பள்ளியறை.''

''ஏம்மா கண்ணு, பள்ளியறைக்குப் போறியா?''

அனிதாவுக்கு வெடவெட வென்றிருந்தது. இதுவரை இப்படி ஒரு சூழ்நிலையை அவள் சந்தித்ததில்லை.

தூரத்திலிருந்து பல பார்வைகள் தன்னைக் கொத்துவதை உணர்ந்திருக்கிறாள். சிலர் அவள் காதில் விழும்படியாக ஏதாவது கமெண்ட் அடித்துக் கடந்திருக்கிறார்கள்.

யாரும் இப்படி சைக்கிளை நிறுத்தி நேருக்கு நேர் வம்பு பேசி கலாட்டா செய்ததில்லை.

''உன் பேரென்ன சொல்லு.''

''நான் போகணும். வம்பு பண்ணாதீங்க. ப்ளீஸ்'' அவள் குரல் நடுங்கியது.

''இப்ப என்ன வம்பு செஞ்சேன்! பேர்தானே கேட்டேன். சொல்லிட்டுப் போக வேண்டியதுதானே?''

''என் பேரு அனிதா, வண்டிலேருந்து கையை எடுக்கறீங்களா?''

''நான் செஞ்ச உதவிக்கு நீ இன்னும் தேங்ஸ் சொல்லலையே அனிதா.''

''தேங்ஸ்! போதுமா? நகருங்க!'' பல்லைக் கடித்துக் கொண்டு பேசினாள்.

''டேய் கொமாரு, பாப்பாகிட்ட சொல்லுடா எனக்கு தேங்ஸ் எப்படி சொல்லணும்னு ஒரு முறை இருக்கே, அதைச் சொல்லு!''

கொமாரு மஞ்சள் ஏறிய பற்களை எல்லாம் காட்டி, ''நீ எங்க தலைவருக்கு ஒரு முத்தம் கொடுத்தால் போதும்! அதான் தேங்ஸ் சொல்றது.''

''அய்யோ!'' என்று திடுக்கிட்டாள்.

''டேய்! ஏண்டா இப்படி அனிதாவை பயமுறுத்தறீங்க? நீ மிரளாதே கண்ணு. நீ கொடுக்கறதுக்கு பயமா இருந்தா, நான் கொடுக்கறதை வாங்கிக்கிட்டாப் போதும், என்ன?''

செல்வா உதடுகளை ஈரம் பண்ணிக் கொண்டான்.

''அய்யோ! ப்ளீஸ்... விட்டுருங்க. நான் போறேன்'' அழுகையோடு கெஞ்சத் துவங்கினாள் அனிதா.

''என்ன தலைவா, இந்தியா - பாகிஸ்தான் கணக்கா பேச்சு வார்த்தையிலேயே காலம் கடத்தறியே. அவ்வளோதானா?'' என்றான் மற்றொருவன்.

''பார்த்தியா, ரொம்பத்தான் என்னை அண்டர் எஸ்டிமேட்டு பண்ணிட்டே பார்த்தியா? அழுவுதே, அழுவுறபோது கொடுத்தா உப்புக் கரிக்குமேன்னு பார்த்தேன். சரி, வுடு... பரவால்லை...''

பேசிக் கொண்டேயிருந்த செல்வா சட்டென்று அனிதாவைக் கட்டிப் பிடித்து கன்னத்தில் முத்தமிட்டான்.

(தொடரும்)



**"அவங்க நிறைய டீ.வி சீரியல்ல நடிக்கிறதால தன் குழந்தைக்கு இப்படி பேர் வச்சிட்டாங்களாம்!"**

**"எப்படி?"**

**"தூர்தர்ஷனின்னு!"**

**— ஜானகி தர்மராஜன்**

பார்த்து ஒழுங்கா டிக் பண்ணு....

சரியான விடையை டிக் செய்யவும்
மீண்டும் பி.ஜே.பி
சோனியா
தேர்தல்

கே.ஆர். நாராயணன்

வாக்காளர்




1999 மே 2
பிரமாதி சித்திரை 19
மலர் : 57
இதழ் : 40


# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## குடியரசுத் தலைவரா? காங்கிரஸ் தலைவரா?

**பி.**ஜே.பி. அரசுக்கு ஆதரவு விலக்கிக் கொள்வதாக ஜெயலலிதா கடிதம் கொடுத்த இருபத்து நான்கு மணி நேரத்துக்குள் குடியரசுத் தலைவர் செயல்பட்டார். வாஜ்பாய் அரசு நாடாளு மன்றத்தில் நம்பிக்கை வாக்கெடுப்பு நடத்தியாக வேண்டும் என்று அறிவித்தார்.

அந்த வாக்கெடுப்பில் பி.ஜே.பி. தோற்ற பிறகு கே.ஆர். நாராயணன் அதே சுறுசுறுப்பைக் காட்டாதது அதிர்ச்சி தருகிறது.

நம்பிக்கை வாக்கெடுப்பு முடிந்து எட்டு நாட்களாகிவிட்டன! அந்த நெருக்கடியைத் திட்டமிட்டு உருவாக்கிய அ.தி.மு.க-காங்கிரஸ் கட்சிகளால் மாற்று அரசுக்கான பலத்தைப் பெற முடியவில்லை.

வாஜ்பாய் அரசு வீழ்ந்ததுமே குடியரசுத் தலைவர் மாற்று அரசு முயற்சிக்கு ஒரு காலக்கெடு விதித்திருக்க வேண்டும். அடுத்து தனிப்பெரும்பான்மை பெற்றுள்ள கட்சியான காங்கிரஸ், ஆட்சி அமைப்பதாயின், அதனை ஆதரிக்க முன்வருவோரிடம் கடிதங்கள் கோரியிருக்க வேண்டும். ராஷ்டிரபதி பவனிலிருந்து இத்தகைய உத்தரவுகள் எதுவும் வரவில்லை. மாறாக, 'குடியரசுத் தலைவர் நிலைமையை ஆராய்ந்து வருகிறார்; நாட்டின் முன்னணி அரசியல் தலைவர்கள், சட்ட நிபுணர்களின் ஆலோசனைகளைப் பரிசீலித்து வருகிறார் *விரைவில் முடிவு தெரிந்து விடும்*' என்ற அறிக்கைதான் ஆட்சி வீழ்ந்த ஒரு வாரம் கழித்தும் வருகிறது.

இந்த ஒரு வாரத்தில் சந்தேகத்துக்கிடமின்றி நிரூபணமாகியிருக்கும் விஷயம்: காங்கிரஸ் கட்சிக்குத் தனித்தோ, பிற கட்சிகளுடன் கூட்டணியாகவோ, அல்லது அவற்றின் ஆதரவுடனோ




ஆட்சி அமைக்க வக்கில்லை என்பதுதான்.

சோனியாவைப் பிரதமராக ஏற்று அரசை ஆதரிக்க முலாயம் சிங் தயாராயில்லை. அதே நிலையை ஆரம்பத்தில் மேற்கொண்ட லாலுபிரசாத் யாதவை மனம் மாறச் செய்ததுபோல் முலாயமையும் 'மனம் மாறச்' செய்ய கடுமையான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. அந்த முயற்சிகளின் தொல்லை தாங்காமல் முலாயம் சிங் யாதவ் தலைமறைவாகிவிட்டார்!

காங்கிரஸ் மைனாரிட்டி அரசுக்கு ஆதரவு தர மறுக்கின்றனர் கம்யூனிஸ்டுகளில் ஒரு சாரார். அவர்களை அமைதிப்படுத்த ஜோதிபாசுவைப் பிரதமராக முன் நிறுத்தும் முயற்சியை சிலர் மேற்கொண்டுள்ளனர். பெரும்பான்மை பலமில்லாதபோது ஆட்சிப் பொறுப்பை ஏற்கக் கூடாது என்று கம்யூனிஸ்டுகளுக்குள்ளேயே முரண்பட்ட கருத்து நிலவுகிறது. தப்பித் தவறி ஜோதிபாசு பிரதமராக சம்மதித்தால் அவருக்கு மாநிலத்திலும் பிடிப்பு போய்விடும்; மத்தியிலும் சோனியா போடும் தாளத்துக்கு ஆட வேண்டியிருக்கும்.

முன்னாள் பிரதமர் சந்திரசேகரை மீண்டும் பிரதமராக்கி காங்கிரஸும் இதர கட்சிகளும் ஆதரவளித்தாலென்ன என்கிற குயுக்தியும் ஆலோசிக்கப்பட்டு வருகிறது.

இதுவும் மறைமுகமான காங்கிரஸ் ஆட்சியாக இருக்குமே தவிர, மெய்யான சந்திரசேகர் ஆட்சியாக இராது.

இவ்வளவு தூரத்துக்கு நெருக்கடியை முற்றவிட்ட பிறகு, குடியரசுத் தலைவர் 'வதந்திகளை நம்ப வேண்டாம்' என்றும் 'விரைவில் முடிவெடுக்கப்படும்' என்றும் அறிக்கைகள் வெளியிடுவது சிரிப்புக்கிடமாகயிருக்கிறது. காங்கிரஸுக்கு ஒரு தடவை, இரண்டு தடவை, மூன்று தடவை என்று மேலும் மேலும் வாய்ப்பு தந்து கொண்டே போவது எந்த விதத்திலும் நியாயமில்லை.

தூக்கணாங்குருவி கூட்டைக் கலைத்துப் போட்ட குரங்கு, "ஊசி மூஞ்சி மூடா! எனக்கு வீட்டைக் கட்டத் தெரியாது; கலைக்கத்தான் தெரியும்" என்று ஏசிவிட்டுப் போனதாக தமிழ்ப் பாடநூலில் கதை இடம் பெறும்.

பி.ஜே.பியை பதவி இறக்கிய கட்சிகள் இன்று அந்தக் குரங்கின் நிலையில்தான் இருக்கின்றன!

வெறும் வன்மத்துக்காக ஓர் ஆட்சியைக் கவிழ்த்துவிட்டு, மாற்று அரசு அமைக்கத் தெரியாமல்,




பி.ஜே.பியை மதவாதக் கட்சி என்று ஏசிக் கொண்டிருக்கின்றன.

பி.ஜே.பி. மதவாதக் கட்சியென்பது உண்மைதான். ஆனால் மக்களின் ஆதரவைப் பெற்ற கட்சியாகத்தான் ஆட்சிக்கு வந்தது. வாஜ்பாய் அரசை ஜெயலலிதா படாதபாடு படுத்தியிருக்கலாம். ஆனால் ஜெயலலிதா சென்ற தேர்தலில் கணிசமான இடங்களைப் பிடித்ததே பி.ஜே.பியுடன் கூட்டணி வைத்துக் கொண்டதால்தான்.

மக்களின் உணர்வுகளைப் புறக்கணித்து, சுயநல அரசியல் நடத்தும் ஜெயலலிதா தமது பாதையில் இதர கட்சிகளையும் திசை திரும்பச் செய்து விட்டார். அடுத்து என்ன செய்யப் போகிறோம் என்பது குறித்த திட்டமிடலோ, தீர்கதரிசனமோயின்றி ஆட்சியைக் கவிழ்த்ததும் அல்லாமல், ஜனநாயகத்தையும் நாட்டின் எதிர்காலத்தையும் உதைபந்தாடிக் கொண்டிருக்கிறது சோனியா, ஜெயலலிதா கிளப்பிவிட்ட கூட்டம்!

'தாங்கள் மக்களின் பிரதிநிதிகள்; அவர்கள் விரும்பியதால் பாராளுமன்றத்துக்கு வந்திருப்பவர்கள்' என்பதையே மறந்து, பதவி மோகத்திலும் பண தாகத்திலும் உழலுகிற எம்.பிக்கள் 'அதற்குள் இன்னொரு தேர்தலுக்கு நாங்கள் தயாராயில்லை' என்றுதான் சொல்வார்கள்.

அவர்களுடைய இந்தச் சொல்லுக்கு மதிப்புக் கொடுத்து கே.ஆர். நாராயணன் யோசிக்க வேண்டியதில்லை.

மாற்று அரசுக்கு வலுவான திட்டமில்லாமல் ஆட்சியைக் கவிழ்த்த சுயநலவாதிகளுக்குச் சட்டப்படி தண்டனை கிடையாது. ஆனால் குடியரசுத் தலைவர் அவர்களை தண்டிக்கலாம்-மீண்டும் வாஜ்பாய் அரசுக்கு வாய்ப்பு அளிப்பதன் மூலம்...

ஆனால், குடியரசுத் தலைவர் அத்தகைய முடிவு தமக்கு ஏற்புடையதல்ல என்று ஏற்கெனவே தெரிவித்து விட்டார்.

இந்நிலையில் தேர்தல் அறிவிப்பதைத் தவிர கே.ஆர். நாராயணன் வேறெதுவும் செய்ய முடியாது. ஆனால், அதற்கு அவர் எடுத்துக் கொள்ளும் அவகாசத்தைப் பார்க்கும்போது அவர் குடியரசுத் தலைவரா? காங்கிரஸ் தலைவரா என்று தான் கேட்கத் தோன்றுகிறது! ○

# ஓர் அற்புத சிகிச்சை:

• பிராண சிகிச்சைப் பயிற்சி....

எதிரே உட்கார்ந்திருப்பவரின் உடலைச் சுற்றி கையை வேக வேகமாக நிறைய தடவை ஆட்டுகிறார் 'டாக்டர்'. ஏதோ கடவுளைப் போல ஓர் உள்ளங் கையை மேலும், மற்றொரு உள்ளங்கையைக் கீழுமாக வைத்துக் கொண்டு சில அசைவு களைச் செய்கிறார். இதெல்லாம் முடிந்ததும் "இப்போது வலி எப்படி இருக்கு?" என்று அவர் கேட்க, "முன்னைக்கு இப்போ எவ் வளவோ பரவாயில்லை" என்று பதில் வரு கிறது நோயாளியிடமிருந்து.

மந்திரம் போலச் செயல்படும் இந்த சிகிச்சை முறையை "ப்ராணிக் ஹீலிங்" அல்லது "பிராண சிகிச்சை முறை" என்கி றார்கள். இந்த சிகிச்சையின் அடிப்படை இதுதான் : நம் உடலைச் சுற்றிலும் கண்ணுக் குத் தெரியாத சக்தி ஒன்று இருக்கிறது. இந்த சக்தி உடலுக்கு வெளியே மட்டுமில்லாமல், உடலுக்கு உள்ளும் ஊடுருவி இருக்கிறது. இந்தச் சக்தியை சரிப்படுத்துவதன் மூலம் நோயை குணமாக்க முடியும்!

அதாவது, உடலின் பல்வேறு முக்கிய 'சக்கரங்களை' இயக்குவதன் மூலம் அதைச் செய்ய முடியும்.



• கஷ்மா

இந்த சிகிச்சை முறை பழங்காலத்தி லிருந்தே இருந்து வந்திருக்கிறது என் றாலும் இதை முறைப்படுத்தியவர் பிலிப் பைன்ஸ் நாட்டைச் சேர்ந்த சீனரான மாஸ்டர் சோவா கோக் சூவி. நோய்ப்பட்ட பகுதியின் மேற்புறம் உள்ள அசுத்தக் காற்றை கை களால் நீக்குவதும், பிறகு அந்தப் பகுதி யில் காற்றிலுள்ள ஜீவசக்தியை செலுத்து வதும்தான் இந்த சிகிச்சையின் செயல் முறை.

ஏழு வருடங்களுக்கு முன் இதைச் சென்னையில் அறிமுகப்படுத்தியவர் திருமதி கஷ்மா. இவரும் இவர் கணவர் க்ளிஃப் சல்தானாவும் இந்த வகை சிகிச்சையைச் செய்வது மட்டுமல்ல; இதைப் பிறர் அறிந்து கொள்வதற்காக வகுப்புகளும் நடத்துகிறார் கள். கிட்டத்தட்ட எல்லா வகை நோய்களை யும் இதன் மூலம் குணப்படுத்த முடியுமாம்!

"உடலையே தொடாமல், எத்தவித மாத் திரை மருந்தையும் உட்கொள்ளச் செய்யா

மல் தலைவலியிலிருந்து புற்றுநோய் வரை குணப்படுத்துவதாகச் சொன்னால் அதை நம்பக் கொஞ்சம் கஷ்டமாகத்தான் இருக்கிறது" என்றதும், "நீங்கள் நம்பவும் வேண்டாம். நம்பாமல் இருக்கவும் வேண்டாம். நீங்களே ஒருமுறை முயற்சித்துப் பாருங்கள். பிறகு ஒரு முடிவுக்கு வாருங்கள்" என்ற சுஷ்மா, தமது அனுபவங்களைக் கூறக் கூற, நமக்கு வியப்பு அதிகமாகிக் கொண்டே போனது!

மூக்குக் கண்ணாடி அணிந்து கொள்ள வேண்டிய கட்டாயம் ஏற்பட்ட (பவர் - மைனஸ் 3) பத்து வயதுச் சிறுவன் ஒருவனுக்கு இந்த சிகிச்சையைப் பதினைந்து நாட்களுக்கு அளித்ததில், அவன் மூக்குக் கண்ணாடி இல்லாமலேயே தெளிவாகப் பார்க்கும் அளவுக்கு முன்னேற்றம் ஏற்பட்டதாம்!

"இந்திரா நகர் மகளிர் சங்கத்துக்கு ஒரு சமயம் வந்திருந்த க்னிக்ப், இந்த வைத்தியத்தைக் குறிப்பிட்டு, "உங்களில் யாருக்காவது முதுகுவலி இருக்கிறதா?" என்றார். "ஆமாம்" என்று நான் சொல்ல, ஐந்தே நிமிடங்களில் அதை சரி செய்தார். பிரமிப்பு ஏற்பட்டது. இந்த வலி, நிரந்தரமாகக் குணமடைய மேலும் சில சிட்டிங்குகள் தேவைப்பட்டன. ஆர்வம் அதிகமாகிப் போகவே, இந்த முறையைக் கற்றுக் கொண்டு இப்போது நானே ஒரு ப்ராணிக் ஹீலராக இருக்கிறேன்" என்றார் சாரதா மணி.

நாம் விசாரித்ததில், பலரும் திருப்திகரமான விளைவு இருப்பதாகவே சொன்னார்கள். கௌசல்யா என்ற பெண்மணி தமது தீவிர வயிற்றுவலி பெருமளவு குறைந்ததாகச் சொன்னார். ராமமூர்த்தி என்பவர் மஞ்சள் காமாலை நோயிலிருந்து விரைவில்

# மந்திரமில்லே, மாயமில்லே, மாத்திரையுமில்லே!

"அவ்வளவு ஏன், என் கணவர் கூட சிறு வயதிலிருந்தே கண்ணாடி அணிந்திருந்தவர்தான். திருமணத்துக்குப் பிறகு இந்த சிகிச்சை முறையைக் கற்றுத் தேர்ச்சி பெற்ற பின், அதைச் செயல்படுத்திக் கொண்டார். பிறகு மூக்குக் கண்ணாடியின்றியே தம் வேலைகளை கவனித்துக் கொள்ள முடிந்தது அவரால்" என்றார்.

அப்படியானால் தனக்குத் தானே கூட ஒருவரால் இந்த சிகிச்சையை அளித்துக் கொள்ள முடியுமா?

"நிச்சயம் முடியும். வீட்டுக்கு ஒருவராவது இந்த சிகிச்சையைக் கற்றுக் கொண்டால் அவருக்கும் அவர் குடும்பத்தினருக்கும் மிக உபயோகமாக இருக்கும். சின்னச் சின்ன உடல் நலக்குறைவுக்கெல்லாம் டாக்டரிடம் ஓட வேண்டாம்" என்றவர், அலோபதி, ஹோமியோபதி போன்ற பிற மருத்துவ முறைகளில் சிகிச்சை எடுத்தபடியே கூட, பிராண சிகிச்சை முறையையும் கடைப்பிடிக்கலாம். மேலும் சீக்கிரம் குணமடைய முடியும் என்கிறார்.



• வகுப்பும் உண்டு!

குணமடைய இந்த வகை சிகிச்சை முறை பெரிதும் உதவியதாகச் சொன்னார்.

ஒருவேளை நம் நாட்டில் காலகாலமாக இருந்துவரும் திருஷ்டி சுழிக்கும் பழக்கம் கூட இந்த வகை சிகிச்சையின் எளிய வடிவம் தானோ?

— ஜி.எஸ்.எஸ்.

படங்கள் : ஸ்ரீஹரி

**எம்.**ஜி.ஆர் நாடகங்கள் போட்டுக் கொண்டிருந்த கால கட்டம் அது. அவருடைய நாடகங்கள் வடசென்னையில் வால்டாக்ஸ் ரோடு அரங்கில் மட்டும்தான் நடைபெறும். எம்.ஜி.ஆர் மற்றும் எம்.ஆர். ராதா நாடகங்களை வடசென்னைவாசிகள் தான் விரும்பிப் பார்ப்பார்கள்; தென் சென்னைவாசிகளிடையே அவற்றுக்குப் பெரிய அளவில் வரவேற்பு கிடையாது என்று அப்போது ஒருவித கருத்து நிலவி வந்தது.

நாடகங்கள் மூலம் ஒய்.ஜி.பி பிரபலமாக இருந்ததால், எம்.ஜி.ஆருக்கும் அவருக்கும் தொடர்பு ஏற்பட்டு, நாளடைவில் மிக நெருக்கமானார்கள். இதற்கு மிக முக்கியக் காரணம் என்று, ஒய்.ஜி.பி தென்சென்னையில் எம்.ஜி.ஆர். நாடகங்களைப் போட உதவியாக இருந்ததைக் கூறலாம்.

இப்படி ஆரம்பித்த எம்.ஜி.ஆர். ஒய்.ஜி.பி நட்பு, நாளுக்கு நாள் நெருக்கமாகி, எம்.ஜி.ஆர். எங்கள் குடும்ப நண்பராகிவிட்டார். எம்.ஜி.ஆர். சினிமாவில் நுழைந்து, மிகப் பிரபலமாகி, பல உயரங்களைத் தொட்ட சமயங்களிலும், பழைய மாதிரியே எங்கள் குடும்பத்துடன் பழகி வந்தார் என்பதை இப்போது நினைத்தாலும் எனக்கு ரொம்பவும் பெருமையாக இருக்கிறது.

பல சமயங்களில், ஷூட்டிங்கிற்குப் போய் வரும்போது அப்படியே எங்கள் வீட்டுக்கு வருவார் எம்.ஜி.ஆர். எந்தவிதமான 'ரிசர்வேஷனு'ம் இல்லாமல், நேரே சமையல் கட்டுக்கே வந்து விடுவார். "என்ன இருக்கு?" என்பார். 'அய்யங்கார் வீட்டு சமையலறையில் என்ன கிடைக்கும்? வெறும் சைவ ஐட்டங்கள்தான்' என்போம். எங்கள் வீட்டு ரசம் என்றால் அவருக்கு ரொம்பப் பிடிக்கும். கப்பில் வாங்கிப் பருகிவிட்டு, 'எப்படி இத்தனை அற்புதமாய் ரசம் வைக்கிறீர்கள் உங்கள் வீட்டில்?' என்பார். "எல்லாம் எங்கள் வீட்டு சமையல்கார மாமியின் கைவண்ணம்தான்! உங்கள் பாராட்டெல்லாம் அவருக்குத்தான் போய்ச் சேர வேண்டும்" என்று நாங்கள் சொல்லுவோம்.

ஒரு சமயம், பொது நிகழ்ச்சியொன்றில் பேசுகிறபோதுகூட, எம்.ஜி.ஆர். எங்கள் வீட்டு ரசத்தைப் பற்றி ரொம்ப சிலாகித்துச் சொல்லியிருக்கிறார்!

**எ**ங்கள் வீட்டில் நடந்த ஒரு திருமணத்துக்கு எம்.ஜி.ஆர். வந்திருந்தார். அப்போது பேச்சோடு 'எங்கள் பள்ளிக்கூடத்தில் ஆண்டுதோறும் மாணவர்கள் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டிருக்கிறது. ஆண்டுதோறும் புதிய வகுப்பறைகள் தேவைப்படுகின்றன. இந்த வருடமும் புதிய அறைகள் கட்ட வேண்டியிருப்பதால், நன்கொடை கேட்கப் போகிறோம்' என்று சொன்னபோது எம்.ஜி.ஆர், "ஒரு வகுப்பறைக்கு எவ்வளவு டொனேஷன் வேண்டும்?" என்று கேட்டார். 'ஏழாயிரம் ரூபாய்' என்றேன் நான்.

"சரி! நான் இரண்டு வகுப்பறைகளுக்கான செலவை ஏற்றுக் கொள்கிறேன். நாளைக்கு வந்து ஏழாயிரம் ரூபாய் வாங்கிக் கொள்ளுங்கள். அப்புறம் சில நாட்களில் இன்னும் ஏழாயிரம் கொடுத்து விடுகிறேன்" என்றார்.

அதன்படி, நுங்கம்பாக்கத்தில் உள்ள எங்கள் மெயின் ஸ்கூலில் எம்.ஜி.ஆரின் நன்கொடையில் உருவான பிளாக்கிற்கு, அவர்

# கலைஞரை மடக்கிய கவிதை!

விருப்பப்படியே சத்திய பாமா பிளாக் என்று அவர் அம்மாவின் பெயரிட்டோம். ஆனாலும் இன்றும் அதை மாணவர்களும், ஆசிரியர்களும் 'எம்.ஜி.ஆர். பிளாக்' என்றுதான் குறிப்பிடுவார்கள்!

**இ**ந்தக் கால கட்டத்தில், ஆர்.எம். சேஷாத்ரி என்ற ஓய்வு பெற்ற ஐ.ஏ.எஸ். அதிகாரி, தம் மனைவி பெயரில் பள்ளிக்கூடம் ஆரம்பிக்கும் எண்ணத்தில் இருந்தார். அவருடைய மகள் எங்கள் பள்ளிக்கு வந்து பார்த்தார். இந்தியப் பாரம்பரியம், கலா



## மாதா, பிதா, மாணவன் — 10

சாரங்களையும் பாடத் திட்டத்தில் சேர்த்திருந்தது அவரை ரொம்பக் கவர்ந்தது. மாணவ மாணவிகள் ஸ்லோகங்கள் சொல்லி காலையில் பிரார்த்தனை செய்வது அவருடைய மனத்தைத் தொட்டது. கல்வித் தரத்திலும், பிரபல கான்வென்ட் ஸ்கூல்களுக்கு இணையாக இருந்தது இன்னும் ஒரு பிடித்த அம்சம்! இதையெல்லாம் மனத்தில் வைத்துக்கொண்டு, தன் அப்பாவிடம், இந்தப் பள்ளிக்கூடம் நாம் ஆரம்பிக்கத் திட்டமிட்டுள்ள பள்ளிக்கூடம் போலவே இருக்கிறது' என்று சொல்லியிருக்கிறார்.



அவர் வந்து பார்த்தார். 'இந்தப் பள்ளிக்கூடத்துக்கு என்னுடைய மனைவி பத்மாவின் பெயரைச் சூட்ட விரும்புகிறேன். அது சாத்தியப்படுமா?" என்று ஆர்வமுடன் கேட்டார். நான் பள்ளியின் மற்ற நிர்வாகிகளைக் கலந்து ஆலோசித்து அதற்கு ஒப்புதல் அளித்தேன்.

அப்போது நுங்கம்பாக்கம் லேடீஸ் ரிக்ரியேஷன் கிளப் சார்பில் 'பாலபவன் கல்வி அறக்கட்டளை' என்ற பெயரில் ஒரு டிரஸ்ட் ஆரம்பித்து, 'பாலபவன்' என்கிற பெயரில்தான் பள்ளிக்கூடம் நடத்தப்பட்டு வந்தது. சேஷாத்ரி கேட்டுக் கொண்டதன்பேரில், அவர் மனைவி பெயரையும் இணைத்து பத்மா சேஷாத்ரி பாலபவன்' என்று பள்ளிக்குப் புதுப் பெயர் சூட்ட முடிவானது. இதற்கென்று பதினைந்தாயிரம் ரூபாய் நன்கொடை கொடுத்தார் சேஷாத்திரி.

பாலபவன் பள்ளி, பத்மா சேஷாத்ரி பால பவன் பள்ளியானவுடன், எம்.ஜி.ஆர். உரிமையுடன் என்னிடம் கோபித்துக் கொண்டார். "என்னைக் கேட்டிருந்தால், நான் அந்தப் பதினைந்தாயிரம் கொடுத்திருக்க மாட்டேனா? என் அம்மா பெயரைப் பள்ளிக்கூடத்துக்குச் சூட்டியிருக்கலாமே!" என்றார் எம்.ஜி.ஆர்.

நான் மிகத் தெளிவாக அவருக்குப் பதில் சொன்னேன்.

"நீங்கள் கடவுளை நம்பாத திராவிட முன்னேற்றக் கழகக் கட்சியைச் சேர்ந்தவர். அந்தக் கட்சியின் முக்கியப் பொறுப்பில் இருப்பவர். (எம்.ஜி.ஆர்.தான் அப்போது தி.மு.க.வின் பொருளாளர்) உங்களிடம் நன்கொடையை வாங்கிக்கொண்டு, உங்கள் பெயரையோ, உங்கள் அம்மா பெயரையோ எங்கள் பள்ளிக்கூடத்துக்குச் சூட்டி விட்டால், பின்னர் உங்களது கொள்கையைச் சார்ந்து பள்ளி இயங்க வேண்டும் என்று நீங்கள் இல்லாமல் போனாலும், உங்கள் கட்சியினர் எதிர்பார்க்கலாம். அல்லது, உங்கள் பெயரில் இயங்கும் பள்ளிக்கூடத்தில், நீங்கள் சார்ந்துள்ள கட்சியின் கொள்கைக்கு எதிரான விஷயங்கள் சொல்லித் தரப்படுகின்றன என்கிற விமர்சனம் எழலாம். இது பள்ளிக்கூடத்துக்கும் சரி, உங்களுக்கும் சரி நல்லதில்லை" என்றேன். அவரும் ஒப்புக் கொண்டார்.

## திருமதி ஒய்.ஜி.பி

அவ்வப்போது, பள்ளியின் வளர்ச்சிக்காகத் தேவையான வசதிகளைப் பெருக்குவதற்கு நன்கொடை வாங்குவது வழக்கமாகி விட்டது. தொழிலதிபர்கள், சினிமாக்காரர்கள், நல்ல காரியங்களுக்கு உதவுகிற எண்ணம் கொண்ட 'வெல் விஷர்ஸ்' என்று ஒருத்தரும்

பாக்கியில்லை. பாரிமுனை போன்ற ஏரியாக்களுக்கெல்லாம் போய், கடை கடையாய் ஏறி இறங்கி, நன்கொடை வசூலித்திருக்கிறோம்.

மத்தியதர மக்களிடையே இந்திய கலா சாரத்துடன் தம் குழந்தைகளுக்குக் கல்வி புகட்ட வேண்டும் என்று விரும்பிய மக்கள் மத்தியில் பத்மா சேஷாத்ரி பள்ளி பிரபலமாகி விட்டது. மெட்ரிகுலேஷன் பள்ளியாக வளர்ந்து விட்டபின், நல்ல விளையாட்டு மைதானம் ஒன்று தேவை என்ற எண்ணம் ஏற்பட்டது.

எங்கள் பள்ளிக்கூடத்துக்கு எதிரே அரசாங்கத்துக்குச் சொந்தமான காலி இடம் ஒன்று இருந்தது. மொத்தம் பதினெட்டு கிரவுண்டு நிலம்.

'அந்தப் பதினெட்டு கிரவுண்டு நிலத்தையும் எங்கள் பள்ளிக் கூடத்துக்குக் குத்தகைக்குக் கொடுக்க வேண்டும்' என்று அரசிடம் விண்ணப்பித்தோம். சில சிரமங்கள் இருந்தாலும், எப்படியோ அந்த இடத்தை நாங்கள் அரசாங்கத்திடமிருந்து குத்தகைக்கு எடுத்து விட்டோம்.

சரியானபடி விளையாட்டு மைதானம் இல்லை என்ற குறை நீங்கிய சந்தோஷம் எங்களுக்கு வெகு நாளைக்கு நீடிக்கவில்லை.

ஒரே இரவில் எங்களுக்கு அளித்த குத்தகை ஒப்பந்தத்தை அரசாங்கம் ரத்து செய்து விட்டது.

இது விஷயமாக எங்களால் பெரிதாக ஒன்றும் செய்து விட முடியவில்லை. காரணம், அரசாங்கம் குத்தகைத் தரும் நிலங்கள், அரசாங்கத்துக்குத் தேவைப்படுகிறபோது, அவற்றை மறுபடி எடுத்துக் கொள்ள வழி வகை இருக்கிறது.

சரி! அப்படி, அந்தப் பதினெட்டு கிரவுண்டு நிலத்தை எடுத்துக்கொள்ளும்படி அரசாங்கத்துக்கு என்ன அவசரத் தேவை?

அங்கே வள்ளுவர்கோட்டம் கட்ட அரசு முடிவெடுத்ததுதான்!

விளையாட்டு மைதானத்தை குத்தகைக்குக் கொடுத்த அரசாங்கமே, திரும்ப எடுத்துக் கொண்ட பின் அடுத்து என்ன செய்வது? 'விளையாட்டு மைதானம், பள்ளிக்கூடத்துக்கு அத்தியாவசியமானதாயிற்றே!

மறுபடியும் அரசாங்கத்தையே அணுகினோம். அதுவும் ஒரு நூதனமான முறையில்!

அப்போது தமிழ்நாட்டு முதலமைச்சராக இருந்தவர் கலைஞர் கருணாநிதி. இலக்கியவாதியான அவருக்குப் பிடித்த கவிதை மொழியிலேயே அணுகினோம்.

**வ**ள்ளுவர் கோட்டத்துக்கு அடிக்கல் நாட்டு விழா கோலாகலமாக நடந்தது. அந்த விழாவில் எங்கள் பள்ளிக்கூடத்தைச் சேர்ந்த முரளீதரன் என்கிற மாணவன் ஒரு கவிதை வாசித்தான். அதிலே எங்கள் கோரிக்கையும் சேர்க்கப்பட்டிருந்தது.

பொதுவாக பொன் ஆசை, பெண் ஆசை, மண் ஆசை இவை கூடாது என்பார்கள். ஆனால் எங்கள் பள்ளிக்கூடத்தைப் பொறுத்த வரையில் அவை மூன்றுமே எங்களுக்கு உண்டு. இந்தப் பள்ளிக்கூடம், இந்த அளவு வளர்ச்சி பெற்றிருக்கிறது என்றால், அதற்குப் பல நல்ல இதயங்கள் கொடுத்த நன்கொடை தான் காரணம். இது எங்களுடைய பொன் ஆசை. பெண் ஆசை - அதாவது இந்த தாய் நாட்டின் மீது கொண்ட பற்று காரணமாகத் தான், கல்விச் சேவை செய்து வருகிறது எங்கள் பள்ளி. இப்போது எங்களுக்கு மண் ஆசையும் வந்துவிட்டது. அதற்குக் காரணம், எங்களுக்கு விளையாட்டு மைதானமாக அரசாங்கம் வழங்கிய இடத்தை, இந்த வள்ளுவர்கோட்டம் கட்டுவதற்காக அரசாங்கமே எடுத்துக் கொண்டு விட்டது. இப்போது எங்களுக்கு விளையாட்டு மைதானம் இல்லை. எங்கள் தேவையின் முக்கியத்துவத்தை உணர்ந்து, மறுபடியும் எங்களுக்கு விளையாட்டு மைதானத்துக்காக நிலம் வழங்கும்படி வேண்டுகிறோம்.

இதுதான் எங்கள் மாணவன் படித்த கவிதையின் சாரம்!

முதலமைச்சர் கலைஞர் கவிதையை ரசித்துவிட்டு அத்துடன் விட்டுவிடவில்லை. அமைச்சர் நெடுஞ்செழியனைச் சந்தித்துப் பேசும்படிக் கூறினார்.

நெடுஞ்செழியனைச் சந்தித்து, கோரிக்கையைக் கொடுத்தோம். வள்ளுவர் கோட்டத்தின் பின்பகுதியில் இருந்த இடத்தை, பள்ளிக்கூடத்துக்கு விளையாட்டு மைதானமாகப் பயன்படுத்திக் கொள்ள வசதியாக குத்தகைக்குக் கொடுத்தது அரசாங்கம். (இப்போது டென்னிஸ் கோர்ட் இருக்கிறதே அந்த இடம்!)

நுங்கம்பாக்கத்தில் உள்ள மெயின் ஸ்கூல் உள்ள இடம்கூட இதேபோல அரசாங்கத்திடமிருந்து குத்தகைக்கு வாங்கியதுதான் என்று முன்பே சொல்லியிருக்கிறேன். அந்த இடமும் சரி, இப்போது விளையாட்டு மைதானத்துக்காகக் கொடுக்கப்பட்ட இடமும் சரி, லீஸ் பீரியட் முடியும் முன்பாகவே, மார்க்கெட் ரேட்டுக்கு அரசாங்கத்திடம் பணம் கொடுத்துச் சொந்தமாகவே வாங்கி விட்டோம்!

(இன்னும் சொல்லுவேன்)

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 1999

**வாசகர்களையும் எழுத்தாளராக்கும் போட்டி!**

**ரொக்கப் பரிசோடு புத்தகப் பரிசு!**

படைப்பாளிகளே, வாசக எழுத்தாளர்களே! நீங்கள் அனைவரும் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் சிறுகதைப் போட்டி வந்தே விட்டது!

**முதல் பரிசு** — ரூ. 5000

**இரண்டாம் பரிசு** — ரூ. 3000

**மூன்றாம் பரிசு** — ரூ. 2000

தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ. 500 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர் எனில், வழக்கம் போல் போனஸ் உண்டு!

இவற்றோடு, பரிசு பெறுபவர்களுக்கு மட்டுமல்ல; பிரசுரத்துக்குத் தேர்ந்தெடுக்கப்படும் கதைகளை எழுதிய கதாசிரியர்களுக்கும் **சுந்தா** எழுதிய **பொன்னியின் புதல்வர்** (அமரர் கல்கியின் வாழ்க்கை வரலாறு) நூலும் பரிசாக அளிக்கப்படும்.




***விதிமுறைகள் :***

- சரித்திரம், சமூகம், மர்மம், நகைச்சுவை என எப்படிப்பட்ட கதையாகவும் இருக்கலாம். கதை உங்கள் சொந்தக் கற்பனையாக இருக்க வேண்டும்; அவ்வளவுதான்!
- கல்கியில் 4 பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்படமாட்டா.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும் போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதி மொழி தர வேண்டும்.
  - முழு வெள்ளைத் தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
  - தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
  - ஒருவரே எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- பரிசுக்குரிய கதைகளை நடுவர்குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே இறுதி.
- முடிவு வெளியாகும் வரை, எவ்வித கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.
- **'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 1999'** என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி:

**ஆசிரியர், கல்கி, 47, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.**

- கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : ஜூன் 15.
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 1 ஆண்டு மலரில் வெளியாகும்.

***படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்து கொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்.***

— **ஆசிரியர்**



• மனோகர்



• வாத்யார் ராமன்

நாடக அகாடமி அமைப்பும், பிரியா விஷன் நிறுவனமும் இணைந்து மே மாதம் முதல் தேதியிலிருந்து பதினாறாம் தேதி வரை சென்னை நாரத கான சபாவில் நாடகத் திருவிழா நடத்தப் போகின்றன. கடந்த ஐம்பது ஆண்டுகளில், தமிழ் நாடக உலகில் சாதனை படைத்த முக்கியமான நாடகங்கள், இவ்விழாவில் மறுபடி மேடையேற உள்ளன.

நாடகத் திருவிழாவில் நாடகம் போட இருப்பவர்களுள் சிலர் பழைய நினைவுகளை அசைபோடுகிறார்கள் :

# சினிமாவாக்கப்பட்ட நிங்கமய்யங்கார் பேரன்!

**ராதாரவி:**

**கோ**வையில் ஒருவர் 'சுமதியின் சபதம்' என்று ஒரு நாடகம் போட்டுக் கொண்டிருந்தார். என் அப்பா எம்.ஆர். ராதாவுக்கு அந்த நாடகம் ரொம்பப் பிடித்துப் போய் விட்டது. அதை வாங்கி, மெருகூட்டச் செய்து, ரத்தக் கண்ணீராக மேடையேற்றினார். என் அப்பாவுக்குப் பின் எம்.ஆர்.ஆர். வாசு இந்த நாடகத்தைப் போட்டுக் கொண்டிருந்தார். இப்போது நான் போட்டுக் கொண்டிருக்கிறேன். நாற்பத்தெட்டாம் வருஷத்தில் அரங்கேற்றம் செய்யப்பட்ட 'ரத்தக் கண்ணீர்' நாடகத்துக்கு இது பொன் விழா ஆண்டு.

54-ம் வருடம், ரத்தக் கண்ணீர் திரைப் படமாக வெளியானது. அதற்கப்புறமும் தொடர்ந்து நாடகமாக இதை ரசிக்கிறார்கள் என்பது குறிப்பிடத்தக்க சாதனை! காலத்துக்கேற்ப சில வசன மாற்றங்களை நான் செய்தபோது, மக்கள் அதை ரசிக்கவில்லை. ''ரத்தக் கண்ணீர் போடச் சொன்னா, உங்க இஷ்டத்துக்கு வசனம் மாத்தி செத்தக் கண்ணீர் போடுறீங்களே!'' என்று கேட்கிறார்கள். இன்றைக்கு



• ஒய்.ஜி. மகேந்திரா

எய்ட்ஸ் விழிப்புணர்ச்சி நிகழ்ச்சிகளில், பெரும்பாலும் ரத்தக் கண்ணீர் நாடகம்தான் போடப்படுகிறது!

**மேஜர் சுந்தரராஜன் :**

நான் மேடையேற்றவிருக்கும் 'ஞான ஒளி' சூப்பர் ஹிட் நாடகம். நான் நாடகத்தில் ஏற்று நடித்த கேரக்டரில்தான், ஞான ஒளி படத்தில் சிவாஜி நடித்தார். ஒரு தடவை நாடகம் பார்த்து விட்டு, ஒரு முஸ்லிம் பெரியவர் என்னிடம் வந்து கைகளைப் பிடித்துக் கொண்டு, "கிறிஸ்தவக் குடும்பத்தை வைத்துக் கொண்டு அற்புதமாக டிராமா போட்டிருக்கிங்க. நான் ரெண்டு லட்சம் ரூபாய் தரேன். முஸ்லிம் குடும்பத்தை வெச்சு, இதே மாதிரி பிரமாதமா ஒரு டிராமா போடுங்களேன்" என்றார். "எனக்கு ரெண்டு லட்ச ரூபாய் தர வேணாம், பிரமாதமான கதை ஒன்று கொடுங்கள்; அது போதும்" என்றேன் அவரிடம்!



• ராதா ரவி



• காத்தாடி ராமமூர்த்தி

**ஆர். எஸ். மனோகர் :**

இலங்கேஸ்வரன் நாடகம் அமோக வெற்றி பெற்றபின் நான் அரங்கேற்றியது சாணக்கிய சபதம். ராவணன் கெட்-அப்பில் கம்பீரமாகத் தோன்றியதை அடுத்து மெலிந்த உடம்புடைய அந்தணர் சாணக்கியராக நான் மேடையில் தோன்றினால், மக்கள் ஏற்றுக் கொள்வார்களோ என்று சந்தேகத்துடன்தான் நாடகத்தை அரங்கேற்றினேன். ஆனால், மக்கள் ரொம்ப ரசித்தனர். வழக்கமான தந்திரக் காட்சிகள் கூட இதில் இல்லை. (ஒரு காட்சியில் எலும்புக் கூடு 'மனச்சாட்சி' போல பேசுவது தவிர) சி. சுப்ரமணியம், எம்.ஜி.ஆர்., கலைஞர் போன்ற பல அரசியல் தலைவர்களும் பார்த்துப் பாராட்டிய நாடகம் இது. 67-ல் அரங்கேறி 78 வரை அறுநூறு தடவைகளுக்குமேல் இந்தியாவிலும், வெளிநாடுகளிலும் இந்த நாடகத்தைப் போட்டிருக்கிறேன்.

**ராது :**

எனது 'கல்யாணத்தில் கலாட்டா' 35 வருடங்களில், ஆயிரத்துக்கும் அதிகமான தடவை மேடையேறி விட்டது! ஒருமுறை பெங்களூரில் கல்யாணத்தில் கலாட்டா நாடகம் நடந்து கொண்டிருந்தது. ஏழாவது சீனில் ஒரு குறிப்பிட்ட நடிகர் மேடைக்கு வர வேண்டும். ஆறாவது சீன் நடந்து கொண்டிருந்தபோது, ஏழாவது சீனில் வர வேண்டியவருக்கு சிக்னல் கொடுக்க மேக்-அப் அறைக்குப் போனால், அவர் ஓரமாக ஒரு பெஞ்சில் படுத்துக் கொண்டிருந்தார். கூப்பிட்டால் பதிலில்லை. தொட்டுப் பார்த்தால் கடும் ஜுரம். அவர் இனி நடிப்பது என்பது சாத்தியமில்லை. பார்த்தேன். சட்டையை இன் பண்ணிக் கொண்டு, அவர் ஒட்டிக் கொள்ள வேண்டிய தாடியை நான் ஒட்டிக் கொண்டேன். நேரே மேடைக்குப் போய், 'என்ன பஞ்சாபகேசன்?' என்று வசனத்தை ஆரம்பித்தேன். ஒருகணம் மற்ற நடிகர்கள் அதிர்ச்சியடைந்தாலும், உடனடியாய்ச் சமாளித்து, நாடகத்தைத் தொடர்ந்தோம். கல்யாணத்தில் கலாட்டா நாடகத்தை கல்யாண ரிசப்ஷனிலும் நாங்கள் போட்டிருக்கிறோம்!

**வி.எஸ். ராகவன் :**

எம்லின் வில்லியம்ஸ் என்ற ஆங்கில நாடக ஆசிரியர் எழுதிய யாரோ காத்திருக்கிறார்கள் (சம் ஒன் ஈஸ் வெயிட்டிங்) என்ற நாடகத்தைப் படித்தபோது நான் அசந்து போனேன். அதைத் தமிழில் மொழி பெயர்த்து, நாடகமாகப் போட, அவரிடம் அனுமதி கேட்டு வாங்கினேன். டைரக்டர் கே. பாலசந்தர் மிக அற்புதமாக அதைத் தமிழில் எழுதித் தந்தார். நாடகம் முழுக்க ஒரே செட்டில் நடைபெறும். கிரைம் - சென்டிமென்ட் சப்ஜெக்ட். ஒரு கட்டத்தில், நாகேஷ் இதில் நடித்திருக்கிறார். வசனத்துக்கு


• மேஜர்


• பூர்ணம்


• ராது

முக்கியத்துவம் கொடுக்கும் நாடகம் என்பதால், முதலில் சபாக்களில் இதற்கு வரவேற்பு இல்லை. அரங்கேற்றத்துக்குப் பின் நல்ல வரவேற்பு. நாடகம் செஞ்சுரி போட்டது. அதில், ஹீரோவாக நடித்த இளைஞருக்கு இப் போது வயது எழுபது!

**காத்தாடி ராமமூர்த்தி :**

**வி**சு எழுதின நாடகம் 'டௌரி கல்யாண வைபோகமே!' முதலில் ஒரு பிரபல நாடகக் குழுவிடம் சப்ஜெக்டைச் சொல்லி, அப்ரூவல் வாங்கி, மொத்த ஸ்கிரிப்டையும் எழுதி முடித்து விட்டார் விசு. கடைசியில் டௌரி பிரச்னையை மேடையில் நாடகமாகப் போட்டால் யார் பார்ப்பார்கள் என்று சொல்லி விட்டார்கள் அந்தக் குழுவினர். அதுவரை காமெடி நாடகங்கள் போட்டுக் கொண்டிருந்த என்னிடம், டௌரி கல்யாணம் ஸ்கிரிப்டைக் கொடுத்தனர் விசுவும் அவரது சகோதரர் ராஜாமணியும். எனக்குப் பிடித்துப் போனது. 82-ல் அரங்கேறின நாடகம், இன்று போட்டாலும் ரசிகர்களிடம் அதே வரவேற்பு. 'டௌரி'யின் சக்தி அத்தகையது!!

**பூர்ணம் விஸ்வனாதன் :**

**டி**.வி. கோபாலகிருஷ்ணன், ராஜீவ் காந்தி நினைவாக, ஒரு கலை விழா நடத்திய போது, தேசிய ஒருமைப்பாட்டை வைத்து ஒரு நாடகம் போடச் சொன்னார். விஷயத்தை எழுத்தாளர் சுஜாதாவிடம் சொன்னபோது, பத்தே நாளில் எழுதிக் கொடுத்த நாடகம்தான் சிங்கமய்யங்கார் பேரன்! அய்யங்கார் - சர்தார்ஜி குடும்பக் கதை. இந்த நாடகம் பார்த்து, ரொம்ப இம்ப்ரஸ் ஆன இயக்குனர் மணிரத்னம் கதையைக் கொஞ்சம் மாற்றி எடுத்த படம்தான் பம்பாய்.

**ஒய்.ஜி. மகேந்திரா :**

**ர**கசியம் பரம ரகசியம் நாடகத்துக்கு இது வெள்ளி விழா ஆண்டு. ரொம்ப ஜாலியான நாடகம் என்பதால், வயசு வித்தியாசமின்றி அனைவரையும் கவர்ந்தது. இப்போது டீ.வி. தொடர்கள் மூலம் தூள் கிளப்பிக் கொண்டிருக்கும் வெங்கட், நாடக ஆசிரியராக அறிமுகமானது இந்த நாடகத்தில்தான். அண்மையில் அமெரிக்கா, சுவிட்சர்லாந்து போயிருந்த போது கூட, ரகசியம் பரம ரகசியம் நாடகத்தை மட்டும் பத்து தடவை போட்டோம். இன்னொரு விசேஷம் : இருபத்தைந்து வருடங்களாக இரண்டு பேர் இந்த நாடகத்தில் தொடர்ந்து நடித்துக் கொண்டிருக்கிறார்கள். ஒன்று சுப்புணி. இரண்டாவது அடியேன்.

**வாத்யார் ராமன் :**

**எ**ட்டயபுரத்துக்கு பாரதியார் விழாவில் கலந்து கொள்வதற்காகச் சென்ற போது, வழியில் பானைகளுடன் கால் கடுக்க நடந்து சென்ற பெண்கள்தான் கோமலுக்குப் பொறி. அதன் தாக்கத்தில் எழுதியதுதான் தண்ணீர் தண்ணீர். நாடகத்தை அரசு தடைசெய்து விடும் என்று பரபரப்பாகப் பேசப்பட்டது. அரங்கேற்றத்துக்கு முந்தைய தினம்தான், போலீஸ் அனுமதி கிடைத்தது. பல தடவை மேடை ஏறினாலும், தண்ணீர் தண்ணீர் சினிமா வந்தபின், நாடகம் போடுவதை நிறுத்தி விட்டோம். இப்போது மறுபடி போடுகிறோம்.

தொகுப்பு : **கௌதம்**

# லாலுவின் நாலுநாள் கண்டுபிடிப்பு!

கோவை அவினாசிலிங்கம் மனைஇயல் கல்லூரி மாணவிகள் அண்மையில் சென்னைக்கு சுற்றுலா வந்திருந்தனர். ஒரு வேன் எடுத்துக் கொண்டு, சென்னையைச்



• கீதா

• செளம்யா

சுற்றினார்கள். வழிநெடுக ஒரே சிரிப்புதான்! அவர்கள் அ(க)டித்த ஜோக்குகளில் சிலவற்றின் தொகுப்பு :

**சுமதி** : முன்னேயெல்லாம் சர்தார்ஜி ஜோக்ஸ் பிரபலம். இப்போ, லாலு ஜோக்ஸ் தான் பிரபலம். வட இந்தியப் பத்திரிகைகளில் ஏகமா லாலு - ராப்ரி ஜோக்ஸ்தான் வருது.

**சுப்ரியா** : லாலு ஜோக்ஸ்ல புதுசு ரொம்பக் குறைச்சல். பழைய சர்தார்ஜி ஜோக்குகளை, லாலு ஜோக்ஸா மாத்தி சொல்றாங்க.

**ராதிகா** : சரி! ஒரு லாலு ஜோக் சொல்லேன்?

**சுமதி** : லாலு ஜெயில்ல இருக்காரு. போர் அடிக்குது. ஜெயிலர்கிட்ட போய், நேரம் போக ஏதாவது வழி கேட்கிறாரு. ஜெயிலர் ஒரு puzzle கேம் தந்து, இதை சால்வ் பண்ணுங்கன்னு சொல்றாரு. லாலு பயங்கரமா சோறு தண்ணி இல்லாம டிரை பண்ணறாரு! நாலாவது நாள் ஒரு வழியா விடை கண்டுபிடிச்சிடறாரு. சந்தோஷமா ஜெயிலர்கிட்ட வந்து சொல்றாரு. ஜெயிலர் கேட்கிறார் :

''அதுல என்ன போட்டிருக்கு?''

"2-3 இயர்ஸ்."

''அப்படின்னா என்ன அர்த்தம்?''

''இதற்கு விடை கண்டுபிடிக்க இரண்டு அல்லது மூணு வருஷம் ஆகும். ஆனா நான் நாலே நாள்ல கண்டு பிடிச்சிட்டேன்.''



• ஷர்மிளா • சுப்ரியா • சுமதி



(குரலில் சந்தோஷம்)

"உளறாதீங்க. இது இரண்டு – மூனு வயசு குழந்தைகளுக்கான puzzle."

**சுபாப்ரியா :** ஒரு சர்தார்ஜி ஜோக் சொல்லட்டுமா? ரயில்ல பிரயாணம் பண்ணினார் ஒரு சர்தார்ஜி. டாய்லெட் கதவைத் திறந்துகிட்டு உள்ளே நுழையப் போனவர், அங்கே இருந்த பெரிய கண்ணாடில் தெரிஞ்ச தன் உருவத்தை, வேறு ஒரு சர்தார்ஜி உள்ளே இருக்கார்னு நினைச்சு, வெளியில வந்துட்டாரு. மறுபடியும் போனாரு. கண்ணாடியில தன்னைப் பார்த்திட்டு, வேற சர்தார்ஜின்னு மிஸ்டேக் பண்ணிக்கிட்டு வெளியில வந்திடறாரு. இதே போல ஏழெட்டு தடவை. நொந்து போயிட்டார். டி.டி.கிட்ட போய்ப் புகார் பண்ணினாரு. 'சரி! நான் போய் பார்க்கிறேன்னு சொல்லிட்டு, டாய்லெட் கதவைத் திறந்தாரு. 'சே! உள்ள இருக்கிறது சர்தார்ஜி இல்லே. ஒரு டி.டி! எனவே, என் சகாவை நான் டிஸ்டர்ப் பண்ண முடியாது'ன்னு சொல்லிட்டாரு.

**ராஜேஸ்வரி :** செமை ஜோக்யா! நான் இன்னொரு ஜோக் சொல்லட்டா! ஒருத்தன் ஏர்போர்ட்டுக்குப் போனானாம். ஏர்போர்ட்கிட்டே போனதும், உள்ளே போகாம, திரும்பிட்டானாம். ஏன்?

**ப்ரியா :** ஏன்.. தெரியலையே?

**ராஜேஸ்வரி :** ஏர்போர்ட்கிட்டே, ரோடுல, "airport left" ன்னு போட்டிருந்ததாம்.

**மகேஸ்வரி :** ஏன் 'தாய்மொழி'ன்னு சொல்றோம்? தெரியுமா? வீட்ல அம்மாக்கள் மட்டும்தானே பேசறாங்க. அப்பாக்கள் பேச ஏது சான்ஸ்? அதனாலத்தான்.

**ஷர்மிலி :** ஒருத்தன் ஹோட்டலில் தங்கியிருந்தான். ரூம் சர்விஸை இன்டர்காமில் கூப்பிட்டு, 'புது டவல் ஒண்ணு வேணும். அனுப்ப முடியுமா?' என்று கேட்டான். ரூம் சர்வீஸ் பையன் சொன்ன பதில் : "ஐந்து நிமிடமாகும். இப்போதான் ஒருத்தர் அந்த டவலை யூஸ் பண்ணிக்கிட்டிருக்கார்!"

**சௌம்யா :** நான் ஒரு சூப்பர் ஜோக் சொல்லட்டா? கேரளாவுல, ஒரு எலெக்ட்ரிக் பல்ப் ஃப்யூஸ் போயிட்டா, அதை மாத்த எத்தனை பேர் வேணும் தெரியுமா? ஒரு ஆள் அந்த பல்பை மாற்ற! அந்த ஆளுடைய உரிமைகளைப் பாதுகாக்க வேணாமா? அதுக்காக சி.பி.எம். சார்புல தொழிற்சங்கம் நடத்த இருபது பேர். சி.பி.ஐ. தொழிற்சங்கம் நடத்த இருபது பேர். மின்சார பல்பு விவகாரங்களைக் கவனிக்க ஓர் அமைச்சர். மின்சார பல்பு கழகத்துக்குத் தலைவரா ஒருவர். அனைத்துக் கட்சி சார்பில் அந்தக் கழகத்துக்கு 25 உறுப்பினர்கள், அறுபது எம்.எல்.ஏ.க்கள் கொண்ட குழு ஐரோப்பா போய், எலக்ட்ரிக் பல்ப் பற்றித் தெரிந்து கொள்ள. தவிர, பல்ப் மாற்றும் தொழிலாளர் யூனியன் எப்படி செயல் படுதுன்னு அறிய அமெரிக்கா போக இருபது எம்.எல். ஏக்கள் குழு, ரஷ்யா போக இருபது எம்.எல்.ஏக்கள் குழு...

**கோரஸாக :** ஐயோ சாமி! ஆளை விடு!

தொகுப்பு : **மானஸா**

படங்கள் : **ஸ்ரீஹரி**

## கவர்ச்சியான மனிதர்?

பாராளுமன்ற உறுப்பினர்களிலேயே மிகவும் கவர்ச்சியான ஆண்களில் பத்து பேர் யாரென்று 'காஸ்மோபாலிடன்' பத்திரிகை ஆய்வொன்றை நடத்தியபோது முதலிடத்தைப் பெற்றவர் யார் தெரியுமா?

பெண் பத்திரிகையாளர்கள், திரைப்படத் தயாரிப்பாளர்கள் மற்றும் அரசியல் நோக்கர்களிடையே நடைபெற்ற இந்த ஆய்வில் முதலிடத்தைப் பெற்றிருப்பவர் ராணுவ மந்திரி ஜார்ஜ் பெர்னான்டஸ்! அடுத்த ஒன்பது பேரில் சபாநாயகர் பாலயோகியும் ஒருவர்! 68 வயதாகும் ஜார்ஜ் பெர்னான்டஸைத் தேர்ந்தெடுக்கக் காரணம் அவரது உணர்ச்சிபூர்வமான செயல்பாடு, திறமை மற்றும் விவேகம் என்கிறார்களாம்!

நன்றி: சண்டே ஆஃப்டர்நூன்
தகவல்: அ. குமார்



**விளையாத பண்ணையில் விலை போன திராட்சை பற்றிப் பத்தி பத்தியாகப் படித்த நமக்கு இந்தப் பண்ணை சற்றே புதுசு...**

# பணம் காய்க்கும் மரங்கள்!



• முத்துமல்லா

மதுராந்தகத்திலிருந்து பத்து கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது பொலம்பாக்கம் கிராமம். விவசாயத்திற்கு மழையை நம்பியிருக்கும் வரண்ட பகுதி. மானாவாரி விவசாயம். ஆனால், இங்கே 25 ஏக்கர் நிலப்பரப்பில், மரங்கள் நிறைந்த ஒரு பண்ணை இருக்கிறது. ஒரு இம்மி கூட வீணாக்காமல், அந்தப் பண்ணையைச் சோலையாக்கியிருக்கிறார் முத்து மல்லா என்கிற 87 வயது நிரம்பிய விவசாயி.

இந்தப் பண்ணையில் இருக்கும் மர வகைகளின் பெயர்களையே இரண்டு பக்கத்திற்கு சொல்லலாம். நமக்கு நன்கு பரிச்சயமான மா, வாழை, தென்னை, புளிய மரங்களுடன், மகோகனி, செம்மரம், அசோகமரம், தேக்குமரம், சந்தனமரம், போதிமரம்(!) போன்ற வித்தியாசமான மர வகைகள் எங்கும் நிறைந்திருக்கின்றன பண்ணை முழுக்க.

மரங்களின் மேல் தமக்கு ஈடுபாடு வந்த கதையை விவரிக்கிறார் முத்துமல்லா :

"ஐம்பது வருஷத்துக்கு முன்னால ஒரே ஒரு கிணறும், ஐந்து ஏக்கர் நிலமும்தான் எங்களுக்குச் சொந்தமா இருந்தது. அப்புறம் தான் மத்ததை வாங்கினோம். அப்போ, எங்கப்பாவே மாஞ்செடியையும், செம்மரத்தையும் இங்க நட்டு வச்சிருந்தாரு. நான் விவசாயம் பண்ண ஆரம்பிச்சப்போ, அரை ஏக்கர்ல திராட்சையும், ஒன்றரை ஏக்கர்ல எலுமிச்சையும், ரெண்டு ஏக்கர்ல சாத்துக்குடியும் போட்டேன். அப்போ நூறு எலுமிச்சை மூணு அணா. இதை மெட்ராசுக்கு எடுத்துட்டுப் போயி விக்கணும். எலுமிச்சைக்கு விலையில்லை. எல்லாம் பூச்சி அடிச்சி செத்துருச்சு. அப்புறம் மாஞ்செடி, பாக்குமரம், இலவமரம், மிளகு கொடி வைச்சேன். இருபது சென்ட்ல 'காப்பி' போட்டேன். மிளகும் பாக்கும் புயல்ல விழுந்துருச்சு. அப்புறம் கொஞ்ச கொஞ்சமா இந்த மண்ணுக்கு ஏத்த மாதிரியும், தட்பவெப்ப நிலைக்கு ஏத்த மாதிரியும் சாகுபடி பண்ண ஆரம்பிச்சேன். வித விதமா, வகை வகையா மரங்களை வளர்க்க ஆரம்பிச்சேன். வெற்றியும் கிடைச்சது. நான் எங்கெல்லாம் போனாலும், விதவிதமான தாவர வகைகளை சேர்க்க ஆரம்பிச்சேன். மகோகனின்னு ஒரு மரம். அமெரிக்க வெள்ளை மாளிகையிலும், இங்கிலாந்து எலிசபெத் ராணி அரண்மனையிலும் கதவு, ஜன்னல், டேபிள், நாற்காலில்லாம் இந்த மரத்துலதான் செஞ்சது. தேக்குமரத்தை விட உயர்ந்தது! மெட்ராஸ்ல ஒரு நர்சரிக்காரர் ஒரு மரம் மூணு ரூபான்னு 150 மரக்கன்றுகளைக் குடுத்தாரு. நானும் வேன்ல ஏத்திட்டு வந்து நட்டேன். இப்படித்தான். ஒவ்வொரு மரத்துக்கும் ஒவ்வொரு கதை இருக்கு."

'திருவோடு' மரம், அன்னாசி, தீக்குச்சி மரம், சப்போட்டா, பூலோக பாரிஜாதம், இருவாட்சி, நாகலிங்கம் எனப் பல வகை மரங்கள். குலை குலையாகக் காய்த்து நிற்கும் மாமரங்கள், பலா மரங்கள். அடர்ந்த பண்ணையில் வெயில் உறைக்காமல் நிழல். தாவரவியல் ஆய்வாளர்களும், விவசாயப் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்தவர்களும் இந்தப் பண்ணைக்கு அடிக்கடி வந்து போகிறார்கள். காஞ்சிப் பெரியவர், சின்மயானந்தா, ரங்கநாதானந்தா போன்ற பெரியவர்கள் இங்கு வந்து நட்டு வைத்த மரங்கள் வளர்ந்து நிற்கின்றன.

முத்துமல்லாவின் மகன் முத்துக்குமரப்பா சொல்கிறார் :

"நிறைய விவசாயிகளுக்கு இது ஒரு முன் மாதிரிப் பண்ணை. மாற்றுப் பயிர் வைப்பு, பல அடுக்கு முறை, சொட்டு நீர்ப்பாசனம் என திட்டமிட்டு என் அப்பா மேற்கொண்ட முயற்சிகளுக்கு வெற்றி கிடைத்திருக்கு. நாலு ஏக்கர் நிலம் ஒரு விவசாயிக்கு இருந்தா, அதுல கொஞ்ச நிலத்தை மரம் வளர்க்கப் பயன்படுத்தலாம். கொஞ்ச நாள் காத்திருந்தா நிறைய பலன் கிடைக்கும்! நிலத்தோட தன்மைக்கேற்ப அடுக்குமுறைல, (Tier System) 2 அடுக்கு, 8 அடுக்குன்னு சாகுபடி பண்ணினாலே போதும். நிலத்தையும் வேஸ்ட் பண்ணாம, நீரையும் வேஸ்ட் பண்ணாம பலனை அனுபவிக்கலாம்.

"மரத்தோட அருமை நம் மக்களுக்குத் தெரிய மாட்டேங்குது. புயல்ல கொஞ்ச மரம் (மகோகனி) எங்க தோட்டத்துல விழுந்துடுச்சு. அதை 'மார்க்கெட்' பண்ண முடியலை. நிறைய மரம் வளர்க்கறதால மண் அரிப்பைத் தடுக்கலாம். சுற்றுப்புறச் சூழலைப் பாதுகாக்கலாம். இதையெல்லாம் விவசாயிகளுக்கு எடுத்துச் சொல்லணும்" என்றார் முத்துமல்லாவின் இன்னொரு பிள்ளை கிருஷ்ணமூர்த்தி.

'தேக்கு மரத் திட்டம்', 'வேப்பமரத் திட்டம்' என்ற விதவிதமான முஸ்தீபுகளுடன் மக்களை ஏமாற்றி, பணம் பிடுங்கி, கம்பி நீட்டி விடும் பல்வேறு பிளான்டேஷன்ஸ் நிறுவனங்கள் குறித்த விழிப்புணர்வு ஏற்பட்டிருக்கும் இன்றைய சூழலில், மரம் வளர்ப்பதால் கிடைக்கும் பயனையும் நாம் அறிந்து கொள்ளத்தான் வேண்டும்.

முத்துமல்லா சொன்னார்: "எங்க பண்ணைல 1000 தேக்குமரம் இருக்கு. ஒரு தேக்கு மரம் குறைஞ்சது 30,000 ரூபாய்னா மொத்தம் எவ்வளவு ஆச்சு, கணக்குப் பண்ணிக்கங்க."

**— கே. பாலசுப்ரமணியன்**

---

**"காசில்லாம சாப்பிட்டதுக்கு தான் மாவாட்டிடுறேன்னு சொல்றேனே... பிறகு ஏன் உங்க வீட்டு விசிட்டிங் கார்டைத் தர்றீங்க?"**

**"என் வீட்டுக்குப் போயி எனக்குப் பதிலா நீ மாவாட்டிட்டு வந்திடு."**

**— ஓரியூர் கே. சேகர்**



# நினைத்தாலே முக்தி தரும் அண்ணாமலையில் தானத்திலே சிறந்த அன்னதானம் செய்வோம் வாருங்கள்...



- ௐ அடிமுடி காண முடியாத ஜோதி மலையான திருவண்ணாமலை யில் மாதாமாதம் பௌர்ணமியன்று லட்சோப லட்ச மக்கள் கூடி கிரிவலம் வருவது நாம் அறிந்ததே.
- ௐ அவ்வமயம் மடாதிபதிகளும், பீடாதிபதிகளும், லட்சாதிபதிகளும் மற்றும் ஆன்மீக அன்பர்களும் அன்னதானம் செய்து புண்ணியம் பெறுவது நாம் கண்டதே.
- ௐ ஆன்மீகத்தில் நாட்டங்கொண்ட பயர் தான மனமிருந்தும் பணம் இல்லாத காரணத்தால், புண்ணியம் தரும் தேவரகசியமான அன்னதான பெருமையை தெரிந்திருந்தும், செய்ய வழியறியாத இல்லறவாசிகளுக்கு ஓர் அரிய வாய்ப்பு ஏற்படுத்தியுள்ளோம்.
- ௐ இலட்சியங்களை நிறைவேற்ற லட்சங்கள் தேவையில்லை அன்னதானமே அஷ்ட தரித்திரத்தைப் போக்கி அஷ்ட ஐஸ்வர்யங்களைத் தரவல்லது!
- ௐ அணையா அடுப்பை மூட்டி வற்றாமல் அன்னதானம் செய்து கொண்டிருக்கும் வடலூர் வள்ளலார் நெறியில்-
- ௐ அன்னதானமே உன்னத தானம் எனும் வாரியார் வாய்மொழியில் நாமும் செய்வோம் அன்னதானம்.

**மாதாமாதம் பௌர்ணமி அன்று அன்னதானசெய்ய "ஆன்மீக அன்னதான அறக்கட்டளை"யில் நீங்களும் பங்கு கொள்ளுங்கள்.**

- ௐ ஆன்மீக அன்னதான அறக்கட்டளை மூலம் உடல் ஊனமுற்றோர்கள், கண்பார்வையற்றோர்கள், ஆதரவற்ற முதியோர் கள் - விதவைகள் - ஏழை கள் என அனைவருக்கும் அன்னதானம் செய்ய, தாங்கள் இப்புனித பணிக்கு தங்களால் இயன்ற நன்கொடை செய்ய அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.
- ௐ தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக் கொள்கிறோம்.
- ௐ இந்த ஆன்மீக முயற்சியில் தாங்களும் பங்கேற்று இந்த சேவையை நன்றாக செய்ய எங்களுக்கு ஊக்கமளிக்க வேண்டுமென பிரார்த்தித்துக் கொள்கிறோம்.
- ௐ இந்த கைங்கரியத்தில் பங்குபெறும் ஆன்மீக அன்பர்களை, எமது 'ஆன்மீகம்' இதழில் புகைப்படத்துடன் அறிமுகப்படுத்துகிறோம்.
- ௐ அன்னதானம் செய்யப்படும் மேற்குறிப்பிட்ட நாளில் அன்பர்கள் குடும்பத்துடன் வந்து கலந்து கொள்வது மிகவும் நல்லது. அப்படி வர முடியாதவர்களுக்கு விபூதி, குங்குமம் பிரசாதம் தபாலில் அனுப்பி வைக்கப்படும்.
  - நன்கொடைகள் அவரவர் சக்திக்கு ஏற்ப கொடுக்கலாம். நன்கொடைகள் பணமாகவோ, அல்லது பொருளாகவோ, அதாவது அரிசி, நெல், பருப்பு வகைகள், எண்ணெய், எள், புளி, என்று எந்த பொருளாகவும் கொடுக்கலாம்.
  - பணம் அனுப்புபவர்கள் ஆன்மீக அன்னதான அறக்கட்டளை (*Aanmeeka Annadhana Charitable Trust*) என்ற பெயரில் *Cheque / D.D / M.O.* மூலம் அனுப்பி வைக்கலாம். உடனடியாக தங்களுக்கு *Receipt* அனுப்பி வைக்கப்படும்.
  - பொருள்கள் அனுப்புவோர் *TVS / ABT* மூலமாக திருவல்லிக்கேணி, சென்னை-5க்கு அனுப்பி வைத்து எங்களுக்கு தெரிவித்தால் நாங்கள் உடனே *Delivery* எடுத்துக் கொள்வோம்.

**ஆதரவற்றவர்களுக்கு அளிக்கும் உதவிகள் ஆண்டவனுக்குச் செய்யும் தொண்டாகும் - ஸ்வாமி விவேகானந்தா**

- ரூ.100/- முதல் அவரவர் சக்திக்கு ஏற்றவாறு அனுப்பலாம்.
- ரூ.500/- அனுப்புபவர்களுக்கு, ஆன்மீகம் இதழ் ஒரு வருடத்திற்கு இலவசமாக அனுப்பப்படும்.
- ரூ.1000/- அனுப்புபவர்களுக்கு, ஆன்மீகம் இதழ் இரண்டு வருடத்திற்கு இலவசமாக அனுப்பப்படும்.
- ரூ. 2500/- அனுப்புபவர்களுக்கு, ஆன்மீகம் இதழ் ஐந்து வருடத்திற்கு இலவசமாக அனுப்பப்படும்.



*Cheque / D.D / M.O* அனுப்ப வேண்டிய முகவரி :


## ஆன்மீக அன்னதான அறக்கட்டளை (REGD.)

63, மல்லன் பொன்னப்ப தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 600 005.

தொலைபேசி : 8594741, 8594742, 8594743, 8410633.

ஃபேக்ஸ் : 91 - 044 - 8594561

# ஒட்டம்புல்

காசு. வேலாயுதன்

பேயறைந்ததோ, பிசாசு பிடித்ததோ என்கிறாற்போலத்தான் பேருந்தில் ஏறும்போது கூட முகத்தை வைத்துக் கொண்டிருந்தாள் அம்சவேணி.

சிரையெடுக்காத மஞ்சசோளக் காட்டுக்குள் புகுந்து வந்ததில் உடம்பெல்லாம் குத்திக் குத்தி இம்சிக்கிற ஒட்டம்புல் மாதிரி மனசெல்லாம் ஒட்டிக் கிடக்கும் அச்சம். நெஞ்சு முழுக்க நிரவி வரும் பயம். சேலையெல்லாம் சுருட்டிப் பிடித்து, பிடுங்கும் பிடிப்புக்கும் சேராது, ஒட்டின ஒட்டுக்கும் சேராது உள்ளூர அரித்தெடுக்கிற அரிப்பு. முள்ளு முள்ளாய்க் குத்தும் ரோதனை.

பின் இருக்கையில் உட்கார்ந்திருந்த புருஷனின் முகத்தில் கூடுதலாய் ஏறி நிற்கும் கடுகடுப்பு. 'பொட்டைப் புள்ளை வளர்த்தின பாரு இலட்சணமா!'

கிட்ட மாமியார், மாமனார். முன்புற இருக்கையில் கொழுந்தன். அவன் மனைவி, குழந்தைகள். அனைவரின் முகத்திலும் எள்ளும் கொள்ளுமே வெடிக்கிற தொனி. 'அவர்கள்' குறிப்பிட்ட நேரத்திற்கு ஒரு முக்கால் மணி நேரத் தாமதம். ஏதோ ஒரு யுத்தமே வெடித்து விட்ட மாயத் தோற்றம்.

பத்து மணிக்கு நல்ல நேரம். பன்னிரண்டுக்கு ராகு வந்துடறான். நல்ல நேரம் தொடங்கினதும் புறப்பட்டால்தான் பன்னிரண்டு மணிக்குள் மாப்பிள்ளை வீட்டை எட்ட முடியும். மாமனார் படிச்சுப் படிச்சு சொல்லியிருந்தும் கடைசி நேரத்தில் சிக்கல் வந்து தொலைஞ்சுது. போற நேரத்துல வீட்டில் அடைஞ்சு கிடக்க வேண்டிய கழுதை எங்கே போய்த் தொலைஞ்சான்னு யாருக்குமே தெரியலை.

தறி குடோனில் தார் ஓட்டுகிற காவேரிய விட்டு, பலபக்கம்



தேடிப் பார்த்தாள். இவளும் கள்ளிக்காடு, சுகுணா தோட்டம், கௌசல்யா வீடு, பஞ்சு குடோன்னு அவ போற பக்கமெல்லாம் தேடாத இடமில்லை. எங்கேயும் அவளைக் காணோம்.

'என்ன பேசினே? ஏது பேசினே?' என அக்கம் பக்கம் தோட்டத்துக்காரர்களிட மெல்லாம் கரிசன விசாரணைகள்.

"ஐயோ! இந்தக் காலத்துல வயசுப் புள்ளைகளுக்கு 'ம்'ன்னு ஒரு வார்த்தை சொல்லப்படாது சாமீ. ஆய், ஊய்ன்னா, தூக்குக் கயித் தைத் தூக்கிக்கிறாளுக. அடுத் தவன் ஊட்டுக்கு அனுப்பற வரைக்கும் கொஞ்சம் ஜாக் கிரதையா இருடி அம்சா..."

ஈசானித் தோட்டம் தேவி



மாமியார் சொன்னது நெஞ்சில் நெக்கு நெக்குனு நெட்டி முறிக்குது. "கழுதை வந்தா வீட்லயே போட்டு அடைச்சு வை" - காவேரி யிடம் உத்திரவிட்டு வந்து விட்டாலும் மனசுக்குள் பிடிவாதமாய்க் கூடும் நமச்சல்.

"ஒரு வேளை, அவளுக்கு இந்தக் கல்யா ணத்துல இஷ்டம் இல்லையோ என்னமோ?"

நேரம் காலம் புரியாமல் மாமனாரிடம் மாமியார்க்காரி.

"மாப்பிள்ளை புடிச்சுதான்னு அவகிட்ட அழுத்தமா கேட்டீங்களா?" சந்தேகமாய் கொழுந்தன் சம்சாரம்.

"இதுக்குத்தான் பொட்டைப் புள்ளைய, எட்டாங்கிளாஸுக்கு மேல அனுப்பாதேன்னு படிச்சுப் படிச்சு சொன்னேன். கேட்டாளா உம்மவனும், மருமகளும்?"

"படிச்சா தொலயுது. படிச்ச படிப்புக்கு வேலைக்கு அனுப்பிச்சாம் பாரு. அந்தத் திமிரு. நாங்கெல்லாம் பரிசம் போட்டாலே வீட்டை விட்டு வெளிய வரமாட்டோம். கல்யாணம் முடிஞ்சு கழுத்துல தாலியேறி, புருஷன் ஊடு போற வரைக்கும் ஒரு பொல்லாப்பு அப்பனாத்தாளுக்குக் கொடுத்திருப்பமா? இல்லே, அப்படியிருந்தா வீட்லதான் அவுங்க வச்சிருப்பாங்களா?"

"பொண்ணு பார்க்க வந்தப்பவே மாப்பிள்ளை கூடத் தனியாப் பேசணும்னு பேசினா பாரு, உம் பேத்தி. அப்பவே எனக்கு சந்தேகம். அது எதுல கொண்டு போய் விடுமோன்னு?"

"நம்ம ஊர் உலகத்துல இப்படியும் உண்டா?"

"மாப்பிள்ளை வீட்டுக்குப் போறோம்னு தெரியும். நாலு நல்ல வார்த்தை பேசி, சிர்முறைமை கலந்துட்டு வர்றதுக்குள்ளே எங்கே தொலைஞ்சிருப்பா? எங்காச்சும் எவனாச்சும் கூட ஸ்நேகிதம் வச்சுட்டு சமயம் பார்த்து ஓடித் தொலைஞ்சுட்டாளோ?"

"ம்... ஆத்தாளுக்குத்தானே தெரியும்...!"



"ஆனாலும் ரொம்ப ஓவர் சார் இது!"

"எது?"

"கட்சிக்கு நிதி சேர்க்கிறதுக்காக, ஆடிட்டரைப் பதம் பார்த்த செருப்புன்னு சொல்லி ஏலம் விட்டிருக்காங்க!"

– சீர்காழி ரேவதி

பேருந்து நிறுத்தத்திலேயே சுசகசத்த பஞ்சாயத்து.அம்சவேணிக்கு குமுறும் ஆத்திரம். புருஷனுக்கோ, அவர்களின் சம்பாஷணையைக் கேட்கக் கேட்கப் பெருகும் கோபம்.

"புள்ளை வளர்த்தினா பாரு இலட்சணமா."

உச்சிக்கு விரையும் வெயிலில் புருஷனின் முகம் கறுத்துக் கிடக்கிறது. எல்லோரும் இவளையே குற்றவாளியாக்கிப் பார்க்கிற பார்வை.

இத்தனை பேரும் இட்டுக் கட்டிப் பேசறதுக்கு இடங்கொடுத்துட்டு கழுதை எங்கே போய்த் தொலைஞ்சாள்? எங்கேயும் சொல்லிக்காம போற வழக்கமில்லாதவ, இப்ப மட்டும் எப்படி? வீட்டுக்கு வந்திருப்பாளோ? வராமலே போயிடுவாளோ? மாமனார் சொன்னது போல், பட்டன் கம்பெனிக்கு வேலைக்குப் போனவள் ஏதாவது பையன் கூட உறவு வச்சு ஓடிப் போனாளோ? பெண் பார்க்க வந்த மாப்பிள்ளையிடம் தனியாகப் பேசணும் என்று ஏடாகூடமாய் உளறியிருப்பாளோ? அப்படி உளறியிருந்தால் மாப்பிள்ளை வீட்டார் அதற்குப் பின் எதுக்கு சம்பந்தம் பேச இவர்களை அழைக்க வேண்டும்? அப்படிப்பட்டவன் இந்த மாப்பிள்ளையைப் பிடித்தது என ஏன் சொல்ல வேண்டும்?

"மாப்பிள்ளை கொஞ்சம் கருப்பு. தொழிலும் சரியில்ல" என்று இவன் கொஞ்சம் அவநம்பிக்கையுடன் பேசும் போது குறுக்கிட்டு,

"அம்மா கிடக்கிறா. நீ போய்ப்பார்த்துட்டு வாப்பா. நானும் வேணா கூட வர்றேன். மாப்பிள்ளை வீட்டையும் பார்த்த மாதிரி ஆச்சு"ன்னு அப்பனை ஏன் உசுப்ப வேண்டும்?

கழுதை அப்படி ஆசைப்பட்டுக் கேட்டதனால்தான் இருபது பவுனுக்கும், கல்யாணம் முடிஞ்ச கையோடு சீர்சிறப்பு கொடுக்கிறதுக்கும், ரெண்டு வல்லக் காட்டை எழுதி வைக்கவும் சம்மதிச்சேன்.

மதமதன்னு புள்ளை வளர்ந்துட்டாளேயொழிய கழுதைக்கு புத்தி இன்னும் துளி கூட வளரலை. பொட்டைப் புள்ளை கொஞ்சங்கூட அடக்கம் ஒடுக்கமில்லாம கட்டிக்கப்

போறவன் வீட்டைக் கல்யாணத்துக்கு மின்னாடி பார்க்கணும்னு அடம் பிடிச்சா யாருக்குத்தான் ஆத்திரம் வராது? அறிவு கெட்டக் கழுதைக்கு ஊர் வழக்கம், உலக முறைமை எடுத்துச் சொன்னா அப்படியா ஆங்காரம் வரும்? முந்தின நாள் ராத்திரியே ஆரம்பித்த தர்க்கம்; விடியக்காத்தால கூட தொடரத்தான் கோபமே வந்தது.

"இதென்னடி குதர்க்கம்?"

"எது குதர்க்கம்? கட்டிக்கப் போறவ நான். அங்கே இருக்கிறவங்களோட கூடிப் பழக வேண்டியவ நான். அங்கே போய்க் காலந் தள்ளப் போறவ நான். நா பார்க்காம இந்தக் கல்யாணம் நடக்கவே நடக்காது."

"என்னடி சொன்னே. நாக்கை இழுத்து வச்சுத் தச்சுப்போடுவேன்."

"ஆ... போடுவே... அதுக்குப் போய் வேற ஆளப் பாரு."

ஏட்டிக்குப் போட்டியாய் அவள் மல்லுக்கு நிற்கும் போதுதான் குரூரமாய்க் குறுக்கில் வந்தான் புருஷன்.

"பிய்ச்சுப் போடுவேன் படவா. ஏது... வாய் ஒரேமுட்டா நீளுது? ஒரே புள்ளைன்னு பொத்திப் பொத்தி வளர்த்தேம்பாரு. அதனால துள்றியா? புள்ளையில்லாட்டி மசிரு போச்சுன்னு கொன்னு பொலி போட்டுடுவேன்!"

"இப்ப பெரிசா என்ன கேட்டுட்டேன்? புருஷனும் பொண்டாட்டியும் குதிச்சுட்டு வர்றீங்க?"

"ம்..? என்னடி கேட்கணும்? மாப்பிள்ளை வந்தப்ப அவன் கூட தனியாப் பேசணும்னு கொஞ்சங்கூட கூச்ச நாச்சம் இல்லாமக் கேட்டே. அப்பவே சம்மந்தி கூட்டம் மூஞ்சியச் சுளிச்சுது. சரி. தொலைஞ்சு போகுதுன்னு விட்டேன். அந்த எளக்காரம்... இப்பவும் உன்னை...!"

அப்பன் இதுவரைக்கும் மகளை ஒரு வார்த்தை கடிந்து பேசினதில்லை. பல்லைக் கடித்துக் கொண்டு அடிக்கவே போய் விட்டான். இவள் குறுக்கில் விழுந்து தடுக்கா விட்டால் அடித்துப் புரட்டியெடுத்திருப்பான்.

"நீ செய்யறதுதாண்டி இத்தனையும். நீ வளர்த்தின இலட்சணந்தாண்டி இத்தனையும்?"

எரிச்சலுடன் வெளியேறின புருஷன்.

'நானென்ன இவளை மாதிரியா? இப்படிக் குதியாட்டம் போட்டிருந்தா என்



**"நர்ஸ்... இன்னிக்கே ஆப்ரேஷன் பண்ணியாகணும்னு டாக்டர் ஒத்த காலில் நிக்கிறாரே ஏன்?"**

**"இன்னிக்கி கரண்ட் பில் கட்ட கடைசி தேதியாச்சே!"**

**– ஓரியூர் கே. சேகர்**

னைப் பெத்த அய்யன்தான் அப்படியே விட்டு வச்சுருப்பாரா? கொன்னு சோளக் காட்டுக்கு உரமாக்கி இருப்பார். எட்டாம் வகுப்புக்கு மேல மேடேறவே விடாத வம்சத்துல இவளை மட்டும் பன்னெண்டாம் வகுப்பு வரைக்கும் படிக்க வச்சம் பாரு. அந்தத் திமிரு. அய்யன் போட்ட கோடு துளி தாண்டினதில்ல நான். டவுனுக்கும் சேராது பட்டிக்காட்டுக்கும் சேராத ஊர்ல சொகுசா வாழ்ந்தவ, அவர் பேச்சை மீறியிருந்தா இந்த வறப்பட்டிக்காட்டுல வந்து மருகியிருப்பாளா? இந்த புருஷனுக்கும் வந்து வாழ்க்கைப் பட்டிருப்பாளா?'

ஏனோ திடீரென தனக்கு அய்யனும் ஆத்தாளும் மாப்பிள்ளை பார்க்கப் போன தன் நினைவு சுழல் வட்டமாய்.

அப்போது அம்சவேணிக்குப் பதினாறு வயது. தம்பிதான் முதன் முதலில் இந்த ஊருக்கு வந்து பார்த்து விட்டுச் சொன்னான்.

"நல்ல ஊரு. திரும்பின பக்கமெல்லாம் பசுமை. நிறைய அமைதி. நம்ம வீட்டை விட வசதி. அக்கா நீ கொடுத்து வச்சவ...."

"மாமியார் மாமனார் எப்படி?"

"ஒண்ணும் பிரச்னையில்லை. முழுக்க விவசாயம். போதாக் குறைக்கு பத்துத் தறி பூட்டி ஓடுது. பொட்டைப் புள்ளையில்லாத குடும்பம். நாலஞ்சு வண்டி மாடுக. கூப்பிட்ட குரலுக்கு வேலைக்காரங்க. நம்ம மக குப்புறப் படுத்துட்டு அதிகாரஞ் செய்யலாம்!"

அய்யன் தோளில் கிடந்த துண்டை வாசற்கட்டில் போட்டு விட்டு சோம்பல் முறித்ததும், ஆத்தா வெத்திலை பாக்கு மடிச்சுக் கொடுத்ததும் கண்முன்னே வந்தது. தாலி கட்டும் வரை அதே ஏக்கம். வீட்டில் யாராவது அங்கே போய் வந்தால் போதும். அவர்களின் சம்பாஷணைகளைக் கேட்க சமையல் கட்டுச் சுவரில் காதைத் தீட்டிக் கொள்ள வேண்டியிருக்கும்.

கன்னாலம் முடிந்து அந்த மண்ணில் கால் வைத்த பின்புதான் தெரிந்தது. அது எம்மாந் தூரம். ஒண்டியாய் போர்டு தொங்கும் பஸ் ஸ்டாப்பிலிருந்து 2 கி.மீ. தோட்டம். இருந்த பத்துத் தறிகளில் எட்டுத்தறி புருஷனின் பெரியப்பாவுடையது. தோட்டங் காட்டு நிலைமையும் ஏறத்தாழ அப்படியே. சுருக்கமாச் சொன்னால் பெரிய மாமனார் வீட்டில் கைகட்டி சேவகம் செய்யும் குடும்பம் இவளுடையது. அப்படியிருந்தும்

---

**''வாழ்க்கையில் வெற்றி அடையறதுக்கு என்ன வழின்னு சினிமா டைரக்டர்கிட்ட கேட்டேன்.''**

**''என்ன சொன்னாரு?''**

**''விடிகாலையில எழுந்துருச்சு நூறு நாட்கள் தொடர்ந்து ஓடணும்னு!''**

**– ஆர்.என். கண்ணன்**



---

அடங்கி ஒடுங்கி வேலை செய்யவில்லை? பாத்தி கட்டி நீர் பாய்ச்சவில்லை? சம்பாதித்து வாழ்ந்து காட்டவில்லை? குடும்பப் பொம்னளக்கு அழகு இதுதான். இவளாட்டமா? இப்படியா?

'தாயைப் போலப் புள்ளை; நூலைப் போல சேலை'ன்னு மாமியார்க்காரி வித்தாரம் பேசறா. இப்படியிருந்திருந்தா இவங்க கூட இத்தினி வருஷம் எவளாச்சியும் குப்பை போட்டிருப்பாளா?

இறங்கி நடந்தார்கள். அப்போதும் முக இருள் கூடுதலாய் குரூரம் காட்டியிருந்தது. புருஷன் முகத்தில் படிந்திருந்த சவக்களை விலகவில்லை. இவளுக்குள்ளும் திரும்ப உள்ளூரப் படியும் அச்சம்.

மாப்பிள்ளை வீடு நல்ல தொட்டிக்கட்டு வீடு. பத்துக் குடும்பம் தங்கலாம். அவர்கள் எப்படி வரவேற்றார்கள், உட்கார வைத்தார்கள், என்ன பேசினார்கள் என்றே நினைவில்லை.

மாப்பிள்ளையின் தகப்பனார் படபடவென பேசிக் கொண்டேயிருந்தார். பெருகி வரும் யதார்த்தம். அதைவிட தடபுடல்.

"எல்லோரும் வெயில்ல வந்திருக்கீங்க. கொஞ்சம் குளிர்ச்சியா மொதல்ல மோர் சாப்பிடுங்க. ஏம்மா சங்கீதா எல்லோருக்கும் மோர் கொண்டா" அவரின் குரல் ஏற்றம். பெயர் கேட்ட மாத்திரத்தில் இவர்களுக்குள் திடுக்கிடல்.

உள்வீட்டு நடையிலிருந்து தட்டில் மோர் கொண்டு வந்தது இவள் மகள் சங்கீதாவே தான். அம்சவேணி நெஞ்சு முழுக்க நொடியில் வியாபிக்கும் சந்தோஷ மினுக்கம்.

"மருமக ஆசைப்பட்டா கூட்டிட்டு வர வேண்டியதுதானே? பாருங்க. உங்களுக்கு முன்னாலேயே வந்துட்டா. அந்தக் கால மாட்டம் அடக்கி வச்சா ஆகுமா? அதுதான் வாம்மா. உட்காரும்மா. வீட்டைச் சுத்திப் பாரும்மான்னு சொல்லி வச்சேன்."

சுதி ஏறும் சம்பந்தியின் குரல். மாமனாரும் மாமியாரும் பேத்தியையே பார்க்கின்றனர். புருஷனோ இவளையே வெறிக்கிறான்.

'புள்ளை வளர்த்தினா பாரு இலட்சணமா' அனேகமாக அவனின் பார்வைக்கு அதுதான் அர்த்தமாயிருக்கும். மனத்தில் விரவிக் கிடந்த ஒட்டம்புல் லேசாய் பிரிபிரியாய் உதறின மாதிரிதான் இருந்தது. இருந்தாலும் படியும் அரிப்பு, ரோதனை.

# பொன்னியின் செல்வன்

எட்டாம் அத்தியாயம்

## "ஐயோ! பிசாசு!"

கற்பக விருட்சம் பூங்குழலியின் மீது வர்ண மலர்களைச் சொரிந்தது. தேவலோகத்துக் கின்னரி வாத்தியங்கள் இன்ப கீதங்களைப் பொழிந்தன. ஏன்? பூங்குழலியின் மேனி நரம்புகளே யாழின் நரம்புகளாகித் தெய்வகானம் இசைத்தன. இளவரசரின் கனிவு செறிந்த மொழிகள் அவளுக்கு அத்தகைய போதையை அளித்தன.

"இளவரசே! நான் தேவலோகக் கன்னிகை அல்ல; ஏழை ஓடக்காரப் பெண். தாங்கள் அருந்தியதும் தேவலோகத்து அமுதம் அல்ல; குழகர் கோயிலில் கிடைத்த பாலமுதம்!" என்றாள்.

"நீ தேவலோகக் கன்னிகையில்லையென்றால், நான் நம்பி விடுவேனா? வருணனின் திருப்புதல்வி அல்லவா நீ? சமுத்திரகுமாரி! எத்தனை தடவை எனக்கு நீ உயிர் அளித்திருக்கிறாய்? உனக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்?" என்றார் இளவரசர்.

"ஐயா! இன்னும் ஒரு பகலும் ஒரு இரவும் தங்களுடன் இருக்க இந்த ஏழையை அனுமதிக்க வேண்டும்" என்றாள் பூங்குழலி.

"அது எப்படி முடியும்? உடனே நான் பழையாறைக்குப் புறப்பட வேண்டுமே?" என்றார் இளவரசர்.

"இல்லை; தங்களை நாகைப் பட்டினத்துக்கு அழைத்துச் செல்லும்படி செய்தி வந்திருக்கிறது."

"யாரிடமிருந்து?"

"இளையபிராட்டியிடமிருந்துதான்!"




அமரர் கல்கி



"அது யார் அங்கே, இன்னொருவன், வந்தியத்தேவனுடன் படகை இழுத்து வருகிறவன்?"

"என் அத்தான் சேந்தன் அமுதன். இளையபிராட்டி அவனிடந்தான் செய்தி அனுப்பியிருக்கிறார். தங்களை நாகைப்பட்டினத்தில் உள்ள சூடாமணி விஹாரத்திற்கு அழைத்துச் செல்லும் படி."

"ஆஹா! என் தமக்கையின் மனம் மாறி விட்டதா? எனக்கு முடி சூட்டும் ஆசை அகன்று விட்டதா? வெகு காலமாக எனக்குப் புத்த சங்கத்தில் சேர வேண்டும் என்ற ஆசை உண்டு.

புத்தசங்கத்தில் சேர்ந்து பிக்ஷு ஆவேன். தூர தூர தேசங்களுக்கு யாத்திரை செய்வேன்! சாவகம் - கடாரம் - மாயிருடிங்கம் - மாபப்பாளம் - சீனம்! ஆஹா! என்னுடைய பாக்கியமே பாக்கியம்! பூங்குழலி! வா, போகலாம்!" என்று கூறி இளவரசர் எழுந்து நின்றார்.

அவருக்கு இன்னும் முழு நினைவு வரவில்லை. சுர வேகத்திலேயே பேசுகிறார் என்று பூங்குழலி சந்தேகித்தாள்.

அதேசமயத்தில் தூரத்தில் ஓலமிடும் குரல் ஒன்று கேட்டது.

இளவரசர் திடுக்கிட்டு நின்று, "பூங்குழலி! அது என்ன?" என்றார்.

"ஆந்தை கத்துகிறது, ஐயா!" என்றாள்.

"இல்லை! அது மனிதக் குரல்! ஏதோ பெரும் அபாயத்தில் சிக்கியவனின் அபயக் குரல்! அவனைக் காப்பாற்றி விட்டுப் போகலாம். புத்த சங்கத்தில் சேருவதற்கு முன்னால் ஒரு புண்ணிய காரியம் செய்யலாம்!" என்று இவ்விதம் கூறிவிட்டு இளவரசர் பாய்ந்து ஓட முயன்றார். அந்த முயற்சியில் திடீரென்று கீழே விழுந்தார். பூங்குழலி



அவரைத் தாங்கிக்கொண்டாள்.

படகைக் கரை சேர்த்தவர்கள் இருவரும் ஓடி வந்தார்கள். மீண்டும் உணர்ச்சியை இழந்துவிட்ட இளவரசரை அவர்கள் மெதுவாகத் தூக்கிக்கொண்டு போய்ப் படகில் பத்திரமாய்ச் சேர்த்துப் படுக்க வைத்தார்கள்.

கால்வாயில் படகு போக ஆரம்பித்தது. இளவரசரைத் தவிர்த்த மற்ற மூவரும் இட நெருக்கடியுடன் அதில் உட்கார்ந்திருந்தார்கள்.

வந்தியத்தேவன், "பூங்குழலி! நாலு பேரை இந்தப் படகு தாங்குவது கடினம். எப்படியும் நான் உங்களிடம் விடை பெற்றுக் கொள்ள வேண்டியவன். இங்கேயே இறங்கிக் கொள்கிறேன். இளவரசரைப் பத்திரமாய்க் கொண்டு போய்ச் சேர்ப்பது உங்கள் பொறுப்பு. உங்களுக்கு அதிகம் நான் சொல்ல வேண்டியதில்லை!'' என்று சொன்னான்.

அவனுடைய குரல் தழதழத்தது. நிலாக் கிரணம் அவன் முகத்தில் விழுந்தபோது கண்களில் முத்துத் துளிகள் ஒளி வீசித் திகழ்ந்தன.

''கோடிக்கரைக் காடு தாண்டிய பிறகு இறங்கிச் செல்லலாமே? என் குதிரையையும் அங்கேதான் நிறுத்தி வைத்திருக்கிறேன். அடையாளம் நினைவிருக்கிறதல்லவா?'' என்றான் சேந்தன் அமுதன்.

''வேண்டாம்; நான் இங்கேயே இறங்கிக் கொள்கிறேன். குழகர் கோயில் பிராகாரத்தில் சற்று நேரம் படுத்துத் தூங்கி விட்டுப் பொழுது விடிவதற்குள் எழுந்து புறப்படுகிறேன். இல்லாவிட்டால், நாளைக்குப் பிரயாணம் செய்ய முடியாது! வழியில் எவ்வளவு தடங்கல்களோ!'' என்றான் வந்தியத்தேவன்.

பூங்குழலி அத்தனை நேரமும் தன் மடியில் பத்திரப்படுத்தி வைத்திருந்த பொட்டணத்தை எடுத்து அவனிடம் கொடுத்தாள். "இந்தா! குழகர் கோயில் பிரஸாதம். இதைச் சாப்பிட்டு விட்டுத் தூங்கு!'' என்றாள்.

''நீங்களும் ஒன்றும் சாப்பிடவில்லையே, உங்களுக்கு வேண்டாமா?''

''கோடிக்கரையிலிருந்து காததூரம் கால்வாயில் போய் விட்டால் எத்தனையோ கிராமங்கள். நானாவது சேந்தனாவது போய் உணவு சம்பாதித்துக் கொண்டு வருவோம். உன் விஷயம் அப்படியல்ல. நீ ஒருவர் கண்ணிலும் படாமல் பழையாறை போய்ச் சேர வேண்டும் அல்லவா?''

"படகில் இளவரசர் இருக்கிறார் என்பதை நீங்களும் மறந்துவிடக் கூடாது.''

''இந்தப் படகில் இருப்பவர் இளவரசர் என்று யார் நம்புவார்கள்? அதைப் பற்றிக் கவலைப்படாதே! எங்கள் பொறுப்பு. இந்த ஓட்டைப் படகை யாரும் கவனிக்க மாட்டார்கள்.''

"சரி; அப்படியானால் இங்கேயே நான் இறங்கிக்கொள்கிறேன்.''

அச்சமயம் மறுபடியும் அந்த ஓலக்குரல் கேட்டது. "ஆ! அது என்ன?'' என்று இளவரசர் கேட்டு விட்டு மறுபடியும் உணர்வை இழந்தார்.

பூங்குழலி எழுந்து நின்றாள்.

''முடியாது! என்னால் முடியாது. இளவரசருக்குத் தெரிந்தால் என்னை மன்னிக்க மாட்டார். இன்னும் கொஞ்ச நேரம் படகில் இரு. அந்த மந்திரவாதியைச் சேற்றிலிருந்து எடுத்துவிட்டு விட்டு வருகிறேன். இங்கிருந்து அந்த இடம் கிட்டத்தான் இருக்கிறது!'' என்று சொல்லிக்கொண்டே படகிலிருந்து கால்வாயின் கரையில் குதித்தாள்.

''அப்படியானால் நானும் உன்னோடு வருகிறேன். அந்தப் பாதகனிடம் உன்னைத் தனியாக விட மாட்டேன்'' என்றான் சேந்தன் அமுதன்.

"இல்லை; அமுதா! நீ படகில் இரு! இளவரசரை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள். நான் பூங்குழலியுடன் போய் வருகிறேன். எனக்கும் அந்த மந்திரவாதியைப் பார்க்க வேண்டிய

காரியம் இருக்கிறது!'' என்று சொல்லி விட்டுப் பூங்குழலியைப் பின் தொடர்ந்து வேகமாக ஓடினான் வந்தியத்தேவன்.

பூங்குழலியின் மனக்கண் முன்னால் மந்திரவாதி மார்பளவு சேற்றில் புதைந்திருக்க, அவனைச் சுற்றி நரிகள் நின்று அவனைப் பிடுங்கித் தின்னப் பார்க்கும் பயங்கரக் காட்சி தோன்றிக் கொண்டிருந்தது. அதற்கிடையே இளவரசர் அவளைப் பார்த்து ''பெண்ணே! நீ கொலை பாதகி!'' என்று குற்றம் சாட்டும் காட்சியும் தோன்றியது! இந்தக் காட்சிகள் அவளுடைய கால்களுக்கு மிக்க விரைவைக் கொடுத்தன. மந்திரவாதியை அமிழ்த்திய சேற்றுப் பள்ளத்தை அதி விரைவில் நெருங்கினாள். அங்கே மந்திரவாதியைக் காணாமல் பெரும் ஏமாற்றம் அடைந்தாள்.

பின் தொடர்ந்து வந்த வந்தியத்தேவன் அவள் பக்கம் நெருங்கியதும், அவள் தயங்கி நிற்பதின் காரணத்தைக் கேட்டுத் தெரிந்துகொண்டான்.

"வேறு ஒரு சேற்றுப் பள்ளமாயிருக்கலாம். கோடிக்கரையில் எத்தனையோ பள்ளங்கள் உண்டு அல்லவா? நீ மறந்து போயிருப்பாய்!'' என்றான்.

புதரில் ஒரு முனை கட்டியிருந்த சேந்தன் அமுதன் மேல்துண்டைப் பூங்குழலி சுட்டிக் காட்டினாள். பாவம்! அவளால் பேச முடியவில்லை.

"சேற்றிலே அமிழ்ந்திருப்பான் என்று நினைக்கிறாயா? இல்லை, இல்லை! ரவிதாஸனை அப்படியெல்லாம் கொன்றுவிட முடியுமா! அவனுக்கு நூறு உயிர் ஆயிற்றே! தப்பிப் போயிருப்பான்!'' என்று சொல்லிக்கொண்டே வந்தியத்தேவன் புதரில் கட்டப்பட்டிருந்த துண்டை அவிழ்த்து எடுத்துக்கொண்டான். பூங்குழலிக்கு ஆறுதலாக அவ்விதம் சொன்னானே தவிர, அவன் மனத்திற்குள் 'ரவிதாஸன் மாண்டுதான் போயிருப்பான். அவனுக்கு இந்தக் கோர மரணம் வேண்டியதுதான்!' என்ற எண்ணம் தோன்றியது.

இருவரும் அங்கே மேலும் நிற்பதில் பயனில்லை என்பதை ஒருங்கே உணர்ந்தார்கள். மீண்டும் கால்வாயை நோக்கி நடந்தார்கள்.

கால்வாயின் கரைகளை அங்கே இருபுறமும் மரங்கள் மறைத்துக் கொண்டிருந்தன. ஒரு மரக்கிளையைப் பிடித்துக்கொண்டு நின்று இரண்டு உருவங்கள் எட்டிப் பார்த்து தெரிந்தது.

அவற்றில் ஒன்று ஆண் உருவம். இன்னொன்று பெண் உருவம்.

"அதோ!'' என்று பூங்குழலி சுட்டிக் காட்டினாள்.

''ஆமாம்; அவர்கள் யார் என்று தெரிகிறதா?''

''மந்திரவாதி ஒருவன்; இன்னொருத்தி என் அண்ணன் மனைவி. எனக்கு முன்னால் அவள் வந்து மந்திரவாதியை விடுவித்திருக்கிறாள்.''

"நல்லதாய்ப் போயிற்று!''

"நல்லது ஒன்றுமில்லை. கால்வாயில் படகு வருவதை அவர்கள் உற்றுப் பார்க்கிறார்களே!''

அச்சமயம் இரண்டு உருவங்களில் ஒன்று திரும்பி இவர்கள் வரும் திசையைப் பார்த்தது. உடனே இரண்டு உருவங்களும் புதர்களுக்கு அடியில் மறைந்து விட்டன.

''ஐயோ! அவர்கள் நம்மையும் பார்த்து விட்டார்கள்!''

"பேசாமல் என்னுடன் வா! நான் ஒரு யுக்தி செய்கிறேன். நான் என்ன சொன்னாலும் ஆச்சரியப்படாதே! என்னை ஒட்டியே பேசு!'' என்றான் வந்தியத்தேவன்.

இருவரும் மேற்கூறிய உருவங்கள் நின்ற இடத்துக்குச் சமீபமாகப் போனார்கள். அந்த இடத்தைக் கடந்து சிறிது அப்பால் சென்று கால்வாயின்

ஓரமாக உட்கார்ந்து கொண்டார்கள்.

பின்னால் புதரில் மறைந்திருந்தவர்களுக்குத் தங்கள் பேச்சு நன்றாய்க் கேட்கும் என்று வந்தியத்தேவன் நிச்சயப்படுத்திக் கொண்டான்.

''பூங்குழலி! இதோ பார்! ஏன் கவலைப்படுகிறாய்! மந்திரவாதி செத்து ஒழிந்து போனான். போனதே க்ஷேமம்!'' என்றான் வந்தியத்தேவன்.

''ஐயோ! நானா கொலை செய்தேன்?''

''பின்னே அவன் சேற்றில் விழச் செய்தது யார்? நீதானே? திடீரென்று அப்புறம் உனக்குப் பச்சாதாபம் வந்து விட்டது. தப்புவிக்கலாம் என்று வந்தாய்! அதற்குள் அவனைச் சேறு விழுங்கி விட்டது. தப்புவிக்கத்தான் வந்தாயோ, அல்லது செத்துப் போய் விட்டானா என்று பார்ப்பதற்குத்தான் வந்தாயோ, யார் கண்டது?''

''உன்னை யார் என்னைத் தொடர்ந்து வரச் சொன்னது?''

''வந்ததினால்தானே நீ செய்த கொலையைப் பற்றித் தெரிந்து கொள்ள முடிந்தது? அடி கொலை பாதகி!''

''நானா கொலை பாதகி?''

''ஆம்; நீ கொலை பாதகிதான்! நான் மட்டும் யோக்கியன் என்று சொல்கிறேனா? அதுவும் இல்லை. நான் இளவரசரைக் கடலில் மூழ்கடித்துக் கொன்றேன். நீ மந்திரவாதியைச் சேற்றில் அமுக்கிக் கொன்றாய். அதற்கும் இதற்கும் சரியாய்ப் போய்விட்டது. நான் செய்த கொலையைப் பற்றி நீ வெளியில் சொல்லாமலிருந்தால், நீ செய்த கொலையைப் பற்றி நானும் யாரிடத்திலும் சொல்லவில்லை!''

''இளவரசரைக்



கொன்றவன் நீதானா? சற்று முன் அவரைப் பார்க்கவே யில்லை என்று சொன்னாயே?''

''வேண்டுமென்றுதான் அப்படிச் சொன்னேன். இனிமேல் அப்படி உன்னிடம் பொய் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. நான் கூறியதை ஒப்புக் கொள்வாயா, மாட்டாயா?''

''மாட்டேன் என்று மறுத்தால்?''

''உடனே நந்தினி தேவியிடம் போய் நீ மந்திரவாதியைச் சேற்றில் அமுக்கிக் கொன்றதைக் கூறுவேன். நான் செய்த கொலைக்குச் சாட்சியம் இல்லை; உன் கொலைக்குச் சாட்சியம் உண்டு...''

''நந்தினி என்னை என்ன செய்து விடுவாள்?''

''வேறொன்றும் செய்ய மாட்டாள். உன்னைப் பூமியில் கழுத்துவரையில் புதைத்து யானையின் காலினால் இடறும்படி செய்வாள்!''

''ஐயோ! என்ன பயங்கரம்!''

''வேண்டாம் என்றால், நான் கூறுகிறபடி செய்வதாக ஒத்துக்கொள்!''

''என்ன செய்ய வேண்டும்?''

"அதோ உன் அத்தான் கொண்டு வருகிறானே, அந்தப் படகில் ஏறிக் கொள். இரண்டு பேரும் நேரே இலங்கைக்குப் போய் விட வேண்டும். அங்கே போய் உன் இளவரசரை நினைத்து அழுது கொண்டிரு!"

"எதற்காக நான் இலங்கை போக வேண்டும்? இங்கேயே இருந்தால் உனக்கு என்ன?"

"ஆ! நீ போய் பழுவேட்டரையரிடம் என்னைப் பற்றிச் சொல்லிவிட்டால்! - அவருக்கு என்ன இருந்தாலும் இளவரசர் பேரில் அபிமானம் உண்டு. என்னைப் பழி வாங்கப் பார்ப்பார். எனக்கு இந்த உலகில் இன்னும் கொஞ்சம் வேலை இருக்கிறது."

"அடபாவி! இளவரசரை ஏன் நீ கொன்றாய்? அதையாவது சொல்லி விடு!"

"சொன்னால் என்ன? நன்றாகச் சொல்லுகிறேன். இளவரசரும் அவருடைய தமக்கையும் சேர்ந்து ஆதித்த கரிகாலரின் இராஜ்யத்தைப் பறிப்பதற்குச் சதி செய்தார்கள். ஆதித்த கரிகாலர் என்னுடைய எஜமானர். அவருடைய விரோதி என்னுடைய விரோதி. அதனால்தான் இளவரசரைக் கொன்றேன் தெரிந்ததா?"

"இந்த மகாபாவத்துக்கு நீ தண்டனை அனுபவிப்பாய்."

"அதைப் பற்றி நீ கவலைப்படாதே! நான் சொன்னபடி நீ செய்யப் போகிறாயா, இல்லையா?"

"செய்யாவிட்டால் வேறுவழி



என்ன? அதோ படகு வருகிறது; போய் ஏறிக் கொள்கிறேன்."

"இதோ பார்! நன்றாய்க் கேட்டுக் கொள். படகில் ஏறியதும் நேரே கடலை நோக்கிச் செல்ல வேண்டும். கோடிக்கரைப்பக்கம் திரும்பி னாயோ, உன் கதி அதோ



கதிதான். இங்கேயே இருந்து நான் உங்கள் படகைப் பார்த்துக் கொண்டிருப்பேன். படகு கடலை அடைந்த பிறகுதான் இங்கிருந்து நகருவேன்."

"சரி, சரி! இங்கேயே இரு! உன்னை நூறு நரிகள் பிடுங்கித் தின்னட்டும்!"

வந்தியத்தேவன் செய்த சமிக்ஞையைப் பார்த்துவிட்டு பூங்குழலி அங்கிருந்து விரைந்து போய்ப் படகில் ஏறிக்கொண்டாள்.

படகு மேலே சென்றது.

வந்தியத்தேவன் அவளிடம் கூறியபடி அங்கேயே உட்கார்ந்திருந்தான்.

அரை நாழிகை சென்றது.

படகு கால்வாயில் வெகுதூரம் வரை சென்று மறைந்தது.

திடீரென்று வந்தியத்தேவனுக்குப் பின்னால், "ஹா ஹா ஹா" என்ற ஒரு பயங்கரச் சிரிப்புக் கேட்டது.

வந்தியத்தேவன் திடுக்கிட்டவன் போல் பாசாங்கு செய்து, சட்டென்று எழுந்து நின்று பார்த்தான்.

மந்திரவாதி புதர்களுக்கு மத்தியில் எழுந்து நின்று பேய் சிரிப்பது போலப் பயங்கரமாகச் சிரித்தான்.

"ஐயோ! பிசாசு!" என்று அலறிக்கொண்டு வந்தியத்தேவன் அங்கிருந்து ஓட்டம் பிடித்தான்.

## ஒன்பதாம் அத்தியாயம்

## ஓடத்தில் மூவர்

பொழுது புலர்ந்தது. கருநிற அழகியான இரவெனும் தேவி உலக நாயகனை விட்டுப் பிரிய மனமின்றிப் பிரிந்து செல்ல நேர்ந்தது. நாயகனைத் தழுவியிருந்த அவளுடைய கரங்கள்



இலேசாகக் கழன்று விழுந்தன. வாழ்க்கையிலேயே கடைசி முத்தம் கொடுப்பவளைப் போல் கொடுத்துவிட்டு இரவெனும் தேவி இன்னமும் தயங்கி நின்றாள். "மாலையில் மறுபடியும் சந்திப்போம். நாலு ஜாம நேரந்தானே இந்தப் பிரிவு? சந்தோஷமாகப் போய் வா!" என்றது உலகம். இரவு தயங்கித் தயங்கி



உலகத்தைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டு சென்றது.

உள்ளத்திலே அன்பில்லாத கள்ளக் காதலனைப் போல் இரவு பிரிந்து சென்றதும் உலகம் மகிழ்ச்சியினால் சிலிர்த்தது. "ஆகா! விடுதலை!" என்று ஆயிரமாயிரம் பறவை இனங்கள் பாடிக் களித்தன. மரங்களிலும் செடிகளிலும் மொட்டுக்கள் வெடித்து மலர்ந்தன. எங்கிருந்தோ வண்டுகள் மந்தை மந்தையாக வந்து இதழ் விரிந்த மலர்களைச் சூழ்ந்து கொண்டு இன்னிசை பாடிக் களித்தன. விதவிதமான வர்ணச் சிறகுகள் உள்ள தட்டாரப் பூச்சிகள் நாலா பக்கங்களிலும் ஆனந்தக் கூத்தாடின.

கீழ்வானத்தில் பொன்னிறம் கண்டது. வானச் சுடர்கள் ஒவ்வொன்றாக ஒளிமங்கி மறைந்தன. இதுவரையில் வான வீதியில் பவனி வந்து கொண்டிருந்த பிறைச்சந்திரன் "நிற்கட்டுமா? போகட்டுமா?" என்று கேட்டுக் கொண்டிருந்தான்.

ஓடையில் படகு மெள்ள மெள்ளச் சென்று கொண்டிருந்தது. பட்சிகளின் கோஷ்டி கானத்தோடு துடுப்பு தண்ணீரைத் தள்ளும் சலசல சத்தமும் பூங்குழலியின் செவிகளில் விழுந்தது. திடுக்கிட்டுக் கண் விழித்தாள். ஒரு கிளையில் வெடித்த இரண்டு அழகிய நீல நிற மொட்டுக்கள் ஒருங்கே மலர்ந்தது போல் அவளுடைய கண்ணிமைகள் திறந்தன. எதிரே இளவரசரின் பொன்முகம் தோன்றியது. இன்னும் அவர் தூங்கிக்கொண்டிருந்தார். தூக்கந்தானா? அல்லது சுரவேகத்தில் இன்னமும் உணர்ச்சியற்றிருக்கிறாரா? தெரியவில்லை. எனினும், அவருடைய திருமுகம் எவ்வளவு பிரகாசமாயிருந்தது?

அப்பால் சேந்தன் அமுதன் துடுப்புத் தள்ளிக்கொண்டிருந்தான்.

"பூங்குழலி! ஏன் அதற்குள் விழித்துக் கொண்டாய்? இன்னும் சற்று நேரம் தூங்குவதுதானே?" என்றான்.

பூங்குழலி புன்னகை பூத்தாள். முகத்திலிருந்த இதழ்களிலே மட்டும் அவள் புன்னகை செய்யவில்லை. அவளுடைய திருமேனி முழுதும் குறுநகை பூத்தது.

காட்டிலே பிறந்து வளர்ந்து வாழ்ந்தவள் பூங்குழலி. ஆயினும் பட்சிகளின் கானமும், வண்டுகளின் கீதமும் இவ்வளவு இனிமையாக அவளுடைய செவிகளில் என்றைக்கும் தொனித்ததில்லை.

"அத்தான்! உதய ராகத்தில் ஒரு பாட்டுப் பாடு!" என்றாள் பூங்குழலி.

"நீ இருக்குமிடத்தில் நான் வாயைத் திறப்பேனா? நீதான் பாடு!" என்றான் சேந்தன் அமுதன்.

"இராத்திரி இருளடர்ந்த காட்டில் பாடினாயே?"

"காரிய நிமித்தமாகப் பாடினேன். இப்போது நீ பாடு!"

"எனக்கும் பாட வேண்டுமென்று ஆசையாயிருக்கிறது. ஆனால் இளவரசருக்குத் தொந்தரவாயிருக்குமல்லவா?"

"எனக்குத் தொந்தரவு ஒன்றுமில்லை. இரண்டு பேரும் சேர்ந்து பாடுங்கள்!" என்றார் அருள்மொழி வர்மர்.

பூங்குழலி வெட்கத்தினால் தலை குனிந்துகொண்டாள்.

"படகு எங்கே போகிறது?" என்று இளவரசர் கேட்டார்.

"நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்திற்கு!" என்றாள் பூங்குழலி.

"அப்படியானால், இராத்திரி நான் கண்டது கேட்டதெல்லாம் கனவல்லவா? உண்மைதானா?"

"ஆம், ஐயா! இதோ இவர்தான் தங்கள் தமக்கையாரிடமிருந்து செய்தி கொண்டு வந்தவர்."

"இளையபிராட்டி கூறியதையெல்லாம் விவரமாகச் சொல்லு. அமுதா! என்னைப் புத்த சங்கத்தில் சேர்ந்து விடும்படிதானே என் தமக்கை சொல்லி அனுப்பினார்?"

இதற்கு என்ன விடை சொல்லுவதென்று அமுதன் தயங்கியபோது,

குதிரையின் காலடிச் சத்தம் கேட்டது. பூங்குழலியும் சேந்தன் அமுதனும் திடுக்கிட்டார்கள்.

இளவரசரின் முகத்தில் மட்டும் ஒரு மாறுதலும் இல்லை.

''என் நண்பன் எங்கே? வாணர் குலத்து வீரன்?'' என்று இளவரசர் கேட்டார். கேட்டு விட்டுக் கண்களை மூடிக்கொண்டார்.

சிறிது நேரத்துக்குள் குதிரை மீது வந்தியத்தேவன் தோன்றினான்.

படகு நின்றது.

வந்தியத்தேவனும் குதிரை மீதிருந்து இறங்கி வந்தான்.

''ஒன்றும் விசேஷமில்லை. நீங்கள் பத்திரமாயிருக்கிறீர்களா என்று பார்த்து விட்டுப் போக வந்தேன். இனி அபாயம் ஒன்றுமில்லை'' என்றான் வந்தியத் தேவன்.

''மந்திரவாதி?'' என்று பூங்குழலி கேட்டாள்.

''இந்தப் படகில் இளவரசர் இருக்கிறார் என்ற சந்தேகமே அவனுக்கு இல்லை. நான் கூறியதை அவன் அப்படியே நம்பி விட்டான்.''

''அவனைப் பார்த்தாயா?''

''பார்த்தேன்: ஆனால் அவனுடைய பிசாசைப் பார்த்ததாகப் பயந்து பாசாங்கு செய்தேன்.''

''உன்னைப் போல் பொய் சொல்லக் கூடியவனை நான் பார்த்ததேயில்லை.''

''பொய் என்று சொல்லாதே! கற்பனா சக்தி என்று சொல்லு. இளவரசர் எப்படியிருக்கிறார்?''

''நடு நடுவே விழித்துக்கொண்டு இரண்டு வார்த்தை சொல்கிறார். அப்புறம் நினைவு இழந்து விடுகிறார்.''

''இந்தச் சுரமே அப்படித்தான்.''

''எத்தனை நாளைக்கு இருக்கும்?''

''சில சமயம் ஒருமாதங்கூட இருக்கும். சூடாமணி விஹாரத்தில் பத்திரமாகக் கொண்டு போய்ச் சேர்த்து விடுங்கள். பிக்ஷுக்கள் வைத்தியம் செய்தால் இரண்டு வாரத்தில் குணப்படுத்தி விடுவார்கள். ஜாக்கிரதை! பூங்குழலி! உன்னை நம்பித்தான் இளவரசரை ஒப்படைத்து விட்டுப் போகிறேன். உன் அத்தான் எங்கேயாவது கோவில் கோபுரத்தைக் கண்டால் தேவாரம் பாடிக்கொண்டு சுவாமி தரிசனத்துக்குப் போய் விடுவான்!''

சேந்தன் அமுதன் ''உன்னோடு பழகிய பிறகு அப்படியெல்லாம் செய்ய மாட்டேன். சிவ கைங்கரியம் செய்யும் ஆசைகூட எனக்குக் குறைந்துவிட்டது!'' என்றான்.

''என்னால் குறைந்துவிட்டதா? அல்லது இந்தப் பெண்ணினாலா? உண்மையைச் சொல்!''

சேந்தன் அமுதன் அதைக் காதில் போட்டுக் கொள்ளாமல் ''குதிரையை நான் சொன்ன இடத்தில் கண்டு பிடித்தாயா?'' என்று கேட்டான்.

''குதிரை என்னைக் கண்டுபிடித்தது. இது நான் உன்னிடம் தஞ்சையில் விட்டு வந்த குதிரை அல்லவா?''

''ஆமாம்.''

''இருட்டில் இது அடர்ந்த காட்டுக்குள்ளே என்னைப் பார்த்து விட்டுக் கனைத்தது. அராபியர்களிடம் நான் அகப்பட்டுக் கொண்டதில் ஒரு விஷயம் தெரிந்து கொண்டேன், அமுதா! குதிரைகளை வெறுங்காலோடு ஓடச் செய்வது பாவம்! குளம்புக்கு அடியில் இரும்புக் கவசம் அடித்து ஓட்ட வேண்டும். முதன்முதலில் நான் பார்க்கும் கொல்லுப்பட்டறையில் இதன் குளம்புக்குக் கவசம் அடிக்கச் சொல்லப் போகிறேன். சரி, சரி! அதையெல்லாம் பற்றிப் பேச நேரமில்லை. மறுபடியும் உங்களையும் இளவரசரையும் பார்ப்பேனோ, என்னமோ, தெரியாது. இளவரசர் மறுபடி விழித்தால் நான் பழையாறைக்குப் போகிறேன் என்று சொல்லுங்கள். அங்கிருந்து விரைவில் செய்தி அனுப்புவதாகவும் சொல்லுங்கள். அப்போதுதான் நிம்மதியாக இருப்பார்.''

வந்தியத்தேவன் குதிரையைத்

திருப்பி விட்டுக் கொண்டு போனான். விரைவில் இவர்களுடைய பார்வையிலிருந்து அவன் மறைந்தான்.



இருபுறமும் தாழம்புதர்கள் அடர்ந்திருந்த ஓடைக்காலின் வழியாகப் படகு போய்க் கொண்டிருந்தது. பொன்னிறத் தாழம்பூக்களும், தந்த வர்ண வெண் தாழம்பூக்களும், இரு பக்கமும் செறிந்து கிடந்தன. அவற்றின் நறுமணம் போதையை உண்டாக்கிற்று. சில இடங்களில் ஓடைக் கரையில் புன்னை மரங்கள் வளர்ந்திருந்தன. சில இடங்களில் கடம்ப மரங்களும் இருந்தன. முத்து நிறப் புன்னை மலர்களும் குங்கும வர்ணக் கடம்ப மலர்களும் ஓடைக் கரைகளில் சொரிந்து கிடந்தன.

பூலோகத்திலிருந்து புண்ணிய சாலிகள் சொர்க்கத்துக்குப் போகும் பாதை ஒன்று இருந்தால், அது இப்படித்தான் இருக்கும் என்று பூங்குழலிக்குத் தோன்றியது.

இடையிடையே கிராமம் தென்பட்ட இடத்தில், சேந்தன் அமுதன் சென்று இளவரசருக்குப் பாலும் பூங்குழலிக்கு உணவும் வாங்கிக்கொண்டு வந்தான்.

இளவரசர் கண்விழித்தபோதெல்லாம் பூங்குழலி சற்று விலகி நின்றாள். நேருக்கு நேர் அவரைப் பார்க்க முடியாமல் அங்குமிங்கும் பார்த்தாள். அவர் உணர்விழந்திருந்த நேரங்களில் அவர் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்தாள். சேந்தனுடன் பல விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டுமிருந்தாள். சில சமயம் இரண்டு பேரும் சேர்ந்து பாடிக் களித்தார்கள்.

சேந்தன் அமுதன் உணவு தேடிக் கிராமங்களுக்குச் சென்ற சமயங்களில் பூங்குழலி இளவரசரின் நெற்றியைத் தடவிக் கொடுத்தும் தலையைக் கோதி விட்டும் பணிவிடை செய்தாள். அப்போதெல்லாம் அவள் உள்ளம் பொங்கி, உடல் சிலிர்த்து, பரவச நிலையிலிருந்தாள்.

இம்மாதிரி அவள் எத்தனை எத்தனையோ பூர்வ ஜன்மங்களில் அவருக்குப் பணிவிடை செய்தது போன்ற உணர்வு தோன்றியது. உருவமில்லாத ஆயிரமாயிரம் நினைவுகள் இறகுகளை சடசடவென்று அடித்துக் கொண்டு அவளுடைய உள்ளத்தில் கும்பல் கும்பலாகப் புகுந்து வெளியேறிக் கொண்டிருந்தன.

ஒரு பகலும் ஓர் இரவும் அவர்கள் அந்த ஓடைக்கால்வாய் வழியாகப் படகில் சென்றார்கள். பூங்குழலியும் சேந்தனும் முறை போட்டுக்கொண்டு அவ்வப்போது சிறிது நேரம் கண்ணயர்ந்தார்கள். கண்ணயர்ந்த நேரத்திலும் உருவந் தெரியாத இன்பக் கனவுகள் பலவற்றைப் பூங்குழலி கண்டாள்.

மறுநாள் சூரியோதய நேரத்தில், உலகமே பொன்னிறமாக ஜொலித்த வேளையில், படகு நாகைப்பட்டினத்தை அடைந்தது. நாகைப்பட்டினத்தின் அருகில் அந்த ஓடையிலிருந்து ஒரு கிளை பிரிந்து சூடாமணி விஹாரத்திற்கே நேராகச் சென்றது. அந்தக் கிளை வழியில் படகைக் கொண்டு போனார்கள். புத்த விஹாரத்தின் பின்புறத்தில் கொண்டு போய் நிறுத்தினார்கள்.

அச்சமயம் அந்தப் புகழ் பெற்ற சூடாமணி விஹாரத்தில் ஏதோ குழப்பம் நேர்ந்து கொண்டிருந்ததாகத் தோன்றியது. விஹாரத்தின் வாசலில் ஜனக்கூட்டத்தின் இரைச்சல் கேட்டுக் கொண்டிருந்தது. பிக்ஷுக்கள் அங்குமிங்கும் ஓடிக் கொண்டிருந்தார்கள்.

படகிலிருந்த மூவரும் கரையில் இறங்கினார்கள். சேந்தன் அமுதன், தான் விஹாரத்திற்குச் சென்று குழப்பத்தின் காரணம் என்னவென்று தெரிந்து வருவதாகச் சொல்லி விட்டுப் போனான்.

(தொடரும்)

**கல்கி கலெக்ஷன்**

# புத்தகங்கள் சம்பாதிக்கும் வழிகள்!

**அமரர் கல்கி**



புத்தகங்களின் சக்தியைப் பற்றிப் பெரியோர்கள் எவ்வளவோ சொல்லியிருக்கிறார்கள். புத்தகங்கள் அலமாரிக்கு அலங்காரம் என்றும், கரங்களுக்குப் பூஷணம் என்றும் கூறியிருக்கிறார்கள். 'அனுபவ வைத்திய' முறையில் புத்தகங்கள் உறக்கம் வராமைக்குச் சிறந்த மருந்து என்றும் கண்டுபிடித்திருக்கிறார்கள்!

சிலருக்குக் காபி அல்லது தேயிலைப் பானம் அருந்தினால் தூக்கம் போய் விடும். புத்தகத்தைக் கையில் எடுத்தால் தூக்கம் வந்துவிடும். புத்தகத்தின் மகிமையைப் பற்றி வேறு என்ன சொல்ல வேண்டும்?

புத்தகங்களைச் சம்பாதிப்பதற்குச் சாதாரணமாக மூன்று வழிகள் உண்டு என்பதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. யாசகம் வாங்குதல், கடன் வாங்குதல், திருடுதல் ஆகியவை அந்த மூன்று வழிகள். விலைக்கு வாங்குதல் என்னும் நாலாவது வழி ஒன்றும் இருக்கிறது. இவற்றில் நாலாவது வழியைக் கடைப்பிடிக்கும்படியான அவசியம் இரயில் பயணத்தின்போது நம்மில் பலருக்கு ஏற்பட்டு விடுகிறது.

ரயில் பிரயாணத்தில் பலருக்குத் தூக்கம் சரியாக வருவதில்லை. மந்திரி காட்கில்* போன்றவர்கள் பாக்கியசாலிகள். அவர்கள் ரயில் பிரயாணத்தின்போது நன்றாகத் தூங்குவது மட்டுமின்றித் திருட்டுக் கொடுக்கவும் செய்கிறார்கள். ஆனால் நம்மில் பலருக்கு ரயிலில் தூக்கம் வருவது கிடையாது. ரயில் ஆடி அசைந்து குலுக்கிப் போடுகிற போட்டில் வருகிற தூக்கமும் விரைந்து ஓடிப் போகிறது. ஆகையால் பொழுது போக்குகிறதற்கு ஏதேனும் புத்தகம் இருந்தால் நல்லது என்ற எண்ணம் உண்டாகிறது. இவ்வாறு புத்தகப் படிப்பின் வளர்ச்சிக்கு ரயில்வேக்கள் மிக்க உதவி செய்கின்றன. இதற்காகவே பெரிய ரயில்வே நிலையங்களில் புத்தகக் கடைகளும் வைத்திருக்கிறார்கள். புத்தகம் சம்பாதிக்கும் முறைகளில் முதல் மூன்று முறைகளும் ரயில் பிரயாணத்தின்போது அவ்வளவாகச்

* இந்த முன்னுரை எழுதப்பட்டபோது மத்திய அமைச்சராக இருந்தவரின் பெயர்தான் வி.என். காட்கில்!

சௌகரியப்படுவதில்லை. நாலாவது முறையைத்தான் கடைப்பிடிக்க வேண்டியிருக்கிறது.

ஒருசமயம் ரயிலில் பிரயாணம் செய்ய நேரிட்டபோது எனக்கும் அத்தகைய அவசியம் ஏற்பட்டது. "தூக்கந்தான் வருவதில்லை, ஏதேனும் ஒரு புத்தகமாவது படித்து வைக்கலாம்!" என்று எண்ணி, திருச்சி ரயில் சந்திப்பில் உள்ள புத்தகக் கடையில் ஒரு புத்தகம் வாங்கச் சென்றேன். கடையில் இருந்த புத்தகங்களைக் கண்ணோட்டம் இட்ட பிறகு, பளபளவென்று மூவர்ண அட்டை போட்டதாக ஒரு புத்தகத்தைக் கண்டுபிடித்து வாங்கினேன். அது வோட்ஹவுஸ் என்னும் பிரபல ஆங்கில நாவலாசிரியர் எழுதிய புத்தகம். ஆசிரியர் வோட்ஹவுஸ் நகைச்சுவைக்குப் பேர் போனவர். ஆங்கில மக்களின் நடை உடை பாவனைகளையும் பேச்சுக்களையும் வைத்துக்கொண்டு குலுங்கக் குலுங்கச் சிரிக்கும்படியான புத்தகங்களை எழுதி விடுவார். சிற்சில பாத்திரங்களை வைத்துக்கொண்டே அடுத்தடுத்துக் கதைகள் எழுதுவார்.

'சிரிப்பு வந்தால் வரட்டும்; அல்லது ஒரு வேளை தூக்கம் வந்தால் வரட்டும்' என்று எண்ணிக்கொண்டு, ஐந்தே முக்கால் ரூபாய் துணிந்து எடுத்துக் கொடுத்து, முன்னூறு பக்கமுள்ள ஒரு புத்தகத்தை வாங்கிக் கொண்டு போய் ரயிலில் என் இடத்தில் அமர்ந்தேன். அந்தப் புத்தகம் அதுவரையில் இருபத்தேழு லட்சத்து முப்பதினாயிரம் பிரதிகள் விற்றிருப்பதாக மேலட்டையிலேயே தெரிவித்திருந்தார்கள். விலைக்கு வாங்கிப் படித்தவர்கள் அத்தனை பேர்கள் எனில், மற்ற மூன்று வழிகளில் படித்தவர்கள் எத்தனை பேர் இருக்க வேண்டும்? ஆங்கிலத்தில் புத்தகம் எழுதும் ஆசிரியர்கள் கொடுத்து வைத்தவர்கள்தான். அவர்களுடைய அதிர்ஷ்டத்தை வியந்துகொண்டே புத்தகத்தைப் பிரித்துப் படிக்கலானேன்...

- (12.2.53 தேதியிட்டுத் தம்முடைய 'அலை ஓசை' நூலாக வெளியானபோது கல்கி அவர்களால் எழுதப்பட்ட நீண்ட முன்னுரையின் தொடக்கம் இது. இந்த முன்னுரையில்தான் "நான் எழுதிய நூல்களுக்குள்ளே ஏதாவது ஒன்று ஐம்பது அல்லது நூறு வருஷம் நிலைத்து நிற்கக் கூடியது என்றால் அது 'அலை ஓசை'தான்..." என்று அமரர் கல்கி தம்முடைய எழுத்தை மதிப்பிடுகிறார். (குறைத்துத்தான்!)



நான் கும்பகோணத்தில் லிட்டில் பிளவர் ஹைஸ்கூலில், ஆறாம் வகுப்புப் படித்துக் கொண்டிருந்த சமயம். ஒருநாள் என்னைத் தேடி வந்த 'ஐந்து ரூபாய் மணி யார்டர்' - நான் சற்றும் எதிர்பார்க்காதது! அன்று என் பிறந்த நாள். என் சித்தப்பா, எனக்குப் பிறந்த நாள் பரிசாக அனுப்பி வைத்த ஐந்து ரூபாயை, என் வகுப்பைத் தேடி வந்து கொடுத்து விட்டுப் போனார் தபால்காரர். நான் சந்தோஷத்தில் அந்த ஐந்து ரூபாயைச் செலவழிக்கப் பிரமாத மாகத் திட்டம் போட்டேன்.

எங்கள் பள்ளிக்கூட வாசலுக்கு ஒரு ஐஸ்காரர் தினமும் வருவார். குச்சி ஐஸில் உப்பு தடவிய எலுமிச்சம் பழத்தைத் தேய்த்துக் கொடுப்பார். ஐஸ்+உப்பு+புளிப்பு எல்லாம் சேர்ந்து ஜில்லிப்புடன் நாவில் இறங்குகிறபோது, அய்யோ... அப்படி ஒரு ருசி! நானும் நண்பர்களுமாக அடுத்த சில நாட்கள் அந்த ஐஸ் வாங்கிச் சாப்பிட்டே ஐந்து ரூபாயையும் செலவழித்து விடுவது என்பதுதான் என் திட்டம்.

மதிய இடைவேளை மணி அடித்தது. சிறிது நேரத்திலேயே அதே பள்ளிக் கூடத்தில் ஆசிரியராக இருந்த என் அப்பா அழைப்பதாக ஒரு பையன் வந்து சொன்னான். அப்பாவைப் பார்த்தவுடன், அவர் கேட்ட முதல் கேள்வி :

"ஏது உனக்குப் பணம்?" - எப்படி விஷயம் தெரிந்ததோ?

சித்தப்பா மணி ஆர்டர் அனுப்பிய பிறந்த நாள் பரிசு என்று நான் சொன்னவுடன், "அதைக் கொடு" என்று கேட்டு, பணத்தை வாங்கித் தன் சட்டைப் பையில் வைத்துக் கொண்டு, "நீ போகலாம்" என்று சொல்லி விட்டார். என் ஐஸ் கனவு கரைந்து போனது!

முதன் முதலில் நானே சம்பாதித்த பணம் என்று நான் எஸ்.எஸ்.எல்.சி. படித்த போது கிடைத்த பதினைந்து ரூபாயைச் சொல்லலாம். சாந்தோம் கலைத் தொடர்பு நிலையம் தயாரித்த ரேடியோ நிகழ்ச்சிக்கு நான் எழுதிய ஒரு ஸ்கிரிப்டின் தலைப்பு "தேவை ஒரு அணை". இளைஞர்களுக்கு கட்டுப்பாடான சுதந்திரத்தின் அவசியத்தை உணர்த்தும் நிகழ்ச்சிக்கான ஸ்கிரிப்ட்.

நான் எழுதிய ஸ்கிரிப்டின் அடிப்படையில் தயாரிக்கப்பட்ட நிகழ்ச்சியில் குமரி முத்து, கே.கே. சௌந்தர், ரெமி ஆகியோர் நடித்தனர்.

ஒலிபரப்பு விவரம், சன்மானம் போன்ற தகவல்கள் தெரிவித்து வந்த கடிதமே பணம் கிடைத்த சந்தோஷத்தைக் கொடுத்தது! தொடர்ந்து பதினைந்து ரூபாய் பணமும் மணியார்டர் மூலம் வந்து சேர்ந்தது.

அந்தப் பதினைந்து ரூபாய்க்குக் கதர் வேட்டி, கதர் சட்டை வாங்கி எடுத்துக் கொண்டு போய் எங்கள் பள்ளித் தலைமையாசிரியராக இருந்த ஃபாதர் லூயிசிடம் கொடுத்தேன்.

"எதற்காக இதெல்லாம்?" என்று கேட்டார் அவர்.

நான் நாடகம் எழுதிக் கிடைத்த சன்மானத்தில் வேட்டி, சட்டை வாங்கியதைக் குறிப்பிட்டு விட்டு, "இதை யாராவது ஏழைக்குக் கொடுத்து விடுங்கள்" என்றேன். அவருக்கு ஒரே ஆச்சரியம்.

"சின்னஞ்சிறிய என் சகோதரர்களுள் ஒருவருக்கு நீங்கள் செய்ததையெல்லாம் எனக்கே செய்தீர்கள்" என்று பைபிளில் வருகிறதில்லையா? அதன்படி நான் யேசுவுக்கு இதை என் காணிக்கையாக்க விரும்புகிறேன்" என்றவுடன், என்னைத் தட்டிக் கொடுத்துப் பாராட்டினார்.

# 15 ரூபாய்

அந்தப் பதினைந்து ரூபாயை வேறு எப்படிச் செலவழித்திருந்தாலும், இந்த அளவு எனக்கு மகிழ்ச்சி ஏற்பட்டிருக்காது என்பது மட்டும் நிச்சயம்.

ஆரம்பம் முதலே எங்கள் குடும்பத்தில் பணப் புழக்கம் குறைவு. வாழ்க்கைக்குப் பணம் ஓரளவு இருந்தாலே போதும் என்கிற எண்ணம் ஆழமாய் ஊறிப் போனது. அதனால்தானோ என்னவோ, விஜய் டீ.வி.யில் சேர்ந்தபின், மாதச் சம்பளமாக ஒரு லட்சம் ரூபாய் நான் பெற்றபோது கூடப் பெரிதாய்ச் சந்

ரபி பெர்னார்ட்

தோஷம் ஏற்பட வில்லை. இது நிஜம். என் அம்மாவிடம், இந்தத் தகவலைச் சொன்ன போது கூட அவரும், 'அப்படியா?' என்று கேட்டுக் கொண்டாரே தவிர பிரமித்துப் போகவில்லை.

என் அப்பாவும், அம்மாவும் மட்டும் பிலிப்பைன்ஸில் இருந்தார்கள். நான் சென்னையில் லயோலா கல்லூரியில் பணிபுரிந்து கொண்டிருந்தேன். ஒரு சனிக்கிழமை காலை பிலிபைன்ஸிலிருந்து, 'அப்பாவுக்கு உடம்பு சரியில்லை; தாமதமின்றி உடனே புறப்பட்டு வா' என்று அம்மா டெலிபோன் செய்தார்.



# சந்தோஷம்!

கல்லூரிக்கு விடுமுறை. விமான டிக்கெட் வாங்கக் கையில் பணமில்லை. விசா வாங்க முடியாது. காரணம், கான்சலேட் ஜெனரல் அலுவலகத்துக்கு அன்று விடுமுறை. பாங்கிற்குப் போய்ப் பணம் எடுக்க முடியாத சூழ்நிலை. அப்பாவுக்கு உடம்பு சரியில்லை என்று மட்டும் அம்மா சொன்னாலும் அப்பாவுக்கு ஏதோ ரொம்ப சீரியஸ் என்று உள் மனம் சொன்னது.

அந்தச் சமயம், ஆபத்பாந்தவராக உதவியவர் எங்கள் குடும்பத்துக்கு மிக நெருங்கிய நண்பரான சுப்ரமணியம். பிலிபைன்ஸில் முக்கியப் பொறுப்பில் இருந்த அவர், அங்கிருந்து தாமஸ் குக் நிறுவனத்துக்குப் போன் செய்து, எனக்கு விமான டிக்கெட் வழங்கவும், பிலிப்பைன்ஸ் கான்சலேட் ஜெனரல் எனக்காகப் பிரத்யேகமாக ஆபீசைத் திறந்து விசா வழங்கவும் ஏற்பாடு செய்தார்.

பிலிப்பைன்ஸ் போய் இறங்கியபோது கோமா நிலையில் இருந்தார் என் அப்பா. அன்று என் கையில் பணமில்லாத போது, சுப்ரமணியம் உதவியிருக்காவிட்டால், என் அப்பாவின் முகத்தை நான் பார்க்க முடியாமல் போயிருக்கும்.

பிலிப்பைன்ஸ் நாட்டில் ஒரு வழக்கம். நம் ஊரில் கல்யாணங்களில் 'மொய்' எழுதுவது போல, அங்கே ஒரு குடும்பத்தில் சம்பாதிக்கும் குடும்பத் தலைவர் இறந்து போனால், அவர் வீட்டுக்கு துக்கம் விசாரிக்க வருகிறவர்கள் ஒரு கவரில் ஒரு தொகையை வைத்து குடும்பத்தாரிடம் கொடுத்து உதவுவார்கள். என் அப்பாவின் மரணத்தின் போது, பிலிப்பைன்ஸ்காரர்கள் கொடுத்த கணிசமான பணம் எங்கள் குடும்பத்துக்கு மிகவும் உதவியாக இருந்தது. அதனால்தான், நான் கூட எனக்கு நெருக்கமான குடும்பங்களில் குடும்பத் தலைவர் மரணமடைந்தால், ஒரு தொகையைக் கொடுத்து உதவுவதை வழக்கமாகக் கொண்டிருக்கிறேன்.

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

# ஒரு காதல் டைரி 8

## வைக்கம் முகம்மது பஷீர்

"எழுதுவதற்கு ஒரு பேனா தா. சொந்தப் பணத்தில் எனக்கு ஒரு பேனா வாங்கித்தா. அதிக விலையில் அல்ல. சரஸ்வதி தேவியின் கையால் அனுக்கிரகித்தது போல் எனக்குத் தா. எழுதுவதற்கு எனக்கு ஒரு பேனா தா. போராட எனக்கு வாள் இல்லை.

கோபக்காரியே, கேட்டுக்கொள். இன்று முதன் முதலாக நான் அழுதேன். வெகு காலமாயிற்று நான் அழுது. கண்ணீரின் ஊற்று வற்றிப் போயிருந்தது. துயரின் இனிமை கலந்த மோகன காவியம் இன்று என்னை அழவைத்துவிட்டது. குலுங்கிக் குலுங்கி நான் அழுது விட்டேன்.

இன்று முதன் முதலாக எனக்கு ஞாபகப் பிசகு உண்டாயிற்று. கவனமாய்க் கேட்டுக் கொள். பிடிவாதக்காரியே, கவனித்துக் கேள்.

இன்று என்ன நாள் என்பதும் எனக்குத் தெரியாமல் போய்விட்டது. குளியலும், டீயும் முடித்து நான் உனக்குக் கடிதம் எழுதிக் கொண்டிருந்தேன். என்றால், எழுதி முடித்ததை மீண்டும் நல்ல கையெழுத்துப் பிரதி எடுத்துக் கொண்டிருந்தேன்.

அப்படி மணி பதினொன்றுக்கு மேல் ஆகியிருக்கும். அல்லது பன்னிரண்டோ? பையன் எனக்காக ஹோட்டலில் இருந்து எடுப்புச் சாப்பாடு கொண்டு வந்தான். கூடவே இரண்டு கடிதங்களையும்.

சோற்றுப் பாத்திரத்தை அவன் கீழே வைத்தான். (இது ஓர் இரண்டு அடுக்கு மாளிகை. காயல் ஓரம். இங்கிருந்து பார்த்தால் ஆட்கள் வருவதையும் போவதையும் காணலாம். ஆகமொத்தம் குடியிருப்பது நான் மட்டும்).

பையன் இரண்டு கடிதங்களையும் மாடிக்குக் கொண்டு வந்தான். ஒன்று உன்னுடையது என்று புரிந்தது. திறக்கும் முன்பே நான் நடுங்கினேன். கோபக்காரி எந்த குண்டை வெடிக்கப் போகிறாளோ? நான் கடிதத்தைப் பிரித்து வாசித்தேன்.

பையனிடம் சொன்னேன். "நீ சோறு சாப்பிட்டுக்கோ. எனக்கு வேணாம். சாப்பிட்டுட்டு நீ பாத்திரத்தைக் கழுவி வச்சுட்டுப் போயிடு. இன்னிக்கு நீ வர வேணாம்."

அவன் சாப்பிட்டபின் போய்விட்டான். நான் உட்கார்ந்து குலுங்கிக் குலுங்கி அழுதேன். எழுந்து அங்குமிங்கும் நடந்து கொண்டே அழுதேன். பின் எல்லாவற்றையும் வாரி எடுத்துக் கொண்டேன். என் முகத்தைக் கண்ணாடியில் பார்த்தேன்.

புத்தகம், கடிதங்கள், கதை எல்லாவற்றையும் வாரி எடுத்தேன். கீழே இறங்கினேன். சாவி பாக்கெட்டில். கட்டடத்தைப் பூட்டியதாகத்தான் என் ஞாபகம்.

ஆனால் பூட்டி இருக்கவில்லை. எல்லாக் கதவுகளும் விரியத் திறந்திருந்தன! ஒன்றும் அறியாமல் நான் நடந்தேன். வழியில் ஒரு வண்டி பிடித்தேன். நேரே உன் காலேஜுக்குப் போனேன். யாரும் தென்படவில்லை. ஏன் யாரையுமே காணோம்? அப்படி நின்றபோது ஒரு பிராமணர். கொஞ்சம் வயசானவர்.

"இதுதானே பி.டி. காலேஜ்?"

"ஆமாம்."

"எனக்கு ஒரு ஸ்டூடண்டைப் பார்க்கணும்."

"இன்னிக்கு விடுமுறை."

விடுமுறை! எதற்காக விடுமுறை? நான் நேரே நடந்தேன். நிற்கவில்லை. அதிகம் பேசவில்லை. கதறி அழுது விடுவேன் போலிருந்தது. இங்கே வந்து பார்த்தால் கட்டடத்தின் கதவுகள் எல்லாம் விரியத் திறந்து கிடக்கின்றன.

தேவீ, எனக்குக் களைப்பாக இருக்கிறது. ஏதாவது சொல். ஏதாவது.

தேவீ எழுது. கதைகள், கவிதைகள், எல்லாம் எழுது.

இருதயத்தில் பேனாவைத் தோய்த்து எழுதுக. ஆத்மாவை ஸ்பரிசித்து எழுது.

எழுதி வைத்திருக்கிற புதிய கதைகளை இங்கே அனுப்பி வைக்கலாமே! எனக்கு எப்பொழுதும் உன்னைப் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும். இந்தக் கடிதத்தை மிகவும் கவனத்தோடு படிக்கவும்.

இதுதான் என் முதல் கடிதம் என்று கருதுக. மற்றதை எல்லாம் மறக்கவும், மறந்து விடவும். உன்னை நான் வேதனைப்படுத்தி விட்டேனா? மன்னிக்கவும்.

என் சரஸ்வதி தேவியே, மன்னிக்கவும். என் எல்லாத் தவறுகளையும் மன்னிக்கவும். இதில் என் கண்ணீரை நான் சிந்தவில்லை. நீ மன்னிக்க வேண்டும்.

வேண்டுமானால் இதை எல்லாம் என் ரத்தத்திலே எழுதி அனுப்புகிறேன். தேவி, வாசித்து நன்கு யோசித்து, பதிலை வேகமாய் அனுப்பவும். என்னைப் பரீட்சிக்க வேண்டாம். இனிமேல் எப்போதும் என் இதயம் தேவியுடையதுதான் என்று நினைத்து பதில் எழுது.

நல்வாழ்த்துக்களுடன்
உன் சொந்தமான.

## தமிழில் : வையவன்

அடுத்த நாள் தேவி காலேஜில் இருந்து வரும் வழியில் கொடுக்கலாம் என்று எண்ணி கடிதத்துடன் நேரத்தோடு புறப்பட்டேன். தேவியின் வீட்டுக்கு அருகே வரை போனேன். படி ஏறவில்லை.

மீண்டும் திரும்பி நடந்தேன். மறுபடியும் போய்ப் பார்க்கலாமா என்று நினைத்தேன். அப்போது தேவியின் அடுத்த வீட்டில் முன்பு நான் குடியிருந்த இடத்தில் வசிக்கும் இரண்டு கம்யூனிஸ்டுகள் என்னைப் பார்த்தனர். எனக்கு வெட்கம் தோன்றியது. தேவிக்கும் எனக்கும் உள்ள நெருக்கத்தை அவர்கள் ஊகித்திருந்தனர்.

"எங்கே?"

"சும்மா ஒரு ஆளைப் பார்க்கப் போறேன்."

அந்த ஆள் யாரென்று அவர்கள் ஊகித்தனர். அர்த்த புஷ்டியோடு, "ஊம்! நடக்கட்டும்... நடக்கட்டும்" என்று சொல்லிவிட்டு அவர்கள் போனார்கள். நான் மிகவும் வருத்தத்தோடு மீண்டும் நடந்தேன். திரும்பி நடந்



தேன்.

சற்றுத் தள்ளி ஓரிடத்தில் வழி ஓரம் காத்து நின்றேன். ஒரு மணி நேரம். தேவி வருவதைப் பார்த்தேன். இளமஞ்சள் சேலை. முடியை இறுக்கி முதுகில் அப்பம் போல் கட்டி வைத்திருந்தாள். கழுத்தும் காதும் வெறிச்சிட்டிருந்தன. எனக்கு ஏதோ ஒரு வருத்தம் தோன்றியது.

தேவி என்னைப் பார்த்ததும் வண்டியை நிறுத்தச் சொன்னாள். கீழே இறங்கவில்லை. வண்டியிலேயே உட்கார்ந்திருந்தாள். நான் போய்க் கடிதத்தை நீட்டினேன். பதிலுக்கு எனக்கு ஒரு கடிதம் தந்தாள்.

"நேத்து ஏன் அப்படி பேனாவைக் குத்தி ஒடச்சீங்க?"

"அதை வச்சு வேற எதுவும் எழுத வேணாங்கிற உத்தேசம்!"

தேவி எதுவும் பேசவில்லை.

ரிக்ஷாவை ஓட்டச் சொன்னாள். வண்டி பாய்ந்து சென்றது. என்னை ஒரு தரம் திரும்பிப் பார்ப்பாள் என்று நினைத்தேன். விரும்பினேன். அவள் திரும்பிப் பார்க்க வில்லை.

நான் கொஞ்சம் தூரம் நடந்தேன். வழி யில் ஒரு ரிக்ஷா பிடித்தேன். என் இருப் பிடம் சென்றேன். கடிதத்தைப் பிரித்து வாசித்தேன். நான் கொடுத்த ரோஜா நிற 'பேடி'ல்.

"பிரியமுள்ள சகோதரா.

என்னை அப்படிப் பார்க்காதீர்கள். அண்ணா தாங்கள் என்னை அப்படிக் கருதாதீர்கள். ஈசுவரா! குத்தின் மேல் குத்து. காயத்தின் மீது காயம். என் திறந்த மனசான நடத்தையைத் தாங்கள் தவறாகப் புரிந்திருக்க வேண்டும்.

என்னை அப்படிப் பார்க்காதீர்கள். அப்பா நேற்று கோபித்துக் கொண்டார். தாங்கள் என் திருமணத்திற்கு வரவேண்டும். மரணத்திற்கும். வராமல் இருக்கக் கூடாது.

பிரியமுள்ள அண்ணா, எழுதி வைத் திருந்த கதையை நான் கட்டெரித்து விட் டேன்.

நல்லன்புடன்
சகோதரி தேவி

கடிதத்தை வாசித்ததும் என் முகம் வெளுத்தது. உடனே சிரித்தும் விட்டேன். பிறகு பென்சில் எடுத்து அந்தக் கடிதம் முழு வதையும் அடித்தேன். அதன் மேலே இவ் விதம் எழுதினேன்.

"தேவி, இந்தப் பொய்கள் எதுவும் எனக்கு எழுதி அனுப்ப வேண்டாம். உண்மையை

எழுது. உண்மை மட்டும் எழுது.

தேவிக்குச் சொந்தமான.

கல்லூரி முகவரிக்கு அந்தக் கடிதத்தை அனுப்பினேன். அடுத்த நாளும் அதற்கு அடுத்த நாளும் விடுமுறை நாட்கள் ஆனதால் அந்தக் கடிதம் மூன்று நாட்கள் கழித்தே தேவிக்குக் கிடைக்கும்.

அதற்கிடையில் யாராவது பிரித்துப் படித்து விட்டால்? உடனே நான் வேறு ஒரு கடிதம் எழுதி, வீட்டு விலாசத்திற்கு தேவிக்கு அனுப்பினேன்.

"பிரியமுள்ள தேவி,

உன் அந்தப் பொய்க் கடிதத்தை என்னுடைய சிறு குறிப்போடு கல்லூரி விலாசத்திற்கு அனுப்பியிருக்கிறேன். அது மூன்று தினங்கள் கழித்தே கிடைக்கும். யாராவது உடைத்து வாசித்து விட்டால் என்று விவரம் முன் கூட்டி அறிவிக்கவே இக்கடிதம்.

நல்வாழ்த்துக்களுடன்

தேவிக்கே உரிய.

இப்படி இருக்கும்போது ஒன்று தோன்றியது. பேனா வாங்கித் தரச் சொன்னது வீம்புக்காகவா? பேனா இல்லை என்றால் பென்சில் உண்டு. இதுவும் எழுதுகோல் தானே! எப்போதேனும் எனக்கு எழுதுகோல் இல்லாதிருந்துள்ளதா? எப்போதும் வாள் உள்ள ஒரு போர் வீரன் நான்!

எழுதுகோல் இருக்கிறது என்ற ஓர் எண்ணம்! அது மட்டுமின்றி ரேஷன் காலம் ஆகையால் ஒரு பேனா வாங்க தேவி மிகவும் பாடுபட்டு விடுவாள். நான் சற்று அதிகமாகவே புத்தகங்கள் கொடுத்திருக்கிறேனே! என் ஆரம்ப காலப் புத்தகங்களையும் மற்றும் சிறுகதைத் தொகுதிகளும். அது தவிர கொடாமங்கலம் பப்புக்குட்டியின் 'கடத்து வஞ்சி', ஏ. பாலகிருஷ்ணப் பிள்ளை அவர்கள் மொழி பெயர்த்த கிடே மோப்பஸானின் 'ஒரு ஸ்த்ரீயுடே ஜீவிதம்.'

அவற்றுக்கெல்லாம் பிரதிபலனாகவே பேனா கேட்பதாக நினைத்து விட்டாள் என்றால்? வேண்டாம். பேனா வேண்டாமென்று தெரிவிக்க வேண்டும். நான் எழுதினேன்.

"பிரியமுள்ள தேவி.

நான் அனுப்பியிருந்த கடிதத்தில் எழுதுகோல் எனக்கு இல்லை என்ற பகுதியை தயவு செய்து நான் சொல்லாததாக பாவிக்கவும். தாற்காலிகமான கடுமையான துக்கத்தின் ஓர் அலறல்தான் அது. மன்னிக்கவும்.

எனக்கு எழுதுகோல் உண்டு. எப்பொழு

தும் உண்டு. என்றால், பின்னே எழுதுகோல் இல்லை என்று எழுதி அனுப்பியது ஏன்? தயவு செய்து மன்னிக்கவும். எழுதுகோல் உண்டு. பென்சிலை வைத்தும் எழுதலாம்.

உனக்கு ஒரு பேனா வாங்க மிகவும் கஷ்டமாக இருக்கும். அதனால் அந்த விஷயத்தை மறந்து விடவும்.

இனிமேல் உன் தலைமுடியை இறுக்கிக் கட்டி வைக்க வேண்டாம். இறுக்கி அப்பம் போலக் கட்டி வைப்பது உனக்கு விகாரமாய் இருக்கிறது. அழகை ஆராதிக்கும் ஒரு கலைஞன் இதைச் சொல்வதாகக் கொள்ளவும். கூந்தலைப் பின்னிவிடவும். அல்லது கருட்டி மார்பின் மேல் போட்டுக் கொள்ளவும்.

நன்றாக வாசித்துப் படிப்பைத் தொடரவும். ஜெயிக்க வேண்டும். மற்ற சிந்தனைகளைத் தாற்காலிகமாக மாற்றி வைக்கவும்.

நன்றாக நிறையச் சாப்பிடவும். மேனியைக் கொஞ்சம் கூடுதலாகவே நல்லபடி வைத்திருக்க வேண்டும். தேகத்தில் தாராளமாக ரத்தம் உருவாகும்போது மனசின் துக்கம் போகும். ஆகவே சரியாகச் சாப்பிடவும்.

எல்லா நலன்களும் வேண்டி,
சொந்தமான.

தேவியின் பதில் கிடைத்தது. கடிதத்தோடு ஒரு டிக்கெட்டும். மூன்று ரூபாய் டிக்கெட். கல்லூரியில் பல்சுவை நிகழ்ச்சிக்கானது.

முந்தைய கடிதங்கள் எல்லாவற்றுக்குமான ஒரு பதில். ஆனால் இடையில் ஓரிரு முறை நான் கேட்டபோது என் கடிதங்களை எல்லாம் அப்போதைக்கு அப்போது கிழித்து எறிந்து விடுவதாகத்தான் சொல்லியிருந்தாள்.

கொஞ்சம் குளிர்ச்சி கூடிய அந்த பதில் இதோ:

"பிரியமுள்ள பஷீர்!

பி.டி. காலேஜில் படிக்கும் அதிகமான பேர் ரொமான்ஸிற்கான வயது போய் விட்டவர்கள். ஓரிருவர் தவிர. கடிதங்களைப் பற்றிக் கவலைப்படத் தேவையில்லை. கடிதங்கள் எனக்குக் கிடைத்தன.

நான் சொல்லப் போவதைக் கேட்கத் தேவையான பொறுமை தங்களுக்கு வரும் என்று நம்புகிறேன். தங்களுடைய கேள்விகளுக்கான சில சமாதானங்களைச் சொல்ல வேண்டி உள்ளது.

1) முகமறியாத ஒரு நூலாசிரியர் மீது உண்டான நேச பூர்வமான மதிப்பு, எதிர்பாரா விதத்தில் அவரைச் சந்திக்க நேர்ந்ததைத் தொடர்ந்து உண்டான நட்புறவு ஆகியவை தங்களுடைய தப்பபிப்பிராயத்தை நீக்க என்னைத் தூண்டியது. இதில் பிசகு ஏதுமில்லை.

2) நான் ஒருபோதும் தனித்து இருந்ததில்லை. என்னுடைய கப்பலில் வெகுகாலமாக என்னை நேசிக்கவும் வெறுக்கவும் ஆட்கள் உண்டு. தங்கள் மீது அக்கறை உள்ள மிகவும் நெருக்கமான ஒரு நண்பர் – நான் – மரணம் வரை தங்கள் கப்பலில் இருப்பேன். நாம் ஒரு போதும் ஆகாயத்தில் ஏகாந்த சஞ்சாரிகளான ஒற்றைப் பறவைகளாய் இருக்கப் போவதில்லை.

3) எதிர்பாராத அனுக்கிரகத்தில், எதிர்பாராது ஆட்பட்ட நான் அர்த்தம் ஏதும் கற்பித்துக் கொள்ளவில்லை. 'அனுக்கிரகம்' எதனால் என்றால் கலைஞர்கள் எப்போதும் அதிசய உத்திகளைக் கூறுபவர்கள்.

4) ஒரு நண்பர் என்ற நிலையில் நான் தங்களை விரும்புகிறேன். ஒரு நூலாசிரியர் என்ற நிலையில் தங்களை மதிக்கிறேன், விரும்புகிறேன். ஒரு சகோதரன் என்ற நிலையில் உங்களை நேசிக்கிறேன்.

(தொடரும்)



**"அந்த நடிகை தான் நடிக்கும் எல்லா படத்துலயும் குடமோ, தவலையோ தன் கையில வச்சுக்கிட்டு வர்றாங்களே, கவனிச்சியா?"**

**"எந்தப் பாத்திரத்தையும் ஏற்று நடிப்பேன்னு சொன்னாங்க இல்ல, அதான்!"**

**– ஜானகி தர்மராஜன்**

# KALKI SHOPPING PAGE

போன செவ்வாய்க்கிழமை படையப்பா பார்த்தேன். ('உனக்கு எத்தனை டிக்கெட் வேணும், சொல்லு கபி?'ன்னு ஒரு தியேட்டரையே புக் பண்ணத் தயாரா இருந்த, லெட்டர் போட்ட தேவனாங்குறிச்சிக்காரருக்கு சிரமம் வெக்காம, நானே இங்க உதயத்துல வாங்கிக்கிட்டேன்.)

தியேட்டர்ல என்ன ரகளைங்கறீங்க? டிக்கெட் கவுண்ட்டர்ல தொடங்கின உற்சாகம், ரசிகர்களுக்குப் படம் முடிஞ்சு வெளிய வர்ற வரைக்கும் அரை சதவீதம் கூடக் குறையலை.

எப்பல்லாம் ரஜினி கேமராவை நேரா பார்த்து தமிழ், தமிழர்கள், மக்கள் சக்தி அது இதுன்னு டயலாக் விடறாரோ, அப்பல்லாம் காது கிழியற விசில்!

ஒரு சீன்ல, டைரக்டாவே ரசிகர்களை 'அடியாள்'னு வேற சொல்றார். அதுக்கும் விசில்!

கதைக்குள்ள, படத்துக்குள்ள, அது தர்ற மெஸேஜுக்குள்ள போகணுங்கறதுகூட இல்லை; 'ரஜினி படம் வந்திருக்குங்கற ஒண்ணே போதும் - செலிபிரேட் பண்ண'ங்கறாங்க. இந்த ரசிகர்களை நினைச்சா கவலையா இருக்கு. என்னதான் ரஜினி, படத்துக்குப் படம் 'அப்பா அம்மாவை கவனிங்க. உழைச்சு முன்னேறுங்க'ன்னு சொன்னாலும் அதை மட்டும் கேப்பாங்களான்னு டவுட்டா இருக்கு. 'இந்தக் கட்சிக்கு வோட்டுப் போடுங்க'ன்னு சொன்னா உடனே கேட்கறமாதிரி, மேற்படி விஷயம் அத்தனை தூரம் அவங்க கவனத்தைக் கவருதான்னு யோசிச்சிப் பார்க்கிறேன். (கவர்ந்திருந்ததுன்னா ஏன் நூத்தம்பது ரூபா பிளாக்ல டிக்கெட் வாங்கிட்டு ஓடி வராங்க?)

தனிப்பட்ட முறைல எனக்கு அவர் படத்தை விட - அது மூலமா அவர் பண்ற சில நல்ல காரியங்கள் பிடிச்சிருக்கு. கல்வி அறக்கட்டளை, இலவசத் திருமணங்கள் எட்செட்ரா.

சம்பாதிக்கற எல்லாருக்கும் இந்த மனசு வருதாங்கறதுதான் கேள்வி. ரசிகர்களுக்கு அவர் தர்ற ரியல் மெஸேஜ் படத்துல இல்லை; இது மாதிரி காரியங்கள்லதான் இருக்கு. எப்ப இதைப் புரிஞ்சிப்பாங்க?

• • •

எங்க பேட்டை பஸ் ஸ்டாண்ல ஒரு பிச்சைக்காரர் இருக்கார். After working hours இவர் என்ன பண்றார்னு பார்க்க ரொம்ப நாளா எனக்கு ஒரு க்யூரியாஸிடி. ஒரு நாள் சாயங்காலம் அஞ்சு மணிக்குக் கிளம்பி அவரை ஃபாலோ பண்ண ஆரம்பிச்சேன். (யூஷுவலா அஞ்சரைக்கு அவரோட ட்யூட்டி டைம் முடியும்)

தம்ளர்ல கலெக்ட் ஆனதை ஷர்ட் பாக்கெட்ல போட்டுக்கிட்டு ரோடு கிராஸ் பண்ணி, ரயில்வே ஸ்டேஷனுக்குப் போனார், முதல்ல.

பிளாட்பாரத்து மூலைல யாருமில்லாத இடத்தைத் தேர்ந்தெடுத்து உட்கார்ந்து, கலெக்ஷனை எண்ணினார். பதினஞ்சு ரூபா தேறியிருக்கும்னு நினைக்கறேன்.

சட்டுனு வேட்டியைத் தூக்கி, உள் டிராயர்ல கை விட்டு ஒரு பிடி சில்லறை எடுக்கறார். பழைய கலெக்ஷனோ? சேவிங்ஸா இருக்கலாம்னு நினைக்கறதுக்குள்ள ரெண்டையும் ஒண்ணா சேர்த்து மறுபடி எண்ணினார். இருவத்தஞ்சு ரூபா வந்திருக்கும் போல.

அதை மொத்தமா ஒரு

வாழ்த்துக்கள்!
தொடரட்டும்
உங்கள் பணி!



• கரு.வோட முதல் பிறந்தநாளுக்கு வரைஞ்ச படம்! ஸாரி கொஞ்சம் லேட் ஆயிடுச்சு!

சுருக்குப் பைல போட்டு முடிச்சுட்டு எழுந்து போய் ஸ்டேஷன் குழாய்ல நல்லா தேய்ச்சி முகம் கழுவினார். Then, அங்கேயே VLRல ஒரு சாய்.

அப்படியே நடந்து போயி, மறுபடி மெயின் ரோடுக்கு வந்து கொஞ்ச நேரம் பஸ் ஸ்டாண்டுல நின்னு வேடிக்கை பார்க்கறார். ஒரு வாழைப்பழம் வாங்கி சாப்பிட்டு, சட்டுனு ஒரு மாலைமுரசு வாங்கறார்.

ஆச்சரியமா நான் பின்னாலேயே போனேன். அதுக்குள்ள மணி ஆறே கால் ஆயிடுச்சு. ஒரு தள்ளு வண்டி உணவு விடுதில எட்டு ரூபாய்க்கு என்னவோ சாப்டுட்டு, நாலு தம்ளர் தண்ணி குடிக்கறார். பசி போச்! காதுலேருந்து ஒரு பாதி பீடியை எடுத்து பற்ற வைக்கிறார். அடடா! அந்த முகத்துல என்ன ஒரு ஆனந்தம்!

மறுபடியும் ஸ்டேஷன். இப்ப அனதர் என்ட். அங்க கூட்டம் அதிகம் இல்லை. ஒரு ஓரமா, கம்பத்துல சாய்ந்து உட்கார்ந்து பேப்பரைப் பிரிக்கறார். எந்த நியூஸ்ல அவருக்கு ஆர்வம்னு என்னால அனுமானிக்க முடியலை. சிலதை ரொம்ப ஆவலாவும் சிலதை மேலோட்டமாகவும் புரட்டறார். பத்து, பதினைஞ்சு நிமிஷம். சட்டுனு, பேப்பரை நீள வாக்குல விரிச்சிப் போட்டு, அதும் மேலேயே படுத்துடறார். முகத்துல ரொம்பக் களைப்பும் அலுப்பும் தெரியுது.

பதினைஞ்சு நிமிஷத்துல (ஆறே முக்கால் தான் மணி!) தூங்கிப் போயிடறார். எந்த சவுண்டும் அவரை டிஸ்டர்ப் பண்றதில்லை.

மறுநாள் காலை மறுபடி பஸ் ஸ்டாண்டுல அவரைப் பார்க்கிறேன். நானும் எட்டணா போடறேன். முகத்தைக்கூட அவர் பார்க்கறதில்லை. 'தம்ளர் ரொம்பினா பதினைஞ்சு ரூபான்னு ஏதாவது கணக்கு இருக்கும் போல!'

குடும்பம், குழந்தை இல்லை போலிருக்கு. அதைவிட, பிச்சை எடுக்கறதைவிட, நாள் முழுக்க யாரோடவும் பேசறதே இல்லைங்கறதுதான் அவருக்கு இருக்கக்கூடிய பெரிய கஷ்டம்னு நினைக்கிறேன்.

• • •

## ரஜினியின் மெஸேஜ் புரிகிறதா?

**கோ**தை நாயகின்னு நம்ம ஊர்ல ஒரு சூப்பர் ஸ்டாரிணி இருந்திருக்காங்கன்றது மன்ற உறுப்பினர்கள் யாருக்காவது தெரியுமா? அறுபது வயசுக்கு மேற்பட்டவங்களைக் கேட்டுப் பாருங்க. அந்தக் காலத்துல, 'வை.மு.கோ.வின் 79வது நாவல், 'கோதை நாயகியின் நூறாவது நாவல்'னு போஸ்டர் அடிச்சி ஒட்டாத குறையா கொண்டாடு வாங்களாம்.

தமிழின் முதல் பெண் நாவலாசிரியர்னு இவங்களைச் சொல்ல முடியுமான்னு தெரியலை. வை.மு.கோவோட நூற்றாண்டு நெருங்கற நேரத்துல, அவங்களைப் பத்தி அற்புதமான ஒரு நூல் எழுதி வெளியிட்டிருக்கார் திருப்பூர் கிருஷ்ணன். (இலக்கியச் சிந்தனை வெளியீடு)

சுதந்தரப் போராட்டக் காலத்துல, காந்தீயத்தைப் பரப்ப எழுத்தை ஆயுதமாக கொண்டவங்கள்ல வை.மு.கோ ஒருத்தர்.

ஆனா, கோதை நாயகி எழுத்துல வெளிப்படையான காந்தீயப் பிரசாரம் இருக்காது; ரொம்ப மறைபொருளா காந்தீயத் தத்துவத்தை அவர் பரப்பி வந்ததா சொல்றார் திருப்பூர் கிருஷ்ணன்.

வை.மு.கோ, ஒரு அற்புதமான பாடகி, சமூக சேவகி, தீவிர ஆன்மீகவாதி, கதர் மட்டுமே உடுத்துவார். மாடிப்படில உட்கார்ந்து எக்ஸ்பிரஸ் வேகத்துல எழுதிட்டே போவார், ஆல் இண்டியா ரேடியோ விவாதங்கள்ல கலந்துப்பார். சுதந்தரப் பிரசார மேடைகள்ல பேசுவார். ஜகன் மோகினின்னு ஒரு பத்திரிகை நடத்தினார்.

அவரோட இந்த அத்தனை முகங்களையும் திரை விலக்கிக் காட்டியிருக்கு இந்தப் புஸ்தகம்.

மிகப் பெரிய ஆச்சர்யம் என்னன்னா, இந்த 'புகழ் பெற்ற' நாவலாசிரியருக்கு ஆரம்பத்துல எழுதப் படிக்கவே தெரியாது! தன் நாவல்களை வாய்மொழியா சொல்லி, மத்தவங்களை எழுத வெச்சிருக்கார்.

இவர் புகழ் பரவறது தாங்காம, அந்த நாள்ல பிரபலமா இருந்த இன்னொரு நாவலாசிரியர் வடுவூர் துரைசாமி அய்யங்கார், பலவகைல இவருக்குப் பிரச்னை குடுத்தும், இவர் ஜெயிச்சிக் காட்டிருக்கார்.

ரொம்ப சின்ன புஸ்தகம்தான்! ஆனா, ஒரு லட்சியத்தோட செயல்பட்ட எழுத்தாளரை — அநேகம் பேர் மறந்துட்ட எழுத்தாளரை, அவரோட அத்தனை பரிணாமங்களும் வெளிப்படறாப்பல காட்டறதுல இது பெரிய வெற்றி அடைஞ்சிருக்கு.

**(கோதை நாயகியின் இலக்கியப் பாதை/ திருப்பூர் கிருஷ்ணன்/வானதி பதிப்பகம், சென்னை-17/ரூ.25)**

— சுமி

# நடக்குமென்பார், நடக்கும்!



**மேஷம்** : (அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)

வார முன் பகுதில சந்தோஷ சமாசாரங்கள் நடக்குதேன்னு மெத்தனமா இருந்துடாதீங்க. கிரகங்கள் சரியில்லாததால காரியத் தாமதம், வீண் அலைச்சல், எதிரிங்க தொல்லை, மனக்குழப்பம்னு சிக்கலான விஷயங்களும் கியூவுல நின்னு காத்துக்கிட்டேயிருக்கும். அதனால முக்கியமான திட்டங்கள் எதுவானாலும் ஒத்திப் போட்டுடுங்க. வீண் வம்புதும்புகளில் மாட்டிக்காதீங்க. உஷ்ணாதிக்கத்தால வயித்துக் கோளாறு மாதிரியான ஆரோக்கியக் கேடுகள் வரலாம். வெளிநாட்டுச் சேதியால பிரயோஜனம் இருக்காது. பயணம் வேணவே வேணாம்.



**ரிஷபம்** : (கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)

குடும்பத்தில் மகிழ்ச்சியும் மனகல உற்சாகமும் கூடிக்கிட்டே வரும் வாரம் இது. டிரன்ஸிஸ்டர்லேர்ந்து டீவி, ஃபிரிட்ஜ் வரை எதாவது வாங்குவீங்க. நினைச்ச காரியங்களும் இனிதே நிறைவேறும். கலைத் துறையினருக்கு வரவேற்பும் புகழும் ஓகோன்னு ஓசந்து நிக்கும். தனிக்கட்டையா இருக்கறவங்களுக்கு சீக்கிரம் டும்டும்தான். பயணத்தால சிலருக்கு ஆதாயம் உறுதி. வெளிநாட்டுச் சேதியால ஆதாயமும் உற்சாகமும் பெருகும். கோர்ட் விவகாரம் இருந்தா அதுல ஒரு திடீர்த் திருப்பம் உண்டாகும். சிலருக்குப் புதுச் சொத்துக்கள் சேரும்! ஆனாலும் எதிலும் நிதானம் அவசியம். அப்பாவின் ஆரோக்கியத்தில் கவனம் அவசியம்.



**மிதுனம்** : (மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)

அரசாங்க சம்பந்தப்பட்ட விஷயங்களிலேயே உங்களுக்கு நல்ல திருப்பம் ஏற்படும்னா, உங்க அதிர்ஷ்டத்தை என்னன்னு சொல்றது! எதுவானாலும் கலமா நிறைவேறுகிற வாரம். பொருள் வரவு ஜோரா இருக்கும். ஆற்றலும் திறமையும் பளிச்சிடும்! அந்தஸ்து கூடும். உதவி பண்றதுக்கு நிறையப் பேர் ஓடி வருவாங்க. வீடு, மனை விஷயங்களிலும ஆதாயம்தான். குடும்பத்தில் சலசலப்புகள் வரும்னாலும் வந்த வேகத்துலயே காணாம போயிடும். இயந்திரம், மின்சாரம் தொடர்பான வேலைகளில் இருக்கறவங்க எச்சரிக்கையா இருக்கணும். எல்லோருக்குமே பயணத்துல எச்சரிக்கை தேவை. குழந்தைகள் நலனில் அக்கறை காட்டுங்க.



**கடகம்** : (புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)

ஆரோக்யெம் உள்பட எல்லாமே திருப்திகரமா இருக்கற வாரம் இது. குடும்பத்தில் சந்தோஷத்துக்குக் கேட்கவே வேண்டாம். சிலருக்குத் திடீர் அதிர்ஷ்டம் ஏற்படலாம். உத்தியோகஸ்தர்களுக்கு புரமோஷன், இன்கிரிமெண்ட் எல்லாம் கிடைக்கறதுக்கு சான்ஸ் இருக்கு. குடும்பத்தில் சுபகாரியங்கள் நடக்கறதுக்கான வேலைகள் தொடங்கும். உற்சாகமான வெளிநாட்டுச் சேதியும் வரும். ஆனாலும் நீங்க உஷாரா இல்லேன்னா அலைச்சலும் வீண் செலவும் வந்து சேரும். எதிலும் நிதானம் காட்டறதுதான் நல்லது.



**சிம்மம்** : (மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)

எதிரிங்களையெல்லாம் ஓரங்கட்டிட்டு, வெற்றி இலக்கை அடைஞ்சிடுவீங்க. என்ஜினியர்கள், பாலிடெக்னிக் ஆசாமிகளுக்கு நல்ல லாபம் கிடைக்கும். போலீஸ், வக்கீல்களுக்கும் முன்னேற்றமிருக்கும். புதுப் புது பொருள்களை வாங்குவீங்க. அதே சமயத்தில் திடீர்ச் செலவுகளும் வரலாம். கைப்பொருளை இழக்கவும் சான்ஸ் இருக்குன்றதால ரொம்பவே உஷாரா இருக்கணும். கூடவே பண விஷயத்திலும் ஜாக்கிரதையா இருங்க. உத்தியோகஸ்தர்கள் வேலைல கவனக் குறைவா இருந்தா, மேலதிகாரிங்ககிட்ட செமத்தியா வாங்கிக் கட்டிக்க வேண்டியிருக்கும்.

**கன்னி** : (உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம்



விருச்சிக ராசிக்காரரான திண்டிவனம் ராமமூர்த்திக்குத் திடீர் அதிர்ஷ்டங்களுக்கான சான்ஸ் இருக்காம்!

ஏப்ரல் 28 முதல் மே 4 வரை

வரை)

நல்ல வாய்ப்புகள் உங்களைத் தேடி வந்து கதவைத் தட்டுகிற வாரம் இது. சிலருக்குப் புதிய பொருள் சேர்க்கை உண்டாகும். வீடு, மனை விஷயங்களில் ஓரளவுக்கு லாபம் வரும். வெளிநாட்டுத் தொடர்பாலயும் அனுகூலம் கிடைக்கலாம். சிலருக்குப் பயணத்தால அனுகூலம் இருக்கும். தங்கம் - வெள்ளி போன்றவற்றாலும் லாபம் இருக்கும். திருமதியால ஆதாயம் பெறுகிற வாய்ப்பும் சில திருவாளர்களுக்குக் கிடைக்கும். சிலருக்கு வேலை விஷயமா வெளிநாடு போற சான்ஸ் கிடைக்கும். வீட்டில் கல்யாணப் பேச்சும் கலகலப்பும் இருக்கும். கூடவே சலசலப்புகளும் இருக்கலாம்!

**துலாம்** : *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

எந்தக் காரியத்திலும் அவசரம் காட்டிடாதீங்க. அமைதியா உட்கார்ந்து சிந்திச்சு முடிவெடுங்க. அப்போதுதான் சங்கடங்களைத் தவிர்க்க முடியும். பயணத்தின்போது ரொம்பவும் எச்சரிக்கையா இருங்க. வீண் அலைச்சல் கூடவே கூடாது. சொந்தக்காரங்க கிட்ட ஜாக்கிரதையா இல்லேன்னா, வீண் மனஸ்தாபத்துக்கு சான்ஸ் இருக்கு. பண விஷயம் ஒரு நிலைல நிக்காது. வரவேண்டிய பணம் சமயத்தில் வராது. புது முயற்சிகள் எதுவுமே இந்த வாரம் வேண்டாம். சிலருக்கு மட்டும் வெளிநாட்டுத் தொடர்பால நல்ல ஆதாயம் கூடிவர்றதுக்கு சான்ஸ் இருக்கு.

**விருச்சிகம்** : *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

புத்திசாலித்தனம் பளிச்சினு தெரியற வாரம் இது. பண விஷயம் ஜோராவே இருக்கும். சில திடீர் அதிர்ஷ்டங்களுக்கும் சான்ஸ் இருக்கு. நிர்வாகத்துறையில் இருப்பவர்களுக்கு புரமோஷன் உறுதி. அரசு உத்தியோகஸ்தர்களுக்கும் நல்லதொரு திருப்பம் காத்துக்கிட்டிருக்கு. சுபகாரியங்களில் பங்கெடுத்துக்கற வாய்ப்போ, அல்லது உங்க வீட்டுலேயே சுபகாரியங்கள் நடக்கறதுக்கான வாய்ப்போ உறுதியா இருக்கு. வியாபாரிங்க மட்டும் அகலக்கால் வைக்கக் கூடாது. கூட்டுத் தொழில் ஓரளவுக்கு லாபம் தரும். மக்களால் நன்மை கிடைக்கும் என்றாலும் உடன் பிறப்புகளால் சிறு சிறு சங்கடங்கள் வரலாம்!

**தனுசு** : *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

எதிர்ப்புகள் இருந்தாலும் அதையெல்லாம் ஓரங்கட்டிட்டுத் துணிச்சலாகக் காரியத்தில் இறங்கி, ஜெயிச்சுக்காட்டுவீங்க. போட்டி, பந்தயங்களில் வெற்றி கிடைக்கும். ஆனாலும் குடும்பத்தில் குழப்பம் வர்றதுக்கான சான்ஸும் இருக்கு. பக்குவமா நடந்துக்கிட்டாத்தான் அதைச் சமாளிக்க முடியும். குழந்தைகள் நலனில் அக்கறை காட்டணும். பெண்கள் உடல் நலனிலும் கவனம் செலுத்தணும். கலைத்துறையினர் சிலருக்கு சோதனையான வாரம் இது. புது ஆளுங்ககிட்ட உஷாரா இல்லேன்னா பண இழப்பு ஏற்படும்.

**மகரம்** : *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

பிரச்னைகளைச் சமாளிக்கற மன உறுதி கூடும். வழக்கு விவகாரங்களில் வெற்றி பெறலாம். வீடு, மனை விஷயங்களில் ரேஷன் மாதிரியான லாபம்தான் கிடைக்கும். உடன் பிறந்தவர்களால சில நன்மைகள் கிடைக்கும். பண விஷயம் சாதாரணமாத்தான் இருக்கும். கொடுக்கல் – வாங்கலில் எச்சரிக்கை அவசியம். புது முயற்சிகளோ, முதலீடுகளோ இந்த வாரம் வேண்டாம். மக்களால் சிறு சிறு பிரச்னைகள் ஏற்படலாம். தாயின் உடல் நலனில் அக்கறை காட்டுங்க. திருமதியாலும் வெளி நாட்டுச் செய்தியாலும் ஆதாயம் அடையலாம்.

**கும்பம்** : *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

உங்க பேச்சுல இனிமை இருக்கறதாலயே உங்க முகம் வசீகரமா இருக்கும். இந்தக் காரணங்களாலயே எல்லாமே சிறப்பாக இருந்து வரும். பண விஷயம் திருப்திகரமா இருக்கறதோட, சிலருக்குத் திடீர் அதிர்ஷ்டமும் காத்திருக்கு. சிலருக்கு கல்யாணக்களை கட்ட ஆரம்பிக்கும். பயணத்தால் சிலர் ஆதாயம் அடைவாங்க. உல்லாசப் பயணத்தோடு, ஆன்மீகப் பயணமும் கூடிவர்ற சான்ஸ் இருக்கு. அரசாங்க விஷயத்தில் நல்ல திருப்பம் தெரியும்.

**மீனம்** : *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

ஒரு பக்கம் உங்கள் தோற்றப் பொலிவும் செயல் திறமையும் கூடும்னாலும் மறுபக்கம் சின்னச் சின்ன பிரச்னைகள் தலைதூக்கவே செய்யும். கூடவே சில சங்கடங்களும் ஏற்பட்டு விலகும். குடும்ப நலனில் மிகுந்த அக்கறை காட்டணும். சிலர் குடும்பத்தை விட்டுப் பிரிந்து வெளியூர் செல்ல வேண்டியும் இருக்கலாம். பேச்சில் இனிமை என்பது ரொம்ப ரொம்ப முக்கியம். எதிலும் படபடப்பே கூடாது. அப்பா - மகன்களுக்கிடையில் கருத்து வேறுபாடுகள் வரலாம். எச்சரிக்கையா இருங்க. ○

வாசகர்களைத் தங்கள் ஜோக்குகளால் சிரித்து மகிழ வைக்கும் சில ஜோக் எழுத்தாளர்களிடம், (மற்றவர்கள் எழுதி) அவர்கள் வாய் விட்டு சிரித்த ஜோக் எது என கேட்டதில்...

# சிரித்தேன்...!


• ரேவதி


• சி.பி. செந்தில்குமார்


• கோவிந்தன்


• டி.என். பாலகிருஷ்ணன்


• யமுனா ரெங்கநாதன்


• வெ. நாகராஜ்



*சீர்காழி ரேவதி:*

"என்னப்பா இது, இட்லியிலே நூல் வருது?"

"நேற்று பஞ்சு மாதிரி இருக்குன்னு சொல்லி சாப்பிட்டீங்களே, அதே இட்லிதான் சார்!"



*சந்தியூர் கோவிந்தன்:*

"எதுக்கு மூணாவதா ஒரு கல்யாணம் பண்ணிக்கணும்னு விரும்பறீங்க?"

"ரெண்டு கல்யாணம் பண்ணிக்கிட்டா சட்டப்படி தப்பாமே!"



*யமுனா ரெங்கநாதன்:*

"அவர் ஒரு சைல்ட் ஸ்பெஷலிஸ்ட்."

"ஓஹோ! குழந்தைகள் நல நிபுணரா?"

"நோ, நோ! அவருக்குப் பத்து குழந்தைகள். அதனாலதான் அப்படிச் சொன்னேன்."



**வெ. நாகராஜ் (வண்ணாமடை):**

"டாக்டர் நேற்று நீங்க கொடுத்த மாத்திரை ரொம்பப் பெரிசா இருந்திச்சு. எப்படியோ கஷ்டப்பட்டு முழுங்கிட்டேன்."

"அடப்பாவி! என் மேஜை மேலிருந்த டேபிள் வெயிட்டை நீயா எடுத்திட்டுப் போனே?"



**டி.என். பாலகிருஷ்ணன்:**

''ஹலோ! டெலிபோன் டிபார்ட்மெண்ட்டா?''

''ஆமா! நீங்க யாரு எங்கேருந்து பேசறீங்க?''

''நான் வடக்குத் தெருலேருந்து பேசறேன். ஆமா உங்க டிபார்ட்மெண்ட் ஒழுங்கா வேலை செய்யுதா, இல்லையா?''

''ஏன் கேக்கறீங்க?''

''பின்னே என்னங்க! எங்க தெருவிலே ரோடு போட்டு ஒரு மாசமாவுது. உங்க ஆளுங்க கடப்பாறையைத் தூக்கிட்டு தோண்டறதுக்கு வரவேயில்லையே!''

தொகுப்பு : ப்ரணவப்ரியா

**சி.பி. செந்தில்குமார்:**

எஸ்.வி. சேகர் (நாடகத்திலிருந்து)

''என்னது! கடைசிலே அவர்தான் உங்கப்பாவா?''

''ம்ஹூம்! ஆரம்பத்திலேருந்தே அவர்தான் எங்கப்பா.''





# கடைசிவரை கார்ட்டூன்..!



• இர்ஃபான் ஹுசேன்






இர்ஃபான் ஹுசேன், 'அவுட்லுக்' பத்திரிகையில் பத்து வருடமாக அரசியல் கார்ட்டூன்கள் வரைந்து வந்தார். மிகக் குறுகிய காலத்தில், பிரபலமாகப் பேசப்பட்டவர். கடந்த மார்ச் 8-ம் தேதி வேலை முடிந்து, அலுவலகத்திலிருந்து திரும்பிய இர்ஃபான், வீடு வந்து சேரவில்லை. மார்ச் 13-ம் தேதி, அவரின் இறந்த உடல், டெல்லியில் ஓர் ஒதுக்குப்புறமான இடத்தில் கண்டுபிடிக்கப்பட்டது. உடலில் 28 வெட்டுக்காயங்களுடன் உயிரிழந்த இர்ஃபான் ஹுசேன் அரசியல் காரணங்களுக்காகவே கொலை செய்யப்பட்டிருக்கிறார் என்று நம்பப்படுகிறது.




பத்து வருட காலமாக அவர் வரைந்து வந்த கார்ட்டூன்களில் ஐம்பது படங்களும், அவர் தோன்றும் ஒரு வீடியோ காட்சியும், பொது மக்கள் பார்வைக்காக, சென்னை ஈசெல் ஆர்ட் கேலரியில் கண்காட்சியாக வைக்கப்பட்டி

ருந்தது. இந்தியன் எக்ஸ்பிரஸில் கார்ட்டூனிஸ்டாக இருக்கும் பி. உன்னி மற்றும் பல நண்பர்கள் இந்தக் கண்காட்சிக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள்.

இர்ஃபான் ஹுசேன் 'ஹிந்துஸ்தான் டைம்ஸ்' நடத்திய கார்ட்டூன் போட்டியில் பரிசு பெற்றவர். நாக்பூரிலுள்ள சித்ரகலா மகா வித்யாலயாவில் தம் ஓவியப் பயிற்சிப் படிப்பை முடித்திருந்தார். பெரிய கார்ட்டூனிஸ்டாக வர வேண்டும் என்ற ஆசையில் டெல்லி வந்தார். ஆரம்பத்தில் 'கம்ப்யூட்டர் டுடே'யில் தம் பத்திரிகை வாழ்க்கையைத் துவக்கியவர், 'சன்டே அப்சர்வர்', 'தி பயனியர்' ஆகிய பத்திரிகைகளில், கார்ட்டூன் வரைய ஆரம்பித்து, 'அவுட்லுக்' பத்திரிகையில் கார்டூனிஸ்டாகச் சேர்ந்தார்.

கண்காட்சியில் கூர்மையான, தெளிந்த அரசியல் ஞானத்துடன் அவர் வரைந்த கார்ட்டூன்கள் காணக் கிடைத்தன. அத்தனையும் அந்தந்தக் காலகட்டத்தின், அரசியல் மற்றும் நாட்டு நிலைமையை உள்ளது உள்ளபடி, நகைச்சுவை மிளிரப் பிரதிபலிக்கும் படங்கள். வீடியோ காட்சியில் அவர் கார்ட்டூன் வரைகிற வேகமும், லாகவமும் நம்மை வியக்க வைக்கிறது. சென்னையில் ஆரம்பித்து திருவனந்தபுரம், பெங்களூர் மற்றும் ஹைதராபாத் ஆகிய தென்னிந்திய நகரங்களிலும் இந்தக் கண்காட்சி தொடர







இருக்கிறது.

இர்ஃபான் ஹுசேன் வரைந்த படங்களைப் பார்க்கிறபோது, அதனுள்ளே போக விடாமல், அந்த 34 வயதுக்காரரின் அகால மரணம் நம்மைத் தாக்குகிறது. அதை விடவும் நம்மை பாதிக்கிற விஷயம், அவர் கொலை செய்யப்பட்ட பிறகு, இன்று வரை சந்தேகத்தின் பேரில் கூட ஒருவரும் கைது செய்யப்படவில்லை என்பது!

— பாலு





• அனுப்ரியா

# நான்... மிதக்கிறேனே, மம்மி!

அந்தச் சின்னப் பெண்ணைப் பார்த்ததும் வியப்பு மேலிடுகிறது. இந்தச் சிறுமியா? நான்கு மணி நேரமாகத் தண்ணீரில் மிதந்து கொண்டிருக்கும் சாதனைப் பெண்ணா!

பத்து வயதாகும் அனுப்ரியா திருச்சி, பட்டர்வர்த் ரோடில் உள்ள ஆர்.சி. நடுநிலைப் பள்ளியில் 5-ஆம் வகுப்பு படித்துக் கொண்டிருக்கிறாள்.

பனிச்சறுக்கு விளையாட்டில் சாதனை படைக்க விரும்பும் ஒருவருக்கு பனிமலைப் பிரதேசத்துக்கு அருகில் வீடு அமைந்து விட்டால் எப்படி இருக்கும்? அப்படித்தான் அமைந்துள்ளது 'மிதவை ராணி' அனுப்ரியாவின் வீடு. திருச்சி கீழ்ச் சிந்தாமணியில் இவள் வீட்டு மாடியில் நின்று பார்த்தால் காவிரியின் பொங்கி வரும் பேரழகைக் கண்குளிரக் காணலாம்!

'கரைபுரண்டு வரும் காவிரியில் அவள் விழுந்தால்? ஆளை அப்படியே இழுத்துக் கொண்டு போய் விடாதா?' நம்முள் கேள்வி புதைமணலாய் எழுகிறது.

''ஆளை இழுத்துக்கிட்டுப் போனா என்ன? ஏன் பயப்புடுறீங்க? அப்படியே 'மெதந்துட' வேண்டியதுதான்'' என்று சொல்லிச் சிரிக்கிறாள் அனுப்ரியா.

"என் மகள் அனுப்ரியாவுக்கு இந்தத் தண்ணியில மிதக்குற பழக்கத்துக்கு நான் தாங்க பயிற்சி குடுத்தேன்... எங்க பரம்பரையில யாருக்கும் 'பயம்'ங்கறதே இல்லேங்க" என்று தந்தை விஸ்வநாதன் பேச ஆரம்பிக்கிறார்.

''அனுப்ரியாவுக்கு இரண்டரை வயசுலேந்து தண்ணியில மிதக்குற சாதனைக்காகப் பயிற்சி குடுத்துட்டு வர்றேன். அதிகாலை அஞ்சு மணிக்கு எழுப்பி தரையில செய்யற பத்மாசன யோகா முறையை

சுத்துக் குடுத்தேன். ஆறு மாசம் கழிச்சு மூணு வயசாகும் போது தண்ணியில மிதக் குற 'ஜலசந்தி யோகா' முறையைக் சுத்துக் குடுத்தேன். மூணு வயசுலேந்து தண்ணி யில கொஞ்சம் கொஞ்சம் நேரமா மிதக்கப் பழகினவ, இப்ப தொடர்ந்தாப்பல நாலு மணி நேரத்துக்கும் மேலா மிதந்து காட்டறா!''

''இதுல ஆச்சர்யம் என்னன்னா, அவ ளுக்கு இன்னமும் நீச்சல் தெரியாதுங்க! நீச்சலே தெரியாம இருந்து இந்த சாத னையை செஞ்சிக் காட்டணும்னுதான் நா அவளுக்கு இன்னமும் நீச்சல் கத்துக் குடுக்கலை சார்'' என்கிறார்.

''ஓடாம நிக்குற தண்ணில உங்க பொண்ணு நாலு மணி நேரமா மிதக்கு துன்னு சொல்றீங்க. சரி... ஓடுற தண்ணியில...?''

''காவிரியாத்துல ஓடுற தண்ணியில அப்பாவும் மவளும் மெதந்து போய்ட்டிருப்பாங்க சார். மேலச் சிந்தா மணிக் கரையிலேந்து காவிரியாத்துல அப் படியே மெதந்து போனாங்கன்னா, பை பாஸ் பாலம் தாண்டி கரையேறிடுவாங்க. காவிரியில குளிக்கறவங்க எல்லாம் எங்க வீட்டுப் படியேறி சொல் லிட்டுப் போவாங்க. ''ஏதோ 'பொணம்' தான் மெதந்து வருதுன்னு நாங்கள்லாம் பயந்து போய்ட்டோம். ஆத்துல குளிக் கிற சனங்களை நல்லாத்தான் பயப்புட வைக்கிறீங்க... போங்க..'' என்று 'அன் புடன்' எச்சரித்துவிட்டுப் போவார்களாம்.


• விஸ்வநாதன்

• பொன்னேஸ்வரி

பெருமையுடன் சொல்கிறார், அனு வின் தாய், பொன்னேஸ்வரி.

பல ஆண்டுகளாக திருச்சி, கீழச்சிந்தா மணியில் வசித்து வரும் விஸ்வநாதன் தமக் குச் சொந்தமாய் சூரியூரில் கொஞ் சூண்டு விவசாயம் இருப்பதாகச் சொல் கிறார். ஒரு சாதாரண விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் என்பதால் அனுப்ரியாவின் சாதனை மாநில அளவில்' - தேசிய மட்டத்தில் எட்டவில்லை என்னும் வருத் தம் அவர்களது பேச்சில் வெளிப்படுகிறது.

திருச்சி மாநகரில் மட்டும் இந்த சாதனை நிகழ்ச்சி பல இடங்களில் முக்கியப் பிரமுகர்கள் முன்னிலையில் பல முறை நடந்துள்ளது. ரோட்டரி கிளப் சார் பாக நடந்த நிகழ்ச்சியில் 'ஜென்னிஸ் ரெஸிடன்ஸி'யில் உள்ள நீச்சல் குளத்தில் எல்லோர் முன்னிலையிலும் நான்கு மணி நேரத்திற்கும் மேலான மிதவை சாதனை யைச் செய்து காட்டினாள் அனுப்ரியா.

கடந்த மார்ச் மாதத்தில் திருச்சி, இ-ஆர். மேநிலைப் பள்ளியில் நடந்த வேறு ஒரு விழாவில் கலந்து கொண்ட மாவட்ட ஆட்சித்தலைவர் வை. மூர்த்தி, நீரில் மிதக் கும் சாதனையைப் பாராட்டி அனுப்ரியா வுக்குப் பரிசுகள் தந்து உற்சாகப்படுத்தி யுள்ளார்.

வெளி நாட்டை விட... நம்ப நாட்ல நீச்சல் போட்டியில வீராங்கனைகள் ரொம்பவும் குறைவு சார்... நம் மாவட்ட லெவல்ல கூட என்னோட பொண்ணு திறமைக்கு நீச்சல் போட்டியில ஒரு பிரிவா இந்த மிதவைப் போட்டியை யும் ஏற்பாடு செய்ங்கன்னு விளையாட்டுத் துறை அலுவல கத்துல முறையீடு செய்தேன்.

''நம் குற்றாலீஸ் வரன் கடல்ல நீந்திக் காட்டின மாதிரி, அனுப்ரியா வும் கடல்ல மிதந்து சாதனையைச் செஞ்சிக் காட்டணும். அரசாங்கம் தக்க பாதுகாப்பு தந்து, மருத் துவ வசதி செய்து கொடுத்து ஏற்பாடு செஞ்சா கடல்ல மிதக் குற சாதனையை அனுப்ரியா செஞ்சிக் காட்டிடுவா...'' என்று மிகுந்த நம்பிக்கையுடன் கூறுகிறார் விஸ்வநாதன்.

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு



தும்புரு

# சாந்தி நிலவ வேண்டும்!

சக்கரவாகம்! உச்சரிக்கவே இனிமையான பெயர்தான். பாடுவோர் பாடினால் ரொம்ப சுகமாயிருக்கக் கூடிய ராகம் இது. விஸ்தாரமான ஆலாபனைக்கு ஏற்றது. ஆனால் அப்படியின்றி சுருக்கமாக அதன் வடிவத்தை அடையாளப்படுத்திப் பாடினார் பாட்டி. அவர் வைத்த புள்ளிகளை இணைத்துக் கோலமாக்குவது போல் விட்ட இடத்தில் தொடர்ந்து பாடி முடித்தார் பேத்தி.

பாட்டி : டி. கே. பட்டம்மாள். பேத்தி: நித்யஸ்ரீ மகாதேவன்.

தேர்ந்தெடுத்த கீர்த்தனையின் (ஈசனே இந்த ஏழைக்கிரங்க..) தத்துவார்த்தத்தை முன்கூட்டியே படம்பிடிக்கும் ஒரு சோகச் சாயை டி.கே.பியின் ஆலாபனையில் இடம்பெற்றதில் ஆச்சர்யமில்லை. அவருடைய அனுபவ முதிர்ச்சியின் அடையாளம் அது. ஆனால், அதே சோகச் சாயையை நித்யஸ்ரீ தன் கம்பி மத்தாப்பூ குரலிலும் கொண்டுவந்தது பரம ஆச்சர்யம்! டி.கே.பியின் மனோதர்மத்தை அடியொற்றி அதை அப்படியே உருக்குலைக்காமல் வளர்த்து, மேல் ஸ்தாயியை நித்யஸ்ரீ கொஞ்சமாகத் தொட்டு விட்டுத் திரும்பிய கணத்தில் அரங்கம் கரவொலியில் அதிர்ந்தது.

அன்று (18.4.99) நாரத கான சபை அரங்கில் ஒரு சிறப்புக் கச்சேரி. காஞ்சிபுரம் அருகே உள்ள தாமல் வராகீசுவரர் கோயிலின் புனருத்தாரணப் பணிக்கு நிதி சேர்ப்பதற்காக ஏற்பாடாகியிருந்தது. தாமல் டி.கே.பியின் சொந்த ஊர். காஞ்சி பீடாதிபதியின் அக்கறையின் பேரில் அவர் ஆசியுடன் நடைபெற்றது கச்சேரி. சமீபத்தில் பத்மவிபூஷன், காளிதாஸ் சம்மான் பெற்ற டி.கே.பியை மற்றுமொரு பட்டமளித்து கௌரவித்தது காஞ்சி மடம் : கானகதாமணி!

இத்தனை சிறப்புகளும் சேர்ந்த ஒரு தினத்தில் தமது இதயத்தையே உருக்கி சங்கீதமாய் வடித்தது போல் பாடினார் டி.கே.பி. ஆரம்பத்தில் அவர் குரலுடன் ஒன்ற சிரமப்பட்ட நித்யஸ்ரீக்கு சக்கரவாக ஆலாபனை ஒரு திருப்புமுனை.

அதைத் தொடர்ந்து ஆனந்த பைரவி (தியாகராஜயோக வைபவம்), ஆஹிரி (மாயம்மா), முகாரி (என்றைக்கு சிவக்ருபை), தன்யாசி (கனகசபாபதி) என்று அனைத்துமே கனமும் காத்திரமுமான உருப்படிகள். டி.கே.பி. பாணியின் அழுத்தம், பாவம், அளவான குழைவுகள், சாஹித்ய சுத்தம் என்று



நிறைவான அம்சங்களால் அவை பிரகாசித்தன.

'பரமேச்வரி சுந்தரேச ராணி' என்று மாயம்மாவில் மதுரை மீனாட்சியைப் பாடும்போது கம்பீரம்;

அடுத்த அடியில் அவளை 'பாலாம்பா' என்று அழைக்கும்போது ஒரு சிறுமியை அழைக்கும் வாத்ஸல்யம்;

'என்றைக்கு சிவகிருபை வருமோ?' என்று கேட்கையில் தொனிக்கும் ஆற்றாமை;

'மனதில் ஒடுங்கிய கல்மிஷம் போகும்' என்று கனகசபாபதியின் தரிசனப் பயனை விவரிக்கும் தீர்மானம்...

– இப்படி வரிக்கு வரி வார்த்தைகளின் ஆழமான பொருளை இருவருமாகச் சேர்ந்து வெளிப்படுத்திக் கொண்டே போக... 'புல்லாய்ப் பிறக்கினும்' என்ற விருத்தம் டி.கே.பியின் தனிக்குரலில் ஒலித்தபோது அலாதியானதொரு சிலிர்ப்பு ஏற்பட்டது.

'எத்தனை அன்னையின் எத்தனை



தந்தையின் எத்தனை பிறவி வருமோ...?' என்று அவர் உருக, 'அடடா! இந்த மாதிரி இசையைக் கேட்க எத்தனை பிறவி எடுத்தால்தான் என்ன!' என்று நாம் உருக...

இத்தனைக்கும் பெரிய பெரிய ஆலாபனைகள் இல்லை; ஸ்வர பேத வித்தையெல்லாம் இல்லை; சிக்கலான பல்லவி, லய லாவண்யங்கள் என்று எந்த பறைசாற்றலும் இல்லை. ஒப்பனைகளற்ற எளிமையால், படாடோபமற்ற நேர்மையால் இதயத்தைத் தொடும் இசை.

மிருதங்கம் வாசித்த காருகுறிச்சி மோகன்ராமனுக்கும் கஞ்சிரா கணேஷ்குமாருக்கும் அனுபவக் குறைவு. ஈடுகட்டியது ஸ்ரீராம்குமாரின் வயலின். இரு குரல்களுக்கு ஏற்ப கவனமாக வாசித்து அழுத்தம் சேர்த்துதவினார்.

டி.கே.பியின் கச்சேரி என்றால் தேசபக்திப் பாடல் இல்லாமலா...? 'பாருக்குள்ளே நல்ல நாடு' என்று ஆரம்பித்து 'எங்கள் நாடு எங்கள் நாடு' என்று முடித்தபோது, டெல்லியில் நடந்து முடிந்த சூழ்ச்சி நாடகங்களின் அவலத்தை ஏதாவது மந்திர சக்தி கொண்டு துடைத்தெறிந்து விட முடியாதா என்ற ஏக்கமே வந்து விட்டது!

கல்கி நூற்றாண்டையொட்டி அவர் இயற்றிய இரு பாடல்களைப் பாடுவதாக அறிவித்தார் பட்டம்மாள் : 'பூங்குயில் கூவும் பூஞ்சோலையில்', 'குழலோசை கேட்டாயோ கிளியே'. வேதாந்த விசாரப் பாடல்களிலும் தத்துவப் பாடல்களிலும் தோய்ந்தெழுந்த குரல்கள் இந்த இரு அகத்துறைப் பாடல்களின் நளின அழகுகளையும் நேர்த்தியுடன் வெளிப்படுத்தியதை என்னவென்று சொல்வது.

'சாந்தி நிலவ வேண்டும்' என்று முடித்தபோது உலகப் பிரார்த்தனையாக ஒலித்தன அக்குரல்கள்; தேசத்துக்கும் அதன் சங்கீத மேடைகளுக்குமான பிரார்த்தனை என்று கூடத் தோன்றியது.

இப்போதெல்லாம் சங்கீதக் கச்சேரிகளில் அந்த சாந்தி கிடைத்தற்கரிய விஷயமாகி விட்டது. இன்றைய வளரும், நிலைபெற்ற இளம் கலைஞர்கள் சாந்த ரஸத்தின் அருமை பெருமைகளை இந்த அபூர்வக் கச்சேரியில் கேட்டுணர்ந்திருக்கலாம். அனேகர் அந்த வாய்ப்பைத் தவற விட்டு விட்டார்கள். ◉

# வட்டமேஜை

✉ ஃபாஷன் ஸ்பெஷலில் வெளியான தகவல்கள் அத்தனையும் பயனுள்ளதாக இருந்தன.
பெங்களூர் - 47, மு. புஷ்பராசன்.

✉ 'நெற்றிக்கு நகைகள்' என்ற தலைப்பைப் படித்தேன். பொட்டுலயும் சின்னச் சின்ன வெள்ளைக் கல் பதிச்சிருக்கு என்று படித்த போது அதை வாங்கி என் பேத்திகளுக்கு உடனே கொடுக்க வேண்டும் என்ற ஆவல் எழுந்தது.
சென்னை - 73, கே. வி. ராமன்.

✉ தேசிய உடையாக நைட்டி மாறிவருகிறது என்பது முற்றிலும் உண்மை. போகிற போக்கைப் பார்த்தால் திருமணங்களில் கூட மணமகள் நைட்டி அணிய ஆரம்பித்தாலும் ஆச்சர்யப்படுவதற்கில்லை. அலுவலகங்களில் கூட நைட்டி அணிய உரிமை வேண்டும் என பெண்கள் போராடும் காலம் வெகு தொலைவில் இல்லை!
சிதம்பரம், ஸ்ரீவித்யா காளிதாஸ்.

✉ அஸாரும் டெண்டுல்கரும் சென்னையில்தான் சூட் தைக்கிறார்கள் என்பது மிகவும் புதிய செய்தி.
மயிலாடுதுறை, எல். துர்காதேவி.

✉ அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியின் பரிசுத் தொகை எவ்வளவாக வேணும் இருந்து விட்டுப் போகட்டும். அட்சர இலட்சம் பெறும் அமரர் கல்கியின் வாழ்க்கை வரலாற்றுப் புத்தகமான ''பொன்னியின் புதல்வரை''ப் பரிசாகக் கொடுப்பதாக அறிவித்திருக்கிறீர்களே! இதற்காகவே ஏராளமானோர் கலந்து கொண்டு உங்களைத் திக்குமுக்காட வைக்கப் போகிறார்கள்.
நெல்லை, தி.சு. பாலசுப்பிரமணியன்.




## ஆரம்பமே அட்டகாசம்!

✉ டெல்லிக்குச் சென்று ஜெயலலிதா நடத்திய சித்து விளையாட்டுக்களெல்லாம் அரசியல் பூகம்பமல்ல; அரசியல் புஸ் வாணம் என்பதைத் 'தேர்தலே தீர்ப்பு' தலையங்கத்தின் மூலம் தெளிவுபடுத்தி விட்டீர்கள்.
நெல்லையப்பபுரம், டி. செல்வன்.

✉ மக்களின் மகத்தான மறு தீர்ப்பை நிர்ணயிக்கும் பொதுத் தேர்தலை வரவேற்றுத் தாங்கள் தகுதியான காரணங்களுடன் தீட்டிய தலையங்கம் போற்றற்குரியது!
இனாம்மணியாச்சி, ச. ஆ. கேசவன்.

✉ திருச்சியில் நடந்த அமரர் கல்கியின் நூற்றாண்டு விழாவில் தலைமையுரை நிகழ்த்திய மாவட்ட ஆட்சித் தலைவரின் 'நாம் அமரும் நாற்காலிகள் தற்காலிகமானவை. ஆனால், வாசக உள்ளங்களில் கல்கி அவர்களுக்கு என்றுமே நிரந்தர நாற்காலி உண்டு' என்ற வரிகள் இதயத்தைத் தொட்டன!
தேவனாங்குறிச்சி, பா. வடிவேல்.

✉ அகிலா கார்த்திகேயனின் கிலிஃபோன் எங்களின் விலா போன் (Bone)களை வலி கொள்ள வைத்தது!
நெய்வேலி, சாந்தி சுந்தர்.

✉ யதார்த்தமான நடையோடு வெளிவந்த 'கறுப்பு-வெள்ளைக் கனவுகள்' மினி தொடரில், பாட்டி பாத்திரம் வித்தியாசமாக இருந்தது. வயதானவராயிருந்தாலும், யதார்த்தங்களை ஏற்றுக் கொண்டு செயல்பட்டது அருமை.
நல்லத்துக்குடி, கே.வி. சூர்யா.

✉ மனோரமாவின் பணம் பற்றிய அனுபவக் கருத்து நெகிழச் செய்து விட்டது. பணத்தின் பலத்தையும் பலவீனத்தையும் ஒருங்கே எடுத்துக்காட்டியது. ஆரம்பமே அட்டகாசம்!
அண்ணாநகர், எஸ்.ஆர். ஹரிஹரன்.

## டெண்டுல்கர் வருவாரய்யா!

**டி.விமர்சிக்கிறார் சுபா(லகிருஷ்ணன்)**



● இரவு 11 மணிக்கு தெலுங்கு சானல்களில் சினிமாக்களின் கடைசி ரீல்களில் கதாநாயகர்கள் புல்டோஸர்களை முதுகால் நிறுத்தியோ, ஹெலிகாப்டரில் இருந்து குதித்தோ வில்லன்களைப் பந்தாடுகிறார்கள். இரண்டாவது கதாநாயகி (காதல் தியாகி!) காத்திருந்து, வில்லனின் துப்பாக்கி கீழே சரிகிறாள். காதில் பூ வைத்து, தலையிலும் ஒரு முழம் சுற்றிவிடும் தெலுங்குப்பட உலகே, உன் நிலைதான் மாறாதோ?

● 'ஷார்ஜா தொடரில் நம் பேட்டிங் காலை வாரி விட்டது துரதிர்ஷ்டம். ஆனால் உலகக் கோப்பைக்குப் போகும் முன் நிச்சயம் நல்ல பயிற்சியும், சிறப்பான முன்னேற்றமும் இருக்கும்' என்று சவுரவ் கங்குலி ஸ்டார் நியூஸில் உறுதி சொன்னார். வட்டக் கண்ணாடி அணிந்து இளம் தொழிலதிபர் போலத் தோன்றும் சவுரவ் கங்குலி அவர்களே, உங்களுக்குத் தோள் கொடுக்க – வருவாரய்யா, டெண்டுல்கர் வருவாரய்யா.

● வியாழக்கிழமை ஸ்டார் ப்ளஸ்ஸின் 'வணக்கம் இந்தியா'. ஜப்பானைச் சேர்ந்த பெண் ஓவியர் ஒருவர் 'ஜப்பானில் இருந்த பொழுது வெளியில் பார்த்ததை வரைந்தேன். இந்தியா வந்த பிறகு, எனக்குள்ளே பார்வையைத் திருப்பி, அந்த உணர்வுகளோடு வரைய ஆரம்பித்த பின்தான் என் ஓவியங்களுக்கு ஆழம் கிடைத்தது' என்றார். பேட்டியின்போது அவ்வப்போது க்ளோஸப்பில் காட்டப்பட்ட ஓவியங்களும், அந்த ஓவியரின் பெரிய முன் பற்களும் அழகாக இருந்தன. சைனீஸ் மெனுகார்டில் இருப்பது போன்றதொரு வார்த்தையைப் பெயராகச் சொன்னார். அதுதான் நினைவில் நிற்கவில்லை.

● வாஜ்பாய் அரசை 'வாஜ் Bye' அரசாக்கி விட்டு எதிர்க்கட்சிகள் கூடுவதும், பிரிவதும், பிரிப்பதுமாக, தேசத்தை ஆளப்போவது யார் என்ற மர்மம் எல்லா சேனல்களின் செய்தி அறிக்கைகளிலும் தொடர்ந்தது. ஸ்கூட்டரில், ஆட்டோவில் அழைத்துப் போகிற அளவே மெம்பர்களைக் கொண்ட கட்சிகள் எல்லாம் கொம்புக்குக் கொம்பு தாவுவதை இந்தியாவில்தான் பார்க்க முடியும்!

## பதவி ஆசையால் தகராறு...தோசையால் தகராறு!

**தலைநகர் தபால்**

''முலாயம் எங்கள் கூட்டணியின் ஜெயலலிதா'' என்று வர்ணித்தார் ஒரு சோனியா கட்சித் தலைவர்!

முலாயம் நம்மிடம் கூறியது: ''நாங்கள் ஒன்றும் பைத்தியக்காரர்களல்ல... சோனியா கட்சி எங்கள் வோட்டு வங்கியை உண்டுதான் உ.பி.யில் கொழுக்கும்... எனவே, சரியான பேரம் படியாமல் எங்களால் எங்கள் சப்போர்ட் பேஸையே உ.பி.யில் அழித்துக்கொண்டு எந்தக் கட்சிக்கும் ஆதரவு கொடுக்க முடியாது!''



• முலாயம்சிங் யாதவ்

மொத்தத்தில் தமிழகக் கட்சிகளிடம் இருந்த 'பிடி' இப்போது கை நழுவிப் போய், மாற்று ஏற்பாடுகளுக்கான வாய்ப்பு முழுக்க, இடதுசாரிகள், காங்கிரஸ் மற்றும் முலாயம்சிங் – லாலுபிரசாத் கூட்டணியிடம் சென்று விட்டது. இதுவே ஜெயலலிதாவால் விளைந்த வினை.

இந்நிலையில் தி.மு.க. தனது ஆதரவுக் கடிதத்தை வாஜ்பாய் தலைமைக்குக் கொடுத்ததுடன் முரசொலி மாறனைத் தன் பிரதிநிதியாக பி.ஜே.பி ஒருங்கிணைப்புக் குழுவிற்கு நியமித்திருக்கிறது. வகுப்புவாதமென்ற பெயரில் ஒரு கட்சி தீண்டத்தகாததாகக் கருதப்பட்டு வந்த நிலை மாறிப் போயிற்று.

ஜனாதிபதியிடம் பி.ஜே.பி சமர்பித்த கடிதங்களில் தி.மு.க.வினதும் ஒன்று.

'பேடண்ட்' பற்றிய மற்றொரு திடுக்கிடும் தகவல் வந்திருக்கிறது: நமது தோசை ''தோசா'' என்றும் ''தோசை'' என்றும் ஒரு அமெரிக்க நிறுவனத்தால் பேடண்ட் செய்யப்பட்டிருக்கிறது. இது பற்றிய முழு விவரங்களும் இன்னும் வரவில்லை. ஏற்கெனவே 'பாஸ்மதி' மற்றும் 'ஹல்தி' சண்டை அமெரிக்க நீதி மன்றங்களில் நடந்து கொண்டிருக்க, இப்போது 'தோசை'த் தகராறையும் இந்திய அரசு கோர்ட்டிற்கு இழுத்துச் செல்லுமா...?

— டெல்லி வெங்கட்



# பெண்கள் ஒரே வாரத்தில் ஸ்கூட்டர் ஓட்டலாமே!



"ஆமாங்க நிஜம் தான். நான் ஒரே வாரத்தில் ஸ்கூட்டர் ஓட்டக் கற்றுக் கொண்டேன்"

- மர்மதேசம் புகழ் தேவசர்ஷினி

பஸ்சில் ஆண்களால் ஏற்பட்ட "இடி" தொல்லையால் வேலையையே விட்டுவிடப் போகிறேன் என்று கூறிய 21 வயது கோமதி, அடுத்த ஒரே வாரத்தில் மவுண்ட் ரோட்டில் ஸ்கூட்டரில் பறந்து போகிறாள். அதைப் பார்த்துக் கொண்டே (இடி ராஜாக்களுக்குப் பயந்து) ஆட்டோவில் சென்ற அவளது தோழி சுமதி, இரவோடு இரவாக கோமதி வீட்டுக்கு போனில் தொடர்பு கொண்டாள்.

"என்னடி அதிசயம் எப்படிடீ ஒரே வாரத்தில் ஸ்கூட்டர் ஓட்ட கற்றுக்கிட்டே"

"இது ரொம் சிம்பிள்... நீ கூட கற்றுக்கலாம்."

"எப்படி?"

"இப்பவே 4842466 அல்லது 4364815 க்கு போன் பண்ணு. வள்ளி வள்ளியப்பன் என்கிறவங்க போனை எடுப்பாங்க... அவங்க கிட்டே உன் ஆசையைச் சொல்லு எளிதான முறையில் சீக்கிரமா கத்துத் தருவாங்க. காலம் பொன் போன்றது என்பது அவங்களுக்குத் தெரியும்."

இதுதான் இப்போது சென்னையில் பரபரப்பான பேச்சு. வள்ளி வள்ளியப்பன் பெண்களுக்கு ஸ்கூட்டர் ஓட்ட கற்றுத் தருவது போல, சீக்கிரமாக புரிந்து கொள்ளும்விதத்தில் எளிதாக கார் ஓட்டவும் கற்றுத் தருகிறார்கள். கார் ஓட்டுவது ஒன்றும் கஷ்டமானது அல்ல. மிக எளிதாக, விளைவாக அதைக்கூட பத்தே நாட்களில் கற்று விடமுடியும்.

இவரது சாதனையைப் பாராட்டி ஒரு விழாவில் பெண் போலீஸ் ஐ.ஜி. திலகவதி விருது வழங்கி கவுரவித்தார். (படத்தில் பார்க்கலாம்).

வள்ளி வள்ளியப்பனை சந்தித்து, அவர் பெண்களுக்கு எளிதாக வாகனம் ஓட்ட கற்றுக் கொடுக்கும் வெற்றி ரகசியத்தைப் பற்றிக் கேட்டோம். அவர் சொல்கிறார் : இன்றைய பெண்கள் மகா புத்திசாலிகள். எதையும் எளிதாக புரிந்து கொள்வார்கள். அவர்களுக்கு விஷயத்தை புரிய வைக்கும் கலை எனக்கு தெரியும். முதலில் அவர்கள் ஓட்ட விரும்பும் வாகனத்தின் இயல்பை விளக்குகிறேன். பின்பு இயக்கும் முறை, அதில் அவர்கள் கையாள வேண்டிய வழிமுறை கள், இவைகளை எல்லாம் பக்குவமாக தெளிவாக பெண்களுக்கு புரிய வைத்து தன்னம்பிக்கையை ஊட்டி ஓட்டக் கற்றுக் கொடுக்கிறேன். கூடவே நானும் மைதானத்தைச் சுற்றி சுற்றி ஓடு கிறேன். எனது கடின உழைப்பு, அதில் வெளிப்படும் வியர்வை துளிகள் தான் என் வெற்றி ரகசியம். நான் சாலையில் செல்லும் போது வாகனத்தை ஓட்டிச் செல்லும் ஆயிரம் பெண்கள் கையசைத் துச் செல்கிறார்கள். அதுதான் என் சாதனை" என்கிறார் வள்ளி வள்ளியப்பன். மேலும் வாகனம் ஓட்ட கற்றுக் கொள்ள விரும்பும் பெண்கள் தன்னை கீழ்கண்ட முகவரியில் சந்திக்கலாம் என்றும் கூறுகிறார்.





## வள்ளி டிரைவிங் ஸ்கூல்

(அரசு அங்கீகாரம் பெற்ற நிறுவனம்)

24, பர்கிட் ரோடு, முதல் மாடி, தி.நகர், (K.P.N. டிராவல்ஸ் அருகில்) சென்னை - 17.

☏ : 4842466, 4364815 பேஜர் : 9628445790

**அலுவலக நேரம் : காலை 8-30 முதல் மாலை 6-30 வரை**

• சச்சின், அஞ்சலி

தவரை 'ஆட்டம்பாம்' சோனியாதான்! ஆனால் பிரமோத் நவால்கர்தான் புத்திசாலி - ஜெயலலிதா இருக்கும்வரை அத்தனைத் திரிகளையும் தன் கையில் தான் வைத்திருப்பார் என்பதால், ஒரு பட்டாசு கூட வெடிக்காது என்பது அவருக்கு சர்வ நிச்சயமாகத் தெரிந்திருக்கிறது! 'அம்மா' இருக்கும்போது பிள்ளைகளுக்கென்ன கவலை? இந்தியத் தாய்தான் நடுங்க வேண்டும்!

## அருணோதயம்

# சச்சினுக்கு என்ன ஆச்சு?

சச்சினுக்கு என்ன ஆச்சு?

தப்பித் தவறி பொது நல சேவையில் அக்கறை கொண்ட அதிகாரி யாராவது மாட்டினால், அரசியல்வாதிகள் உடனே அவருக்கு சமாதி கட்டுவதும், அதன் மீது மக்கள் பொலபொலவென்று கண்ணீர் உகுப்பதும் பழங்கதையாகி விட்டது! இப்போதெல்லாம் பொது மக்கள் உஷாராகி விட்டனர். நல்லவர்களை நழுவ விடுவதில்லை. தாணாவில் கமிஷனர் சந்திரசேகரின் மாற்றலைத் தடை செய்தது போல், புணேவிலும் அஸ்தமனமாக இருந்த அருண்பாட்டியாவின் கமிஷனர் வாழ்க்கையை எதிர்த்து, கூக்குரலெழுப்பி, ஊர்வலம் நடத்தி, கையெழுத்துக்கள் பெற்று, கோர்ட்டில் பெட்டிஷன் போட்டு, தூள் கிளப்பி விட்டனர். "இவர் மாற்றப்பட்டது பிரபலங்களின் கட்டடங்களை இடித்ததற்கு அல்ல; சீஃப் செக்ரட்டரி இவருக்கு எழுதிய 'கான்ஃபிடன்ஷியல்' லெட்டரை பிரஸ்ஸுக்கு 'லீக்' பண்ணிய

### வேட்டு வைத்த வோட்டு

'அந்த ஒரே ஒரு வோட்டு' - டில்லி டிராமாவின் க்ளைமாக்ஸ் ஸீன் நடந்து கொண்டிருக்கையில், இங்கே மும்பை ஸென்ஸெக்ஸ் ஏறி இறங்கி மாஜிக் ஷோ காட்டியது! அங்கே 'ஷோ' முடிந்ததும் இங்கே 'தொபுகடீர்'. பிஸினஸ் வட்டாரங்களில் அமாவாசை; ஆனால் காங்கிரஸ் காம்ப்களில் - குறிப்பாக பவார் ஆதரவாளர்களுக்கு தீபாவளி! அவர்கள் டில்லியில் வெடிக்கும் பட்டாசு, மகாராஷ்ட்ரத்தை ஆட்டம் காண வைக்குமோ என்று இங்கே காதில் பஞ்சை செருகத் தொடங்கி விட்டார்கள். தாக்கரேவைப் பொறுத்

தற்குதான்'' என்ற அரசுத் தரப்பு வாதங்கள் எடுபடவில்லை! அருண்பாட்டியா மீண்டும் புனே முனிசிபல் கமிஷனராகப் பதவி ஏற்கும்படித் தீர்ப்பாகி விட்டது! அட.... நம்ம ஜனங்கள்கூட விழித்துக்கொண்டு விட்டார்களே...?

## பாவம் பச்சன்

'பிரதிக்ஷா' என்றாலே, 'ஓ...அமிதாப்பின் பங்களாவா?'. என்று கேட்குமளவுக்கு பிராபல்யமிக்க அந்த மஹா பிரம்மாண்ட வீட்டை கனரா பாங்க் அட்டாச் செய்யப் போகிறதாமே? ச்சொ...ச்சொ.... ABCL போண்டி! வங்கிக் கடன் 10 கோடி; அதனால் 12 கோடி பெருமானமிக்க இந்த வீட்டை..... ப்ச்... பணம் போனால் போகட்டும்... அதற்கென்று அமிதாப் மறுபடியும் ஏதாவது படம் பண்ணாமலிருந்தால் சரி! அப்புறம் கோடிக்கணக்கான ரசிகர்களையுமல்லவா இழக்க வேண்டி வரும்?


அமிதாப்

## முதுகு வலி போச்சு; வாய்வலி வந்தது!

சரியான முந்திரிக் கொட்டைகள் இந்த மும்பைக்காரர்கள். பாருங்களேன்! சச்சினும் அஞ்சலியும் பயணித்துக் கொண்டிருந்த ஓபலை ஒரு மாருதி 800 ஜஸ்ட் உரசி ஹலோ சொன்னது - உடனே ஃப்ளாஸ்கில் ஹார்லிக்ஸ் - காம்ப்ளானும், கையில் ஆப்பிள்- ஆரஞ்சுமாக அத்தனை பேரும் அலறிப் புடைத்துக்கொண்டு கிளம்பி விட்டார்கள்! ''ஐயோ... சச்சினுக்கு என்னாச்சு? பாம் ப்ளாஸ்ட்டா? மல்டிபிள் ஃப்ராக்சரா? முதுகே பெயர்ந்துடுச்சா? எந்த ஆஸ்பிடல்ல அட்மிட் ஆகியிருக்கு? ஐ.ஸி.ஸி.யுவா? எந்த க்ரூப் இரத்தம் வேணும்? எத்தனை பாட்டில்? யாரு டாக்டர்? என்ன விஸிட்டிங் அவர்ஸ்'' - என ஓயாமல் பத்திரிகை அலுவலகங்களுக்குத் தொலைபேசியே அவர்களை ஒரு வழி பண்ணிவிட்டார்கள். ''அட... ஒண்ணும் ஆகல்ல சாமி... ஒரு சிராய்ப்புகூட இல்ல'' என்று சொல்லிச் சொல்லியே இவர்களுக்கு வாய்வலி கண்டுவிட்டது!

## 'ஜில்'லும் 'ஜல்'லும்

இந்த நூற்றாண்டின் சிறந்த ஆயிரம் மனிதர்களில், காந்தி 12-வது இடத்தைப் பிடித்திருப்பது தெரிந்திருக்கலாம்! ஆனால் பெர்லினில் மகாத்மாவின் பெயரால் ஒரு பள்ளி இயங்குவதும் (பெயர், மாணவர்கள் சாய்ஸாம்!) வாஷிங்டன் டி.ஸி.யில் அவருக்கொரு சிலை நிறுவப்பட இருப்பதும் எத்தனை பேருக்குத் தெரியும்? லூயி ஃபிஷர் எழுதிய மகாத்மாவின் வரலாற்றை தமிழாக்கம் செய்த கிருஷ்ணமாச்சாரி, தமிழ்ச் சங்கத்தின் புதிய ஏஸி ஆடிட்டோரியத்தின் திறப்பு விழாவில் வெளியிட்ட சுவையான குறிப்புகள் இவை. பாரதிய வித்யாபவன் டைரக்டர் ஜெனரல் ராமகிருஷ்ணன் நூலை வெளியிட, முதல் பிரதியைப் பெற்றுக் கொண்ட மாநில சீஃப் செகரட்டரி பி. சுப்பிரமணியம், காலத்துக்கேற்றவாறு தமிழ்ச் சங்கமும் கம்ப்யூட்டர் கல்வியை அறிமுகப்படுத்த வேண்டுமென்றார். எல்லாம் சரி... ஆனால் கம்ப்யூட்டருக்கு ஏ.சி வேண்டுமே. கண்ணாயிரத்துக்கு கண் தெரியாத கதையாக, திறப்பு விழா அன்றே அழகான ஏஸி அரங்கின், ஏ.ஸி. ஃபேனால்! அதனாலென்ன?.... சங்கத்துக்காரர்கள் வழங்கிய ஐஸ்க்ரீமும், ராஜராஜேஸ்வரி நாட்டிய பள்ளி மாணவிகளின் 'இலக்கிய பரதமும்' எரிச்சலை அடக்கி விட்டதே!

— ஜெயஸ்ரீ ராஜ்

இந்துவை விட்டுப் பிரிந்து, இருபத்து நாலு வருடங்கள் ஆன பிறகும் கூட, எதை யும் மறக்கவில்லை. அவள் கடித்துத் துப்பிய சுட்டை விரல் நகத்துண்டில் படர்ந்திருந்த மருதாணிக் கறை, அவள் பேசும் பொழுது அசைந்தாடும் கல் வைத்த காது ஜிமிக்கிகள், திருமணப் பேச்சை எடுத்தாலே சிவந்து போகும் அந்த முகம். எதையும் மறக்க வில்லை. ரெண்டு ஹார்ட் அட்டாக் வந்த பிறகும் கூட.

இதையெல்லாம் சொன்னால், முரளிக்குப் புரியுமா?

''இப்ப ஒன் உடம்பு இருக்கற கண்டிஷனுக்கு சாலக்குடி போயே ஆக ணுமா சங்கர்?'' என்றான் கவலையுடன் முரளி.

''கட்டாயம் போக ணும்.''

''ஏண்டா பைத்தியக் காரன் மாதிரி பேசறே? டாக்டர் நீ கம்ப்ளீட் ரெஸ்ட்ல இருக்கணும்னு சொல்லியிருக்காரு.''

''தெரியுண்டா. ஆனா லும் போகணும். ப்ளீஸ்...''

''ஏன்னு சொல்லு?''

''நீ மறந்திருப்பே. இந்து வுக்குக் கல்யாணம் ஆகற துக்கு முன்னாடி நாங்க கடைசியா போய்ட்டு வந்த இடம் அது. சாவுறதுக்கு முன்னாடி அங்க ஒரு தடவை போய்ட்டு வர ணும்னு ஆசைப்படறேன்'' என்று கூறிவிட்டு முரளி யின் முகத்தைப் பார்த் தேன்.

''மைகாட்! ஒன் பொண்ணுக்கே கல்யா ணம் பண்ணி வச்சிட்ட. இன்னுமா நீ அவளை மறக்கலை?'' என்ற முரளி, சில நிமிடங்கள் பேசாமல் இருந்தான். பிறகு, ''ஓகே... போகலாம்'' என்றான்.

காலை ஏழு மணிக்குக் கோயம்புத்தூரி லிருந்து காரில் கிளம்பி, பாலக்காடு, திருச் சூர் வழியாக சாலக்குடி செல்ல பத்தரை மணி ஆகிவிட்டது.

கார் ஜன்னல் வழியாக ஊரைக் கவ னித்தேன். நிறைய மாறிவிட்டது. அப்பொழு தெல்லாம் இவ்வளவு கடைகள், லாட்ஜ்கள் இல்லை. புன்னகை மன்னன் சினிமாவுக்குப் பின் இந்த இடம் பாப்புலராகி, நிறைய ஜனங் கள் வருகிறார்கள் போலும்.

கார் அதிரம்பள்ளி ரோட்டில் திரும்பி, மேடு ஏற ஆரம்பித்தவுடனேயே, ரெண்டு பக்க மும் பச்சைப் பசேலென்று மரங்கள். தேக்கு, தென்னை, குட்டை ஈச்சை... என்று நிறைய மரங்கள் போட்டி போட்டுக் கொண்டு வளர்ந் திருந்தன. சில்லென்று காற்று முகத்தில் அடித்தது.

''இந்த மாதிரி ஊர்ல இருந்தா, ஹார்ட்-அட்டாக்கெல்லாம் வராதுல்ல முரளி?'' என்றேன்.

''வரும். உன்ன மாதிரி இருபத்து நாலு வருஷம் கழிச்சும், பழைய காதலிய நினைச் சுட்டிருந்தா கட்டாயம் வரும்.''

மேற்கொண்டு நான் ஒன்றும் பேசாமல் வெளியே கவனிக்க ஆரம்பித்தேன். வெட் டிலிப்பாறா வந்தவுடன், திடீரென்று கூடுதல் ஜில்லிப்புடன் காற்று அடிக்க, நான் வலப் புறம் திரும்பிப் பார்த்தேன். மரங்கள் தாண்டி, சரிவில் மெதுவாக சாலக்குடி ஆறு ஓடிக் கொண்டிருந்தது. எங்கள் காதலுக்கு சாட்சி யான அந்த ஆறைப் பார்த்தவுடன், மனதில் துக்கமும் குதூகலமும் சேர்ந்து கலவையாக ஓர் உணர்ச்சி.

''காரை நிறுத்து'' என்றேன்.

நான் இறங்கி, ஆற்றை நோக்கிய சரிவில் இறங்க ஆரம்பித்தேன். பின்னாலேயே முரளி யும் வந்தான். கீழே வந்து சேர்ந்தவுடன், சட்டென்று கண் முன்னால் விரிந்த அகன்ற நதிப்பரப்பைக் காண மனத்திற்கு இதமாக இருந்தது. கண்ணுக்குத் தெரியாத ஏதோ ஒரு இசைக் கருவியை தனக்குள் ஒளித்து வைத் திருப்பது போல், ஆற்று நீர் சுருதி பிசகாத சப்தத்துடன் ஓடிக் கொண்டிருந்தது. எதிர்க் கரையில் அடைசலாக மரங்களும், புதர்ச் செடிகளும் தெரிந்தன.

ஜில்லென்ற நீரில் காலை வைத்தவுட னேயே, மனதில் நினைவலைகள் புரண்டு ஓடின.

ஜி. ஆர். சுரேந்தர்நாத்



ஜெ..டிஸ்னி

வசந்த கால நதிகளிலே
வைரமணி நீரலைகள்
நீரலைகள் மீதினிலே
நெஞ்சிரண்டின் நினைவலைகள்

என்று பாடிக் கொண்டிருந்த இந்து, சட்டென்று பாட்டை நிறுத்தினாள்.

"போதும். சத்தம் கேட்டு யாராச்சும் வந்துடப் போறாங்க" என்று கூறியபொழுது, அவள் காதில் அணிந்திருந்த ஜிமிக்கிகளும் ஆடின.

அவள் அணிந்திருந்த பட்டுப் பாவாடை தாவணி, வெயில் பட்டு அவள் முகத்தில் லேசாக அரும்பியிருந்த வியர்வை; காதில் அழகாக ஆடிய ஜிமிக்கிகள். அவளின் கொலுசணிந்த கால்களைத் தழுவிக் கொண்டு ஓடும் ஆற்று நீர். என்ன ஒரு ரம்யமான சூழ்நிலை!

அவள் காதில் ஜிமிக்கிகள் ஆடுவதை மிகவும் ரசித்தேன். எனவே வேண்டுமென்றே, அவள் 'இல்லை' என்று பதில் சொல்வது போல கேள்விகள் கேட்டேன். அப்பொழுது இந்திராகாந்தி எமர்ஜென்சி அறிவித்து, மொரார்ஜிதேசாயை எல்லாம் சிறையில் அடைத்திருந்த காலம்.

"மொரார்ஜி தேசாயை ரிலீஸ் பண்ணிட்

டாங்களா?'' என்றேன் நான்.

''இப்ப எதுக்கு திடீர்னு கேக்குற?'' என்றாள் இந்து.

''ஏன்னு அப்புறம் சொல்றேன். முதல்ல பதில் சொல்லு. ரிலீஸ் பண்ணிட்டாங்களா?''

''இல்லை'' என்று கூறியபொழுது அவள் காதில் ஆடிய ஜிமிக்கிகளை ரசித்தேன்.

''மூன்று முடிச்சு படம் பார்த்துட்டியா நீ?''

''இல்ல.''

''இந்த மாசம் முப்பது தேதிதானே?''

''இல்ல. முப்பத்தொண்ணு'' என்ற இந்து நான் ஜிமிக்கி அசைவை ரசிப்பதைக் கண்டு பிடித்து விட்டாள்.

''எம்.ஜி.ஆர். மறுபடியும் தி.மு.க.வுல சேந்துட்டாருல்ல?'' என்று நான் அடுத்த கேள்வியைக் கேட்டவுடன், அவள் தனது இரண்டு கைகளாலும் இரண்டு ஜிமிக்கிகளையும் மூடி மறைத்துக் கொண்டு, ''இல்ல'' என்றாள்.

''ஏய்... கையை எடுத்துட்டு பதில் சொல்லு'' என்றேன் நான்.

''முடியாது. நீ எதுக்கு கேக்கறேன்னு தெரியும். யூ...''

என் அருகில் நெருங்கி வந்து, அவள் கைகளை ஆயுதமாக்கி, நெஞ்சில் திரும்பித் திரும்பிக் குத்தியது வலிக்கவேயில்லை. ஆனால் எந்த ஆயுதமுமின்றி, 'வேண்டாம். என்ன மறந்துடு' என்று அவள் சொன்ன வார்த்தைகளால் ஏற்பட்ட காயம் இன்னும் வலித்துக் கொண்டிருக்கிறது.

**"எ**ன்னத்தடா தேடறே? சினிமா மாதிரி திடீர்னு பாக்கலாம்னு நெனப்பா!'' என்றான் முரளி.

''சீ... சீ... அப்படில்லாம் இல்ல'' என்ற நான் சுற்றிலும் பார்த்தேன். எதைத் தேடி வந்தேன்? அன்று நாங்கள் எழுப்பிய சிரிப்பும், பேச்சுச் சப்தமும் இந்த நீரிலும், காற்றிலும் கரைந்து போனதைத் தேடி வந்தேனோ?

சலசலவென்று ஓடும் நீரைப் பார்த்துக் கொண்டே, ''ரொம்ப உசுரா இருந்தா முரளி. பாத்துப் பாத்துப் போட்ட கோலம், மழை பெஞ்சவுடனே கரைஞ்சுட்ற மாதிரி, எங்க காதலும் கரைஞ்சு போச்சு. அவ அப்பாவை எதிர்த்து, ஒரு வாரம் கூட அவளால தாக்குப் பிடிக்க முடியலையா? இல்லை, பணக்கார மாப்பிள்ளையை பாத்து மனசு மாறிப் போயிட்டாளான்னு இன்னைய வரைக்கும் தெரியலை. என்னை மறந்துடுன்னு ஒரே வரில ஒரு கடிதம். இவன் எவ்வளோ வேதனைப்படுவான்னு ஒரு 'சாரி' கூடக் கேக்கலை. அவ மனசுல எந்த வருத்தமும் இல்லாததாலதான தட்டுன்னு உதற முடிஞ்சுது? அவ பிரிஞ்சதை விட இதான்டா பெரிய உறுத்தலா இருக்கு'' என்றேன் நான்.

அதிரம்பள்ளி வந்தவுடன் காரை நிறுத்தி இறங்கினோம். அந்தச் சின்ன ஊருக்கு, பின்னணி இசை மாதிரி, அருவி விழும் சப்தம் தொடர்ந்து கேட்டுக் கொண்டிருந்தது.

ரோட்டிலிருந்து கீழே சென்ற படிகளில் இறங்கினோம். நடந்து, சமதளத்திற்கு வந்து, பாறையில் ஏறியவுடன் கண் முன்னால் தெரிந்த அருவி, பார்ப்பதற்கு அற்புதமாக இருந்தது. மேலும் நடந்து, குளிக்கும் பகுதியை அடைந்தோம். நிறையப் பேர் உற்சாகத்துடன் குளித்துக் கொண்டிருந்தனர்.

மேலேயிருந்து கீழே கொட்டும் அருவியைப் பார்க்க, மனதில் சின்ன நடுக்கம் தோன்றியது.

''போதுண்டா. வாடா. இங்க நிக்கவே பயமா இருக்கு'' என்று கையைப் பிடித்தான் முரளி. நான் திரும்பினேன்.

''என்ன போலாமா? இப்ப கிளம்பினாலே, கோயமுத்தூர் போய்ச் சேர ஆறு மணியாயிடும்'' என்றான் முரளி கையிலிருந்த வாட்சைப் பார்த்தபடி.

''இருடா. இன்னும் ஒரே ஒரு இடத்தைப் பாத்துட்டுக் கிளம்பிடலாம்'' என்றேன் நான்.

''எந்த இடம்?''

நான் வேகமாக வந்து கொண்டிருந்த நீரையும், நடுநடுவே முளைத்திருந்த பாறைகளையும் பார்த்தேன்.

''தோ... அங்க பாரு. ஒரு உயரமான பாறை தெரியுதுல்ல. அங்க போய்ட்டுக் கிளம்பிடலாம்'' என்றேன்.

''அங்க என்னடா?''

''வாயேன். சொல்றேன்.''

முரளியின் கையைக் கவனமாகப் பிடித்துக் கொண்டு, கவனமாக நீரினுள் மூழ்கி

---

**''எம்.எல்.ஏவைப் போட்டு ஏன் இப்படி அடிக்கிறாங்க?''**

**''சொந்தத் தொகுதிக்கே வந்து, 'சே! ரோடு சரியில்லியே; யாரு இந்த ஊரு எம்.எல்.ஏ?'ன்னு கேட்டா ஜனங்களுக்குக் கோபம் வருமா, வராதா!''**

**– குடந்தை கே. ஆர். ரவிக்குமார்**



யிருந்த பாறைகளில் கால் வைத்து, நடந்து, அந்த உயரமான பாறைக்கருகில் வந்தேன்.

பாறையில் ஏகப்பட்ட காதலர்கள் தங்கள் பெயர்களைச் செதுக்கி வைத்திருந்தனர். இதில் எத்தனை பேர் ஜெயித்தார்களோ?

அருகிலிருந்த சிறிய பாறையைப் பார்த்தேன். அன்று நாங்கள் வந்தபொழுது இந்து இதில்தான் அமர்ந்திருந்தாள்.

**நா**ன் நீரினுள் கையை விட்டுத் துளாவி, ஒரு சிறிய கூரான கல்லை எடுத்தேன்.

"என்ன பாறைல பேரைச் செதுக்கப் போறியா?" என்றாள் இந்து.

"ஆமாம். வெறும் பேர் மட்டும் இல்ல. பாரேன்" என்று கூறிவிட்டு அவள் கண்களில் ஒரு கர்ச்சிப்பை கட்டினேன்.

சரியாக நாற்பது நிமிடங்களுக்குப் பிறகு, அவள் கண்களில் கட்டியிருந்த கர்ச்சீப்பை அவிழ்த்து, பாறையில் நான் செதுக்கியிருந்த வாசகங்களைக் காண்பித்தேன்.

காதல் நினைவுகள்
காலத்தில் கரையாத கல்வெட்டுகள்
– சங்கர், இந்து. 27.7.75.

"நல்லாருக்கு. எதுக்கு எழுதின?" என்றாள் இந்து.

"ம். நாளைக்கு நாம திரும்பியும் வந்தா பாக்கலாம். நம்ம புள்ளைங்களை அழைச்சுட்டு வந்து காமிக்கலாம். சப்போஸ்... உங்க வீட்டுல எதிர்த்து, நாம பிரிஞ்சிட்டோம்னா கூட, நான் மட்டும் இங்க வந்து அடிக்கடி பார்ப்பேன். இந்தப் பழைய சுகமான நிமிடங்களை நினைச்சுப் பார்த்துட்டுப் போவேன்."

"சீ... பேச்சைப் பாரு. எங்க வீட்டுல எதிர்த்தா, நான் உன்னைப் பிரிஞ்சிடுவேன்னு நினைக்கிறியா? இங்கே பாரு சங்கர்..." என்ற இந்து தன் இரு கைகளாலும் என் முகத்தை ஏந்திக் கொண்டு, "காலப்போக்குல இந்தப் பாறை கூட அழிஞ்சுப் போயிடும். ஆனா நான் மட்டும் உன்னைப் பிரியறது நடக்கவே நடக்காது" என்றாள் இந்து கண்கலங்க.

**நா**ன் பாறையைப் பார்த்துப் பெருமூச்சு விட்டேன். பாறை இன்னும் இங்கே அப்படியேதான் இருக்கிறது. அவள்தான் பிரிந்து போய் விட்டாள்.

நான் பொறுமையாக அன்று செதுக்கியிருந்த வாசகங்களைத் தேடினேன். சட்டென்று அந்த வாசகங்கள் கண்ணில் பட்டன. ஒரு வினாடி உடம்பும், மனசும் சிலிர்த்து அடங்கியது.

"இங்க பாருடா" என்றேன் முரளியிடம்.

அதைப் பார்த்த முரளி ஒன்றும் சொல்லாமல் மெலிதாகச் சிரித்தான்.

"அப்பப் பேசிய எதையும் எங்களால காப்பாத்த முடியலை முரளி. ஒரு நிமிஷம் கூடப் பிரிய மாட்டேன்னு சொன்னவளும் பிரிஞ்சு போயிட்டா. பிரிஞ்சா இங்க அடிக்கடி வருவேன்னு சொன்ன நானும் வரலை. அதுக்குப் பிறகு இப்பத்தான் வரேன்."

"சங்கர்... இங்க நிறையப் பேருக்கு காதல் அந்த வயசுல வர்ற போதை. அந்தப் போதைல யதார்த்தத்தைப் பத்தி நெனைச்சுப் பாக்காம, வந்து விழுற வார்த்தைகள் அவை. அதுக்கெல்லாம் முக்கியத்துவம் கொடுக்கக் கூடாது."

அவன் பேசியதை கேட்டபடியே, பாறையைப் பார்த்துக் கொண்டிருந்த நான், ஒரு இடத்தில் தனியாக இந்து என்று எழுதியிருந்ததைப் பார்த்து அதிர்ந்தேன். அருகில் சென்று உற்று நோக்கினேன். நான் அன்று செதுக்கியிருந்த வாசகங்களுக்கு சற்று கீழ், "மன்னிப்பாயா – இந்து. 12.1.76" என்று செதுக்கப்பட்டிருந்தது. மனசுக்குள் திடீரென்று ஒரு நிம்மதி படர்ந்தது.

"டேய் இங்க பாருடா..." என்று உணர்ச்சி வசப்பட்டுக் கத்தினேன்.

"இந்தத் தேதி அவ கல்யாணத்துக்கு ரெண்டு வாரம் முந்தைய தேதி முரளி. ஜனவரி 27–ஆம் தேதி அவளுக்குக் கல்யாணம். அதுக்கு முன்னாடி எழுதியிருக்கா. ஃபீல் பண்ணி மன்னிப்புக் கேட்டிருக்கா முரளி. இது போதும் எனக்கு. இப்பத்தான் ரிலீஃப்பா இருக்கு" என்ற நான், கீழேயிருந்த ஒரு கூரான கல்லை எடுத்து, "மன்னித்தேன். சங்கர் 29.3.99" என்று செதுக்கினேன்.

"வா முரளி போலாம். எனக்கு இன்னிக்கு ரிலீஃப் கெடச்ச மாதிரி, அவளும் ஒருநாள் வந்து இதைப் பார்ப்பா. குற்ற உணர்ச்சி போயி ரிலீஃப் ஆவா" என்று உற்சாகத்துடன் கூறிய நான், நீரில் காலை வைத்து நடக்கத் தொடங்கினேன். ⭘

"இன்ஸ்பெக்டர் சார்... இனிமே திருடறதை விட்டுடலாம்னு இருக்கேன்..."

"என்னய்யா சொல்றே?"

"பயந்துட்டீங்களா... உங்க விக்கல் நிக்கணும்னுதான் அப்படி 'ஷாக் ட்ரீட்மெண்ட்' கொடுத்தேன்!"

– மதுரை என். உஷா தேவி



14

**முக்கூர் லக்ஷ்மி நரசிம்மாச்சாரியார்**

பகவான் யக்ஞ ரூபியாகவும் யக்ஞத்தை ஏற்பவனாகவும் யக்ஞ ரக்ஷகனாகவும் இருக்கிறான் என்றேன். 'விஷ்ணு ஸ்தூரபோஸி' என்று வேதம் இன்னொரு இடத்தில் சொல்கிறது.

ஸ்தூரபம் என்கிற சப்தத்துக்கு 'தாரகன்' என்று பொருள்– தரிப்பவன் என்று அர்த்தம். யக்ஞத்தைத் தரிப்பவன். யக்ஞத்தை மட்டுமல்ல, சமஸ்த லோகத்தையும் தரிப்பவன் விஷ்ணு என்ற பொருள் கிடைக்கிறது.

அருணம் என்கிற வேத பாகத்திலே இது வருகிறது. அருணத்தை தினமும் பாராயணம் பண்ணினால் ஹ்ருத் ரோகம், நேத்திர ரோகம், சுவாஸ ரோகம் எதுவும் நெருங்காது. நடக்க முடியவில்லை; ஓர் அடிகூட எடுத்து வைக்க முடியவில்லை. அது தவிர கண் பார்வை குறைந்து போயிருக்கிறது. ஏகப்பட்ட மாளாத தலைவலி, சரீரத்தில் ஏற்படுகிற உபாதை தவிர மானஸீகமான பல உபாதைகள். இதற்கு மேல் விகார ரூபமும் ஏற்பட்டுப் போகிறது.

தலைவலி என்றால் எதிரே இருப்பவருக்குத் தெரியாது. அவர்கள் ஏதோ பேசிக் கொண்டே இருப்பார்கள். தலைவலி அதிகரிக்கும்! வேறு சில ரோகங்கள் வெளியே நாம் சொல்லாமலேயே எதிரே இருப்பவருக்கு நன்கு தெரியும்படி இருக்கும்.

இந்த மாதிரி பல வியாதிகள் லோகத்தில் ஹிம்ஸை பண்ணுகின்றன. அதனால்தான் வேதத்தில் இந்த அருணம் என்கிற பாகம் இருக்கிறது பாருங்கள்... அதை நித்யம் பாராயணம் பண்ண வேண்டும். அந்த பாகம் மொத்தமும் சூர்ய நமஸ்காரம்தான்.

ஒவ்வொரு மந்திரத்தையும் சொல்லி நமஸ்காரம் பண்ண வேண்டும்.

*நமஸ்காரோ ப்ரியோ பானு*
*அபிஷேக ப்ரிய சிவ:*
*அலங்கார ப்ரிய விஷ்ணு:*
*பிராமண: போஜன ப்ரிய:*

என்று சுலோகம் உண்டு.

அதாவது சூரியன் நமஸ்கார ப்ரியன். சூரியன் உதிப்பதற்கு முன்பே குளித்துவிட்டு சுத்தமாக அர்க்கியத்தை வைத்துக் கொண்டு நாம் நின்று கொண்டிருக்க வேண்டும். அப்படி யார் பண்ணுகிறார்களோ அவர்கள் ஆரோக்கியத்தோடு விளங்குகிறார்கள்.

பெரியோர்கள் நம் கிருஹத்தை நோக்கி வருகிறபோது அவர்கள் வருவதற்கு முன்பே பூர்ண கும்பத்தை வைத்துக் கொண்டு நிற்பதில்லையா? அந்த மாதிரி சூர்யன்– பிரத்யக்ஷ தேவதை நமக்கு. நம்மைச் செயல்படுத்துகிறவன். நம் கர்மாவுக்கு சாட்சியாய் இருப்பவன். நம் இந்த்ரியங்களெல்லாம் வேலை செய்வதற்கு சக்தியை ஊட்டக் கூடியவன். ஆகையினால்தான் வேதம் இன்னொரு இடத்திலே சொல்கிறபோது, 'சூர்யன் உதிக்கிறபோது இந்த யக்ஞத்தைப் பண்ணு'; ஏனென்றால் அந்த சூரியன் உதிக்கிறபோதே எல்லா ஜீவராசிகளும் ஆனந்திக்கின்றன' என்று சொல்கிறது.

சூரியனின் ஒளியைப் பார்த்து மனிதன் மட்டுமா ஆனந்திக்கிறான்! தாவர வர்க்கங்கள், பட்சி வர்க்கங்கள், எல்லாமே ஆனந்தமாய் இருக்கின்றன அந்த உஷத் காலத்திலே.

ஆகையினால் சூரியன் பிரத்யக்ஷ தவதை. நூறு வருஷ காலம் சந்தோஷத்தோடு எல்லோரோடும் கூடியிருந்து அவனைப் பார்ப்போமாக' என்று மந்திரம்.

இப்படி 'உன்னைப் பார்க்கிறேன்' என்று நாம் அந்த மந்திரத்தைச் சொன்னோமானால், அந்த சூரியன் 'ததாஸ்து'! நீ அப்படியே பார்! நூறு வயது ஆரோக்கியமாய் இரு!' என்று ஆசீர்வாதம் பண்ணுவான்.

இந்தக் கர்மாவையே நாம் விட்டு விட்டோம் என்று வைத்துக் கொள்ளுங்கள், அந்த ஆசீர்வாதம் நமக்குக் கிடைக்கப் போவதில்லை. அதனால் பல இடைஞ்சல்களை நாம் அனுபவிக்க வேண்டி வரும்.

மாறாக, சூரியனை நாம் பார்த்தால் நேத்ர ரோகம் ஏற்படாது இருக்கலாம்.

சூர்யனே தென்படாமல் மப்பும் மந்தாரமுமாய் இருக்கிற நாளுக்கு சாஸ்திரத்தில் துர்த்தினம் என்றே பெயர். சூரியன் நன்கு பிரகாசிக்கும்படியான நாளுக்கு சுதினம் என்று பெயர்.

சு உஷா – நல்ல விடியல். அப்படிப்பட்ட நல்ல விடியலைப் பார்க்காமல் சாப்பிடக் கூடாது என்று சொல்லியிருக்கிறது சாஸ்திரம். அப்படி சூரியனைப் பாராமல் சாப்பிடுகிறவன் ஒரு புழுவுக்குச் சமானம்! அதிலும் சாணத்தில் உள்ள புழுவைக் காட்டிலும் அவன் மட்டமானவன் என்று சாஸ்திரம் சொல்கிறது.

ஆகையினால் இவனுக்கு ஆறறிவு இருந்தும் இவ்வளவு வசதியை பகவான் கொடுத்தும் சூரியனை வணங்கவில்லையானால் அவன் புழுவல்லாமல் வேறென்ன! அத்தகையவன் வாக்கிலே மங்களமான சப்தமே வராதாம்! எப்போது பார்த்தாலும் அமங்கலமாகவே பேசுவானாம்! அவன் கேட்பதும் அமங்கலமான விஷயத்தைத்



தான் கேட்பானேயொழிய ஒரு நல்ல வார்த்தை அவன் காதில் விழாதாம்.

ஆகையினாலே, சூரியனை நித்யம் நமஸ்காரம் பண்ண வேண்டும். அதனால் நல்ல ஆரோக்கியம் கிடைக்கும். நித்திய படியே 132 தடவை விழுந்து எழுந்து சேவித்தால் உடம்புக்கு பலம் வந்து விடுகிறது! உடம்புக்கு ஒரு புத்துணர்வு கிடைக்கிறது. சூரியனுக்கு எதிரில், சூர்ய ரச்மியில் நின்று கொண்டு சூர்ய நமஸ்காரம் பண்ண வேண்டும். அப்படிப் பண்ணினால் புத்துணர்வு கிடைக்கும்.

சூரியன் நமஸ்கார ப்ரியன் என்கிற மாதிரி சிவன் அபிஷேகப் ப்ரியன். தீர்த்தத்தை எடுத்து பரமசிவனுக்கு அபிஷேகம் பண்ணிக் கொண்டேயிருக்க வேண்டும். அபிஷேகத்தினாலே சந்தோஷத்தை அடைகிறான் அவன்.

வாடபல்லி என்கிற க்ஷேத்திரம் உண்டு. தீபாலயம் என்று அதற்குப் பெயர். அந்த தீபாலயம் கிருஷ்ணா நதியும் மூஸி நதியும் சங்கமமாகும் க்ஷேத்திரம். அங்கே சங்கமேஸ்வரர் ஆலயம் விசேஷமாக இருக்கிறது. அங்கே போய் நாம் பார்த்தோமானால், அந்த ஈச்வரன்–லிங்கத்தின்–சிரஸிலே எப்போதும் கங்கா பிரவாகம்–ஜலம்– வந்து கொண்டேயிருக்கிறது.

மட்டபல்லிக்கு அருகாமையிலேயே மேலச் செருவு என்று ஒரு ஊர். அங்கே பிரும்மாண்டமான ஈச்வர ஆலயம் இருக்கிறது. ஈச்வரனும் பிரும்மாண்டமானவன். அவன் சிரஸிலேயும் கங்காபிரவாகம்! கலகலவென்று கங்கை!

இப்படி, அபிஷேகப்ரியனான சிவன் தீர்த்தத்திலேயே இருக்கிறான். அபிஷேகம் பண்ணப் பண்ண பரமானந்தம் ஏற்படுகிறது அவனுக்கு.

அதே மாதிரி அலங்கார ப்ரிய விஷ்ணு: விஷ்ணுவுக்கு அலங்காரம் பண்ணிக் கொண்டே இருக்க வேண்டும். அலங்காரம் பண்ணிப் பார்த்தோமானால் அவனுக்கு ஆனந்தம்; பார்க்கிறவர்களுக்கும் ஆனந்தம். திவ்யமான விவிதமான கொண்டைகளாலும் மாலைகளாலும் அலங்காரம் பண்ணிப் பார்க்க வேண்டும் அவனை.

அடுத்து பிராமணோ போஜனப்ரிய: போஜனத்திலே ப்ரியமுடையவன் பிராமணன் என்று அர்த்தமில்லை! பிரும்ம வித்துக்களை அழைத்து, சத்பாத்திரம் அறிந்து அன்னம் இட வேண்டும் என்று அர்த்தம்!

ஒரு பிரும்ம வித்தின் குக்ஷியில் அன்னம் விழுந்ததானால் அவருக்கு ஏற்றம்; அவருக்கு அன்னமிட்டவருக்கும் ஏற்றம். அதனால் தான் ஆபஸ்தம்பர் சொல்கிறார்– 'வேதவித்துக்களை அழைத்துக் கொண்டு வா; அவர்களுக்கு அன்னதானம் பண்ணு; உடனே அவரை உட்கார வைத்து அவரிடத்திலே ஆசிர்வாதத்தை வாங்கு...'

பூரணமாய் வயிறு நிறைந்திருக்கிற போது ஆசியும் பூரணமாயிருக்கும்.

ஆகவே, பிராமணர்கள் போஜன ப்ரியர்கள் என்று அர்த்தம் இல்லை. 'பிரும்ம வித்துக்களுக்கு அன்னம் இடு' என்று பணிப்பதே இந்த லோகத்தில் அர்த்தம். அன்னம் இட்டு அவர்களுடைய ஆசிகளைப் பெற வேண்டும். ஈச்வரனுக்கு அபிஷேகம் பண்ண வேண்டும்; விஷ்ணுவுக்கு அலங்காரம் பண்ண வேண்டும்; சூரியனுக்கு நமஸ்காரம் பண்ண வேண்டும் என்கிற விதியைத்தான் இப்படிக் காட்டிற்று சாஸ்திரம்.

சூர்ய நமஸ்காரம் பண்ணினால் எல்லா நோயும் போய்விடும் என்று சொல்கிற அருணத்தைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தேன். அந்த அருணத்திலே சொல்லியிருப்பதுபோல் விஷ்ணுவே எல்லாவற்றையும் தரிக்கிறான்.

## அருள்வாக்கு

**பேச்சுக்கிடையே ஏதோ ஒரு தரம் 'சிவ' என்ற இரண்டு அக்ஷரத்தைச் சொல்லிவிட்டால் அது ஸமஸ்த பாபத்தையும் போக்கிவிடும்.**

**ஸத்தியங்களுக்கெல்லாம் மேலான ஸத்யமாக ப்ராண த்யாக ஸமயத்திலே ஸாக்ஷாத் பரதேவதை சொன்னதாக சுகாசார்யாள் வாயினால் வந்திருக்கிற வாக்யம் இது.**

**சிவசிவ என்று சொல்லாதவன் தீவினையாளன் என்றால் துஷ்கர்மா பண்ணினவன், அதாவது பாபி என்று அர்த்தம். அப்படியானால் சிவ நாமா சொல்லிவிட்டால் பாபம் போய்விடும் என்றுதானே அர்த்தம்?**

**தெரிந்தும் தெரியாமலும் எவ்வளவோ பாபம் பண்ணி விட்டோம். அதுதான் மேலே போக முடியாதபடி பெரிதாகத் தடைசெய்கிறது. சிவநாமா சொல்லி**

விட்டால் அந்தத் தடை போய்விடும். அப்புறம் மோக்ஷ பர்யந்தம் எல்லாம் ஸித்தியாகிவிடும்.

மமோபாத்த ஸமஸ்த துரித க்ஷயத்வாரா என்று தான் எந்தக் கர்மாவுக்கும் முதலில் ஸங்கல்பம் பண்ணு கிறோம். 'துரிதம்' என்றால் பாபம்தான். பக்தி மார்க்கம் பாபத்தைப் போக்கத்தான். பக்தி முதிர்ந்து ப்ரபத்தி (சரணாகதி) ஆகும். பகவான் கீதையைப் பூர்த்தி பண்ணும் போது, "சரணாகதி பண்ணு, உன்னை ஸகல பாவங்களிலிருந்தும் விடுவித்து விடுகிறேன்: ஸர்வ பாபேப்யோ மோக்ஷ யிஷ்யாமி" என்று ஸத்யம் பண்ணித் தந்திருக்கிறார். அவரை நம்பாமல் நாம் இன்னொருத்தரிடம் போக வேண்டிய தில்லை.



தர்மம், ஞானம் எதுவானாலும் பாபத்தைப் போக்குவதே. தர்மேண பாபம் அபநுததி என்று (மஹா நாராயண) உபநிஷத்தே சொல்கிறது. "பாபிகளில் நீ மஹாபாபியானாலும் ஞான ஓடத்தினால் அதைக் கடந்து விடுவாய்" என்று கீதையில் பகவான் சொல்கிறார்.

கர்மாநுஷ்டானம், ப்ரபத்தி, ஞான ஸாதனை எல்லாவற்றையும் விடப் பரமஸுலபமாக, நாம் தெரிந்தும் தெரியாமலும் ஜன்மாந்தரங்களாகப் பண்ணியுள்ள பாபத்தைப் போக்கிக் கொள்ள இங்கே பாகவதம் வழி சொல்லி விட்டது. சிவ நாமோச்சாரணம்தான் அது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.

ஸ்ரீவத்ஸ கோத்திரத்துக்கு ஒரு ஏற்றம் உண்டு. ஒவ்வொரு கோத்திரத்துக்கும் ஒரு ஏற்றம்–அதில் ஸ்ரீவத்ஸ கோத்திரத்துக்கு ஒன்று. ஸ்ரீவத்ஸ மஹரிஷிக்கு எதனால் ஏற்றம் என்றால், மஹரிஷிகளெல்லாம் ஒன்று கூடி, 'நாம் இங்கே உட்கார்ந்திருக்கிறோமே, இந்த உலகம் யாரால் தாங்கப்படுகிறது...?' என்று விசாரம் பண்ணுகிறார்கள்.

எத்தனையோ மஹரிஷிகள் இருந்தும் இதற்குப் பதில் சொல்ல முடியாமல் சாஸ்திரத்தைப் போட்டுக் குழப்பிக் கொண்டிருக்கிறார்கள். ஸ்ரீவத்ஸ மஹரிஷி மட்டும் மௌனமாக உட்கார்ந்து கொண்டிருக்கிறார். எல்லோரும் சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்! இவர்–ஸ்ரீவத்ஸ மஹரிஷி–திடீரென்று எழுந்தார்! எழுந்தவர் சொன்னார்:

"ஏன் இப்படி விசாரம் பண்ணுகிறீர்கள்? ஏன் இதைச் சொல்வதில் தயக்கம்? இதில் என்ன சந்தேகம்...? இந்த உலகம் எல்லாம் யாரால் தரிக்கப்படுகிறது என்றால் விஷ்ணுவால் தரிக்கப்படுகிறது!"

– எழுந்து நின்று பலத்த குரலில் இதைச் சொன்னார் ஸ்ரீவத்ஸ மஹரிஷி. மற்ற எல்லா மஹரிஷிகளும் எழுந்து நின்று அதை அங்கீகரித்து, 'அப்படித்தான்' என்று சொன்னார்கள். 'தங்களுடைய வாக்கிலேயிருந்து அது வரவேண்டும் என்பதற்காக நாங்கள் இத்தனை நேரமும் மௌனமாய் இருந்தோம்' என்றார்கள்.

இதைத்தான் வேதமும் சொல்கிறது! விஷ்ணுதான் எல்லாவற்றையும் தரிக்கிறான். தரிக்கிறான் என்றால், மொத்தத்தையும் தூக்கி வைத்துக் கொண்டிருக்கிறானா பரமாத்மா?... அப்படித் தூக்கிக் கொண்டால் அவனுக்கு பளுவாக இராதோ?

இல்லை! நமக்கு வலிக்கிறாற்போல் அவனுக்கு வலிக்காது! அவனுடைய சங்கல்ப மாத்திரத்தினாலே இவையெல்லாம் இப்படியிப்படி இருக்கட்டும் என்று அவன் நினைத்தானானால் அப்படியே இருக்கும். அவன் சங்கல்ப மாத்திரத்தாலே சகலத்தையும் தாங்குகிறான்.

இதைத்தான் நம்மாழ்வார் திருவாய்மொழியை முடிக்கிறபோது விசேஷமாக எடுத்துச் சொல்கிறார்:

சூழ்ந்து அகன்று ஆழ்ந்து உயர்ந்த
முடிவில் பெரும் பாழேயோ!
சூழ்ந்ததனில் பெரிய பர நன்மலர்ச்
சோதியோ!
சூழ்ந்ததனில் பெரிய சுடர் ஞான
இன்பமேயோ!
சூழ்ந்ததனில் பெரிய என் அவா அறச்
சூழ்ந்தாயே!

(தொடரும்)

# சிந்தனையும் சிந்தனையும்

"**சொ**ல்ல மறந்துட்டேன். முஸ்தபா மாமா வந்திருந்தார். நீங்க வர்றதுக்கு பத்து நிமிஷத்துக்கு முன்னாடி தான் போனார். ஞாயிற்றுக் கிழமை கல்யாணத்துக்கு கட்டாயம் வரணும்னார். அன்னிக்குப் பத்திரிகை குடுக்க வரும்போது உங்களப் பாக்க முடியலேன்னுதான் இன்னிக்கு வந்தார். நீங்க லேட்டா வருவீங்கன்னு சொன்னேன். நேரில பாத்துச் சொல்லணும்ங்கறதுக்காகவே இவ்வளவு நேரம் காத்திருந்தார். இல்லேன்னா நீங்க கோவிச்சுக்குவீங்களே..." என்றாள் ஜென்னத்.

பேசாமலிருந்தேன்.

"சரி. கல்யாணத்துக்கு என்ன பண்ணப் போறீங்க?" மிக அக்கறையுடன் கேட்டாள் என்னவள்.

"உம்மா! என்னம்மா பண்றது?" திரும்பி உம்மாவிடம் கேட்டேன்.

"நீ என்னமோ பண்ணு. நா என்ன சொல்றது...?" உம்மா பட்டும் படாமல் சொன்னது.

நான் இவளைப் பார்க்க–

"பெருசா பண்ணவேணுங்க... ஆமா சொல்லிட்டேன்..."

"பெருசாவா...? அப்ப ட்ரங்குப்பெட்டி வாங்கி வச்சுரலாமா...?" நான் சிரிக்க,

"வெளையாடாதீங்க..." என்றாள்.

"நீயே சொல்லு...."

"ஃபேன் வாங்கலாமா?"

ஆயிரத்துக்கு மேல் பழுத்துவிடும். தப்பிக்கவும் முடியாது. "ஏற்கெனவே உங்க மாமா ரெண்டு பேருக்கு ஃபேன்தான் வச்சோம். மறுபடியும் ஃபேனா...? வேண்டாம் ஜென்னா...." என்றேன்.

"அந்தக் காசுக்கு மோதிரம் செஞ்சுரலாங்களா...?" ஆர்வமுடன் என்னைப் பார்த்தாள் ஜென்னத்.

எதுவும் புரிபடாமல், "எந்தக் காசு...?" என்றேன்.

"அதாங்க, ஃபேன் வாங்கறதுக்கு பதிலா மோதிரம் வாங்கலாம்ங்கறேன்..." பெரிய குண்டைத் தூக்கிப் போட்டாள்.

"யாரு இப்ப ஃபேன் வாங்கலாம்னு சொன்னா?"

"அப்புறம் வெறுங்கையோட போகலாங்கறீங்களா...?"

"சிம்பிளா எதாச்சும் பண்ணலாம் ஜென்னா..."

"ஒண்ணும் செய்யலேன்னா... கல்யாணத்துக்குப் போக வேண்டாம்..." என்றாள் சடாரென்று.

படுக்கை செல்லும் வரை 'உம்முனு' இருந்தாள் ஜென்னத். "எதாச்சும் செய்யலாம்ப்பா. அதுக்கேன் இப்படி 'உம்முனு' இருக்கே? கொஞ்சம் சிரியேன்..." என்றபோதும் பேசாமலேயே இருந்தாள்.

**ப**ணத்துக்கு என்ன செய்வது என்று அலுவலகத்திலும் குழம்பிக் கொண்டிருந்த போதுதான் ஃபேக்ஸில் அந்தச் செய்தி வந்தது. 'வரும் ஞாயிற்றுக் கிழமை நடக்க இருக்கும் ரிவ்யூ மீட்டிங்கில் கலந்து கொள்ள எம்.டி. வருகிறாராம்...' 'திக்'கென்று அதிர்ந்து போனேன்.

ஏற்கெனவே என் மீது கோபம் கொண்டிருக்கும் என் மனைவியிடம் இதைப் போய்ச் சொன்னால் வேண்டுமென்றே பொய் சொல்வதாகச் சொல்லுவாள். சனி, ஞாயிறு இரண்டு நாட்களுக்கும் எல்லா ஊழியர்களுக்கும் கட்டாயம் 'ஸ்பெஷல் ட்யூட்டி' போட்டு விடுவார்கள். முதல் வேலையாகப் பணத்துக்கு ஏதாவது செய்தாக வேண்டும். நான் போக முடியாவிட்டாலும் பரிசுப் பொருளுடன் என்னவளையும், உம்மாவையும் கல்யாணத்துக்கு அனுப்பி வைத்தாக வேண்டும்.

இரவு வீடு திரும்ப எட்டு மணிக்கும் மேலாகிப் போனது. "என்னாச்சுங்க...?" என்று அடுப்படிக்குள்ளிருந்து வந்தாள் ஜென்னத்.

"ஒரு முக்கியமான விஷயம். கோபப் படக்கூடாது..." என்று பீடிகை போட்டேன்.

"பணம் பொரட்ட முடியலே. அதானே...?" என்றாள் இளக்காரமாக.

"அதைவிட முக்கியமானது..."

"என்ன...?"

"வர்ற ஞாயித்துக்கெழமை எனக்கு ட்யூட்டி. எனக்கு மட்டுமல்ல, ஆபீஸ்ல எல்லாருக்குமே அன்னிக்கு ட்யூட்டி."

"நெனைச்சேன்..." என்றாள் இகழ்ச்சியாக.

"உடனே நீ அதுக்கும், இதுக்கும் முடிச்சுப் போடாதே. அன்னிக்கு ரிவ்யூ மீட்டிங் வச்சிருக்காங்க. மெட்ராஸ்லருந்து எம்.டி. வர்றார். இன்னிக்கே வேலை ஆரம்பிச்சாச்சு. அதான் லேட். காலைலதான் தகவல் வந்தது... அதனாலத்தான் பணத்துக்கான ஏற்பாடு எதுவும் செய்ய முடியலை..."

"உங்க எண்ணம் போலவே ஆயிப் போச்சு..." வெறுப்பும் கோபமுமாகச் சொல்லிவிட்டு வேகமாக உள்ளே சென்றாள்.

எப்படியாவது பணம் புரட்டி 'மூணு கிராமு'க்காவது மோதிரம் செய்து உம்மாவையும் இவளையும் ஊருக்கு அனுப்பி வைக்கலாம். காலை எம்.டி. வந்து சென்றவுடன் மதியத்துக்கு மேல் கிளம்பி ஊருக்குப் போகலாம். கல்யாணத்துக்குப் போனதாகத் தலையைக் காட்டி விட்டு, அப்படியே உம்மாவையும் இவளையும் அழைத்துக் கொண்டும் வந்து விடலாம்.

எப்படியும் ஆயிரத்து முந்நூறு ரூபாய் ஆகிவிடும். போய் வரும் செலவு வேறு. ஆயிரம் ரூபாய் கடன் வாங்கியே ஆகணும். மொத்தமாய் யார் தருவார்?

சாப்பிடும் போதும் சரி, அதன் பிறகு படுக்கையிலும் சரி- ஒரு வார்த்தைக் கூட என்னிடம் பேசவில்லை ஜென்னத்.

"என்னடா, அவ மூஞ்சியத் தூக்கி வச்சுட்டிருக்கா...?"

மறுநாள் உம்மா என்னிடம் கேட்க, என்ன சொல்லிச் சமாளிப்பது என்று எனக்குத் தெரியவில்லை.

"எல்லாம் எனக்குத் தெரியுண்டா. மோதிரம் செய்யலேன்னுதானே. உம் முனுட்டு நடக்குறா...? பொண்டாட்டி பேச்சக் கேட்டு ஆடினா இப்பிடித்தா... என்

ஃபிர்தௌஸ் ராஜகுமாரன்



னால முடியறதைத்தான் செய்வேன்னு ஏன் அடிச்சுப் பேச மாட்டேங்குறே... அவ, உம்மாவுக்கு மோதிரம்தான் போடணும்னு என்ன அவ்வளவு பிடிவாதம் அவளுக்கு? காசென்ன இங்க கொட்டியா கெடக்குது...? குடும்ப நெலைமைய அனுசரிக்காம என்ன இவ பொம்பள...?'' உம்மா பேசிக் கொண்டே போக, மேலும் ஒரு பெரிய வலை என்னைச் சுற்றி இறுகுவதை உணர்ந்தேன்.



''நீங்க குழப்பமா பேசறதா பேசிக் கிறாங்களே...?''

''எதிரிக்கு எதிரிக்கு எதிரி எனக்கும் எதிரிதான்னு சொன்னேன்.... இதுல என்ன குழப்பம் இருக்கு...?''

– சீர்காழி வி. ரேவதி

வேறு வழியில்லை. மறுநாள் நண்பனைப் பார்த்து குசலம் விசாரித்து... விவரங்களைச் சொல்லி தயங்கியபடி... கடன் கேட்டேன். நல்லவேளை, கிடைத்தது.

உம்மாவிடம் மோதிரத்தைக் காட்டும் போது, இவள் முகப் பூரிப்பதைக் காணத் தவறவில்லை நான்.

''ஒருநாளுக்கு முன்னாடியே நாமெல்லாம் கல்யாணத்துக்குப் போலாம்னு எவ்வளவு ஆசையாயிருந்தேன். பின்னயும், பின்னயும் மாமா சொல்லுச்சு, ராத்திரி மைலாஞ்சி விசேஷத்துக்கே வந்துரணும்னு...'' என்றாள் ஜென்னத், படுக்கும் போது கவலை ததும்பும் படியாக.

மோதிரம் வாங்கிய சந்தோஷம் இன்னும் அவள் முகத்தில் மிளிர்ந்து கொண்டிருப்பதைக் கவனித்தேன்.

ஞாயிறு காலை உம்மாவையும், ஜென்னத்தையும் ஊருக்குச் செல்ல பஸ் ஏற்றி விட்டேன்.

''மத்தியானம் ரெண்டு மணிக்குள்ள வரப் பாருங்க...''– பஸ் புறப்படும் வரை சொல்லிக் கொண்டே இருந்தாள் ஜென்னத்.

அலுவலகத்தில் எல்லோரும் பரபரப்புடன் காத்திருந்தோம்.

என்ன பூதம் கிளம்பப் போகிறதோ...? எதில் பிரச்னை வெடிக்குமோ...? எல்லோருக்குள்ளும் பயம் இருந்தது.

நேரம் செல்லச் செல்ல எனக்கு இன்னொரு கவலையும் சேர்ந்தது.

மதியம் கிளம்பி விடலாம் என்ற திட்டத்தில் மண் விழுந்து விட்டதே.

எல்லோரது முகத்திலும் எரிச்சலும் டென்ஷனும் அப்பிக் கிடந்தது.

அங்கே என்னை எவ்வளவு ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்களோ... மதியமாகி விட்டது. இனி இந்தாள் வந்து... எப்போது பேசுவது...? ச்சை!

மாலை ஐந்து மணிக்கு எம்.டி. வந்தார். எல்லோரும் அவரவர் கோப்புகளுடனும், குறிப்புகளுடனும், அறிக்கைகளுடனும் தயாரானார்கள். ரிஜிஸ்தர்களையெல்லாம் மீண்டும் ஒருமுறை புரட்டிக் கொண்டிருந்தார் கண்காணிப்பாளர்.

''எப்படியும் ஏழு மணியாயிடும்...'' மாலதி முணுமுணுத்தாள் சலிப்புடன்.

முந்திரிப் பருப்பு பிஸ்கெட், காப்பி எல்லாம் உள்ளே போனது.

5.20க்கு எம்.டி. கிளம்பி விட்டார்!

''என்னாச்சு... ரிவ்யூ இல்லையா...?''

''எங்கே கிளம்பிட்டாரு... மறுபடி வருவாரா... காத்திருக்கணுமா...?''

ஆளாளுக்கு கேட்டார்கள். வியப்பும் மகிழ்ச்சியுமாக.

''ஏதோ கல்யாணத்துக்கு வந்தாராம். அப்படியே இங்கே ஒரு விசிட். அவ்வளவுதான். ரிவ்யூ முடிஞ்சாச்சு...''

எல்லா ஊழியர்களின் முகத்திலும் நிம்மதி தெரிந்தது. சந்தோஷத்துடன் வீடு திரும்ப ஆயத்தமாக –

நான் நிம்மதியிழந்தவனாக எரிச்சல் மேலிட என் இருக்கையில் குமைந்து கொண்டிருந்தேன் நெடுநேரம். ●

# அதிசயம்!

**வா**ழும் தமிழ் எழுத்தாளர் ஒருவரைப் பற்றிய ஒரு மணி நேர டாக்குமெண்டரிப் படம் தயாரிக்கப்பட்டிருக்கிறது என்பது இந்த நூற்றாண்டின் இறுதியில் நடந்திருக்கிற ஓர் அதிசயம்.

மலையாளத்தில் உண்டு. ஹிந்தியில், வங்காளியில் உண்டு. அநேக உலக மொழிகளில் உண்டு. தமிழ் எழுத்தாளர்களை எப்போதும் யாரும் ஒரு பொருட்டாக எடுத்துக் கொள்வதில்லை.





• அசோகமித்திரன்



• சா. கந்தசாமி

முதல் முறையாக அசோகமித்திரனைப் பற்றிய ஒரு டாகுமெண்டரிப் படத்தைத் தயாரித்திருக்கிறார் சா. கந்தசாமி. இதுவும் ஒரு வித்தியாசம்தான். ஓர் எழுத்தாளரைப் பற்றி இன்னொரு எழுத்தாளர் அக்கறையுடன் இப்படியொரு காரியம் செய்திருப்பது.

அண்ணா சாலையிலுள்ள புக் பாயின்ட் அரங்கில் திரையிடப்பட்ட இந்த டாகுமெண்டரி படம், அசோகமித்திரன் என்கிற படைப்பாளியின் ஆடம்பரமற்ற, எளிய கலையுள்ளத்தை வெளிக்காட்டுவதில் முழு வெற்றி கண்டிருக்கிறது.

"நம்பகத்தன்மை, சுவாரஸ்யம் – இந்த இரண்டுதான் எழுத்துக்கு அடிப்படையான தேவைகள்" என்று கூறுகிறார் அசோகமித்திரன்.

அவரைப் பற்றிய இந்த செய்திப் படத்திலும் இந்த இரண்டும் காணக் கிடைப்பது மகிழ்ச்சியான விஷயம். சொல்லப் போனால், ஒரு டாக்குமெண்டரியை, திரைப்படம் அளவுக்கு சுவாரஸ்யமாக எடுக்க முடியும் என்று நிரூபித்திருக்கும் கந்தசாமி, முழுநேர எழுத்தாளர்தானே தவிர, முழுநேர டாகுமெண்டரி இயக்குநர் அல்ல!

தமது இளமைப் பருவத்தில் செகந்திராபாத்தில் வசித்த அனுபவம் பற்றிச் சில குறிப்புகள் சொல்கிறார் அசோகமித்திரன். நிஜாம் சமஸ்தானத்தில் வசித்த நாட்களில் நிகழ்ந்த கலவரங்களை, அரசியல் மாறுதல்களை உள்வாங்குவதில் அவருக்குச் சிரமம் இருக்கவில்லை. ஆனால், அதன் கலை வடிவைக் கண்டடைய (18 வது அட்சக்கோடு) தாம் சுமார் முப்பதாண்டுகள் காத்திருக்க வேண்டி வந்ததைக் குறிப்பிடுகிறார்.

படத்தில், அசோகமித்திரனின் 'பூனை' கதையைத் திருப்பூர் கிருஷ்ணன் படிக்கிற நேர்த்தி, ஞாநியும் ராஜகோபாலனும் கந்தசாமியும் அவரை பேட்டி காண்கிற விதம், மிகச் சில ஷாட்களில் படமாக்கப்பட்டிருக்கும் அவரது 'தேசம்' கதையின் டெலி வடிவம் என ஒவ்வொரு அம்சத்திலும் தனிக் கவனம் செலுத்தியிருக்கிறார்கள்.

உலக எழுத்தாளர்கள், பல இந்திய எழுத்தாளர்களுடன் தமது உறவு பற்றியெல்லாம் அசோகமித்திரன் இதில் பேசியிருக்கிறார்.

வாசகர்களுடனான உறவு எப்படி என்கிற அம்சத்தையும் சேர்த்திருக்க வேண்டும். தாம் ஒன்றும் பிரபலமான எழுத்தாளரில்லை என்று அசோகமித்திரனே சொல்லியிருப்பதை விட, சில வாசகர்களிடம் கருத்துக் கேட்டிருக்கலாம்.

பெரும்பான்மை வாசகர்களுக்கு அவரைத் தெரியாதெனில் அதற்கான காரணமும் வெளிப்பட்டிருக்கும்.

— ஔரங்கசீப்

# டுப்பியின் குடும்பம்

அலமு, அரஸ்

மின்சாரக் கண்ணா!

நிறுத்து! சகிக்கலை!

பயங்கரம்! டுப்பி, தூக்கி எறி இந்தச் சட்டையை!

கர்மம்! கர்மம்!

நாளைக்கு மாட்னி படையப்பா...

அப்பா பாக்கெட்ல படை யப்பா டிக்கெட்!

அவர் வழி தனி வழி!

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager; Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax : 2345621
Annual Subscription : India Rs. 250/-; Overseas Rs. 1900/- (Air Mail)
Half Yearly Subscription : India Rs. 125/-; Overseas Rs. 950/- (Air Mail)

